திருஞானமுத்திரைக் கோர்வை எண்: 29



## கம்ப ராமாயணம்

# உத்தர காண்டம்

(ஆழ்வார்திருநகரிச் சுவடிகளின்படி)






வெளியீடு:-

[illegible]]  17—2—1968  [விலை ரூ. 3—50

ஸ்ரீ:

திருஞானமுத்திரைக்கோவை எண்:- 30

# கம்பராமாயணம்

(ஆழ்வார்திருநகரிச் சுவடியின்படி)

# உத்தர காண்டம்

முன்னாட் "செந்தமிழ்" பத்திராசிரியரும்
அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆராய்ச்சித்துறை
விரிவுரையாளராயிருந்தவருமான
ஸ்ரீ உ. வே. T. K. இராமாநுஜையங்கார் ஸ்வாமி
பரிசோதித்தது

பதிப்பாசிரியர்:
பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸையங்கார்

திருஞானமுத்திரைப் பிரசுராலயம்
ஆழ்வார்திருநகரி

காப்பிரைட்] 11—1—1968 [விலை ரு. 3-50



(அடியேனுடைய பரமாசாரியரான)

ஸ்ரீ வானமாமலை சின்னக்கலியன் ராமானுஜ ஜீயர்

25–வது பட்டம்

(பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாசன், பதிப்பாசிரியன்,
திருஞானமுத்திரைப் பிரசுராலயம், ஆழ்வார்திருநகரி.)

ஸ்ரீ:

ராஷ்டிர வித்வான் (ஜனாதிபதி விருது)

SRI JAGADACHARYA SIMMASANADI PATHI

SRI. KANCHI P. B. ANNANGARACHARIYA SWAMI.

PRINCIPAL VEDAVEDDANTA VIJAYANTI

EDITOR: Sanskrit, Hindi. Telugu, & Tamil Monthly Jousinals

KANCHEEPURAM - 3.

CAMP. MADRAS. 1—1—1968.

ஸ்ரீ. உ. வே, பெரியன் ஸ்ரீநிவாஸையங்காருக்கு விண்ணப்பம். உபயகுசலம்

உம்முடைய அன்பளிப்பான நூல்கள் சென்னிக்கு மலர்ந்த பூக்களாயின. வைணவ உலகுக்கு நீர் செய்துவரும் பேருதவிகள் கைமாறிலாதன,

உம்மைச் சந்தித்தும் ஆழ்வாரைச் சேவித்தும் பல வருடங்களாயின. நாளது மாசி விசாகத்திற்கு வந்து சேவிக்க அவாவுள்ளது. ஆழ்வார் தலைக்கட்டி வைக்க வேணும். (True Copy)

அன்பன்

(ஒப்பம்) ப்ர. அண்ணங்கராசார்யர்

# பதிப்புரை

பாராத கல்விப் ப்ரபந்தப் பொருளனைத்தும்
நேராக முன்வந்து நிற்குமே — பேராது
தேவிறு கொண்ட திருமாலை முத்தமிழ்தேர்
நாவிற லைத்துதித்த நாள்.

*ஸ்ரீமந் நாராயணன் சாதுஜன பரிபாலனார்த்தம் அவதரித்த திரு அவதாரங்களில் இராமாவதாரத்தையே யாவரும் பெரிதும் உவந்து பேசுவர். இராமாவதாரம், மானிடராயுள்ளோர் கற்று ஒழுகவேண்டிய அற நெறிகளை அனுட்டித்துக் காட்டியருளுவது. ஆதலாலேதான் வேதம் தமிழ் செய்த வித்தகனும், 'கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ' என அருளியுள்ளார். அவர், 'சரராமனுனபொழுது ஓர் முனிவர்ல் இலக்குவனை நீ முகத்து முன் நிலேல் முனம் குருகைபோய் இனி தாய் அடர்ந்த புளியாவை நின்கண் வருவாம் பின்' என்ற (சடகோப திவ்ய சரித்திர) உரைப்படியே இங்கு குருகூரில் (ஆழ்வார் திருநகரியில்) நம்மாழ்வாராக அவதரித்தருளினர். வடமொழியில் வால்மீகி முனிவர் செய்தருளிய தன் கதையை மிதிலைச்செல்வி திருவயிறு வாய்த்த மக்கள் (குச லவர்கள்) செம்பவளத் திரள் வாயால் கேட்டு உவந்தபடி உலகம் கற்றறிந்து உய்யும்படியாயிற்று.*

அதேபோல் பிற்காலமக்களும் அறிந்து உய்யும்வண்ணம் திராவிட (தென்) மொழியில் அவ்விராமபிரான் அமிசமான நம்மாழ்வாரும் கேட்டருளத் திருவுள்ளம்பற்றினூர்போலும். வைணவ அடியாரான கம்பரும், வால்மீகி போன்ற வடமொழிப் பக்தர்களும் ஆழ்வார்களும் பாடியநுபவித்துப் பரவசமான இராம காதையைக் கேட்போர் உவந்து பரவசமடைந்து உஜ்ஜீவிக்கும்படி இயற்றியருளினூர்.

அன்றியும், நம்மாழ்வார் பெருமைகளைக் கூறும் அந்தாதியையும் இயற்றித் திருக்குருகூர் வந்து ஆழ்வார் திருவோலக்கத்தில் அரங்கேற்றியுள்ளார். அதைக் கேட்டு உவந்த ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியார், இந்த அரங்கேற்றிய தினத்திலேயே ஒவ்வொரு ஆண்டிலும் பொலிந்துநின்றபிரான், நம்மாழ்வார், மற்றைய ஆழ்வார்கள், எம்பெருமானூர் முதலிய ஆசார்யர்கள், ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியார் திருவோலக்கத்தில் அர்ச்சகர்களால் இவ்வந்தாதி சேவித்துவர ஏற்பாடுசெய்துவைத்தரர்கள். கம்பர் செய்த இவ்வந்தாதியைக் 'கம்பனந்தாதி' என்றே கூறிவரலாயினர். இவர் செய்த இராமாயணமும்'கம்பராமாயணம்'என வழங்கலாயிற்று.

இவர், இவ்வூரில் நம்மாழ்வாருக்குச் சேவை சாதித்துக்கொண்டிருக்கும் மூலவர் ஆதிநாதரிடம் மிகவும் ஈடுபாடுடையவராய் 'ஆதிநாதரவ ரெம்மறிவினுக்கறிவரோ' எனவும் ஆரண்ய காண்டத்தில் கூறுவது நோக்கத்தக்கது. தான் இத்திவ்யதேசத்தில் நித்யவாசம் செய்து பெரியோர்களின் கிருபைக்குப் பாத்திரமானதையும் அந்தாதியில் கூறுகிறூர்.

கம்பராமாயணச்சுவடி நம்மாழ்வார் சந்நிதியில் ரேவதி நட்சத்திரத்தில் எழுதி முடிந்ததாக உள்ளது. நம்மாழ்வாருக்கு வழிவழி தொண்டு பூண்டொழுகும் குலத்தில் ரேவதி நட்சத்திரத்தில் ஜனித்த அடியேனையும் ஒருபொருளாகக் கொண்டு இவ்வூர்ச் சுவடிகளில் உள்ளபடி கம்பராமாயணத்தொடு தொடர்புடைய உத்தரகாண்டத்தையும், பிறநூல்களையும் வெளிப்படுத்த அருளிய அவரது அபார கருணையை நினைக்குந்தோறும் உருகுகிறேன். அடியேனுடைய குலப்பெரியோர் செய்த பாக்யமும் ஆசாரியாநுக்ரகமும் தான் இவ்வாறு தலைக்கட்டிவைத்ததுபோலும்.

அடியேனுடைய பிரார்த்தனைக்குத் திருவுள்ளம் பற்றிப் பற்பல வெளியீடுகளைச் செவ்வனே பரிசோதித்தனுக்ரகித்து உதவியது போல் உத்தரகாண்டத்தையும் பரிசோதித்து அரிய பெரிய முன்னுரையுடன் என் பெற்றோர்க்குள்ள உரிமையுரையும் ஆக்கித்தந்தருளிய ஸ்ரீ உ. வே. T. K. இராமாநுஜையங்கார் ஸ்வாமிக்கு நானும், என குடும்பமும் என்றும் கடப்பாடுடையவர்களாவோம்.

இப்பதிப்பு ஆசை ஒன்றே துணையாக நிறைவேறியது. ஆதலால் இதிற் காணும் பிழைகளைத் திருத்திக்கொள்ளும்படி அறிஞர்களை வேண்டுகிறேன்.

பெரியன்,

**வெ. நா. ஸ்ரீநிவாஸன்.**

*1—1—1968.*

ஸ்ரீ

# உத்தரகாண்டம்

## முன்னுரை

உயர்வற வுயர்நலம் உடையவனும் அயர்வறும் அமரர்கள் அதிபதியுமான பகவான், தீயோர் அழிவுற, நல்லோர் நலமுற, உலகம் செந்நெறிச் சென்று உய்திபெற, அறம் நிலைபெற, அவ்வப் போது அவதரித்தருளுவன். அவ் அவதாரங்களுள் இராமாவ தாரமும் கிருஷ்ணாவதாரமும் தனிச்சிறப்புடையவை. வேதப்ரதி பாத்யனான திருமால் இராமனாக அவதரித்த அளவில், திருமகள் சீதாபிராட்டியாக அவதரித்தனள்; வேதம் இராமாயணமாக அவதரித்தது என்பர் பெரியோர். இராமசரிதம் விரித்துரைக்க எழுந்த இராமாயணம், தேவர் சிறை நீங்கத் தான் சிறையிருந்த பிராட்டியின் பெருமை பேசுவதாகவும் அமைந்தது.

பிரமதேவர் அருளால் நாரதபகவானிடம் உபதேசம் பெற்ற வான்மீகி முனிவர் முதன்முதலில் வடமொழியில் இராமாய ணத்தை இயற்றியருளினார். அதனால் அவருக்கு ஆதிகவி என் னும் பெயர் வழங்கலாயிற்று. அது பாலகாண்டம் முதலாக உத்தரகாண்டம் இறுதியாக ஏழு காண்டங்களில் நிறைவுறுகிறது. வான்மீகத்தைத் தழுவியெழுந்த வடமொழி ராமசரிதங்கள் மிகப் பல. இராமசரிதம் பேசாத மொழிகள் இல்லை. ஒவ்வொரு மொழியிலும் பலப்பல இராமசரித நூல்கள் உள்ளன.

தென்மொழியில் பழைய சங்க நூல்களிலும் உரைகளிலும் இராமசரிதக் குறிப்புக்கள் ஆங்காங்குக் காணக்கிடைக்கின்றன. அவற்றை உற்று நோக்குமிடத்து இராமசரிதத்தை முறைப்படத் தொடுத்த செய்யுளுருவில் அமைந்த பழைய தமிழ் நூல்களும் இருந்திருக்கவேண்டுமென்று தோன்றுகிறது. அன்றியும், பகவா னுடைய அர்ச்சாவதார விஷயமாய் அவதரித்த தமிழ்மறையான ஆழ்வார்களுடைய அருளிச்செயல் பாசுரங்களிலும் இராமசரிதக் குறிப்புக்கள் பரக்கக் காணப்படுகின்றன. மேலும், குலசேகராழ் வார் அருளிய பெருமாள் திருமொழியின் முடிவில் "தில்லைநகர்த் திருச்சித்திரகூடத்துச் செங்கண்மால் தொல் இராமனாய்த் தோன்றிய கதைமுறை" என்னும் தலைப்புடன், 'அங்கணெடுமதிள் புடைசூழ் அயோத்தி' என்னும் தொடக்கம் உள்ள பதிகம், இராம பிரான் அவதாரம் முதல் அப்பெருமான் தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளியதுவரை உள்ள நிகழ்ச்சிகளைத் தொகுத்துரைப்ப தாயும் அமைந்திருத்தல் நோக்கத்தக்கது. இவற்றின் விரியாய்க் கவிச்சக்கரவர்த்தி கம்பர் இயற்றியருளிய இராமாவதார மென்னும் பாரகாவியம், ஒப்புயர்வற்றது. முத்தமிழ்க் காப்பிய மாகவும் திகழ்வது. இதனை முதனூலாகக் கொண்டு எழுந்த வழி நூல்கள் பல. அவற்றுள், பாலபாரதியார் இயற்றிய இராமஜயம் என்று வழங்கும் இராமாயணத் திருப்புகழ், இசைத் தமிழ் நூலாகும்; அருணாசலகவி இயற்றிய இராமநாடகம் நாடகத் தமிழ்நூலாகும். தமிழில் மேலும் பல இராமசரிதநூல்கள்உண்டு.

கம்பர் இயற்றிய இராமாவதார நூல், பால காண்டம் முதல் யுத்தகாண்டம் முடியவுள்ள ஆறுகாண்டங்களில் முற்றிநிற்கிறது. கம்பர் உத்தரகாண்டம் இயற்றவில்லையா? அன்றிஅவர் இயற்றிய உத்தரகாண்டம் அகப்படவில்லையா? கம்பராமாயண யுத்தகாண்டத்தைத் தொடர்ந்து ஏட்டுச் சுவடிகளிலும் அச்சுப் புத்தகங்களிலும் காணப்படும் உத்தரகாண்டம், கடவுள் வாழ்த்தும் அவையடக்கமும் முன்னே கொண்டு நடத்தலால் அது வேறு ஒருவர் செய்த தனி நூலாகக் கொள்ளத்தக்கதாயிருக்கிறது. இதனையியற்றியவர் பெயர் முதலிய விவரம் ஒன்றும் தெரியவில்லை இதன் செய்யுணடையமைதி கம்பர் இயற்றியதாக இதனைக் கொள்ள இடம் தரவில்லை. ஒட்டக்கூத்தரியற்றிய இராமாயண உத்தரகாண்டத்தைக் கம்பர் தாம் இயற்றிய யுத்தகாண்டம் முடியவுள்ள இராமாயணத்துடன் இணைத்துத் தம் நூலை முற்றுவித்துக்கொண்டனர்என்று விநோதரசமஞ்சரிகூறுகிறது. கம்பரும் ஒட்டக்கூத்தரும் வேறுவேறுகாலத்துவாழ்ந்தவராதலின் விநோதரசமஞ்சரி கூறுவது பொருந்தாது என்பர் ஆராய்ச்சியாளர்.

ஆழ்வார்திருநகரி ஏட்டுச் சுவடிகளிலும், 1914-ஆம் ஆண்டு ம. சண்முகம்பிள்ளையவர்கள் பரிசோதித்த பிரதிக்கிணங்க அமரம்பேடு இரங்கஸாமி முதலியார் வெளியிட்டுள்ள புத்தகத்திலும் இவ்வுத்தரகாண்டம், கவிச் சக்கரவர்த்தி கம்பநாட்டாழ்வார் இயற்றியருளிய ஸ்ரீமத்கம்பராமாயணம் ஏழாவது உத்தரகாண்டம் என்ற தலைப்புடன் பாயிரம் முன்னாக, திருவோலக்கப்படலம் முதலிய 17படலங்களில் 1510பாடல்களில் முற்றுப்பெற்றுள்ளது அதற்குமுன் அச்சிட்ட பிரதியில் 12 படலமும் 1390 திருவிருத்தமும் உடையதாய் முற்றுப்பெற்றுள்ளது. இவ்வாறு படலங்களும் செய்யுட்களும் மிக்கும் குறைந்தும் உள்ளமை காணநேர்ந்தபோது ஆழ்வார்திருநகரி ஏட்டுச்சுவடிகளிலுள்ள ‘கரை பொரு காண்டம் ஏழு’ என்று தொடங்கும் இராமாயணத் தொகைக்கவி நினைவுக்கு வந்தது. இத்தொகைக்கவி, இவ்வுத்தர காண்டத்தின் முடிவில் பதிக்கப்பட்டுள்ளது. அதைக் கொண்டு நோக்கியபோது கம்பராமாயணத்துடன் உத்தர காண்டத்தையும் சேர்த்தே, காண்டம் படலம் கதை போர் சந்தம் விருத்தம் என்பவற்றின் எண்கள் வரையறை செய்து கூறப்பட்டிருப்பது தெரிந்தது.

உத்தரகாண்டம் வேறொருவர், செய்ததாயினும் அச்சுப்பிரதிகளிலும், ஆழ்வார்திருநகரிக் கம்பராமாயணச் சுவடிகளிலும் கம்பராமாயண யுத்தகாண்டத்தோடு தொடர்ந்து எழுதப்பட்டிருத்தலால், ஆழ்வார்திருநகரிச் சுவடிகளிற் கண்டபடி கம்பராமாயணத்தை வெளியிட்டுவந்த திருஞான முத்திரைப் பிரசுராலயத்தார், யுத்தகாண்டத்தின் தொடர்பாக இப்பொழுது உத்தர காண்டத்தையும் வெளியிடுவாராயினர். இவ்வுத்தர காண்டம் பாயிரத்தோடு கோத்திரப்படலம் முதல் வைகுந்தப்படலம்

இறுதியாகப் பலசுருதியுள்பட 31படலத்தில் 1528 செய்யுட்களில் முற்றுப் பெறுகிறது. இவ்வமைப்பே மேற்குறித்த தொகைக் கவியோடு பொருந்தியமைதல் நோக்கத்தகும்.

ஆழ்வார்திருநகரிச் சுவடிகள் திருந்திய நிலையில் அமைந்து தமிழ்நூற்பதிப்புக்களுக்குப் பெரிதும் உதவி, மஹாமஹோபாத்யாய உ.வே. சாமிநாதையரவர்கள்முதலிய புலவர்பெருமக்களால் பாராட்டப்பட்டிருப்பது உலகம் அறிந்ததே.

இப்பதிப்புக்கு மூலமான ஆழ்வார்திருநகரி ஏட்டுச்சுவடி இராமாயணம் திருவேங்கடதாசர் பல பிரதேசங்களிலிருந்து பெற்ற 49 கம்பராமாயணச் சுவடிகளை வைத்துக்கொண்டு கொல்லம் ஆண்டு 918 முதல் 953 வரை பாடம் சரிபார்த்துத் திருத்திய ஏடுபார்த்து எழுதத்தொடங்கிக் கொல்லம் ஆண்டு968 பிரமாதீச ஞூ ஆனி மீ 21 வ சோம வாரம் ரேவதீ நக்ஷத்ரம் கூடிய சுப தினத்தில் சுவாமி நம்மாழ்வார் சந்நிதியிலிருந்து எழுதி முடிக்கப் பட்டது. [இத் திருவேங்கடதாசர், தமிழ்ப்புலமை நிரம்பியவர்; சேஷ கவியியற்றிய பராங்குச நாடகம், இவர் சரி பார்த்து அரங்கேற்றப் பட்டது. மாறன் கோவைக்குச் சிறப்புப்பாயிரம் இயற்றித்தந்தவர்.]

இனி இவ்வுத்தரகாண்ட நூலமைதியினையும் சிறிது நொக்குதல் தகும். இதனையியற்றிய ஆசிரியர் பெயர் முதலியவை தெரியவில்லையெனினும், அவர் வடமொழி தென்மொழியறிவும், கம்பர் காவியத்திலும் ஆழ்வார்களுடைய அருளிச் செயற் பாசுரங்களிலும் மிக்க ஈடுபாடும், பயிற்சியும், பிற தமிழ்நூலறிவும் உடையவரென்பது அவர் ஆளும் சொற்களாலும் தொடர்களாலும் கவிகளாலும் நன்கு புலனாகும்.

இவர் அவையடக்கத்துள்: ''பால்காட்டும் இன்சொல் முனிபா வழி காட்ட வேத நூல் காட்டு இராம கதைமேற் றமிழ் நூற்கலுற்றேன்'' என்பது கொண்டு, வான்மீகம் இதற்கு முதனூல் என்று அறியலாம். அன்றியும்,

''நமன்தம ராயினூர்பால் நண்ணிடா நாமன் (யாகப். 21)

''மாவிரிநீர்க் கடல் சூழ்ந்த மண்ணுலகில் மனிதராய்ப் பிறக்கப்பெற்று, நாவினையும் பெற்று நமோ நாராயணாய நமவென்னமாட்டாப் பாவியரும் பலதெய்வம் பழித்துரைக்கும் பாதகரும்'' (இயமன்மேற்செல்படலம் 14) என்னும் ஆசிரியர் கூற்றுக்கள்,

'' 'நமனும் முற்கலனும் பேச நரகில் நின்றார்கள் கேட்க
நரகமே சுவர்க்கமாகும் நாமங்கள் உடைய நம்பி'' (திருமாலை 12)

“திறம்பேல்மின் கண்டீர் திருவடிதன் நாமம்
மறந்தும் புறந்தொழா மாந்தர்—இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்கள்', என்றான் நமனும் தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு'' (நான்முகன்திருவந்தாதி 68)

என்னும் ஆழ்வார்கள் பாசுரங்களையும்

"செல்வனே இன்னும் கேளாய் யான் தெரி பாசக்கையால்
வல்எனும் அரக்கர் தம்மை வம்மினென் றழைத்து மெல்ல
நல்லிதழ்ப் பரவை மேனி நாயகன் தமரைக் கண்டால்
மெல்லவே போமின் என்று விடுக்குவன் செவியிற் செப்பி"

(யுத்த. வசந்தன் உயிர்பெறுபடலம் 21) என்னும் கம்பர் கூற்றை யும் தழுவியமைந்தமை காணலாம்.

மேலும் ஆசிரியர், 'திருமணி மார்பன் தன்திருநெற்றித் திகழ் திரு நாமமும் சாத்தி' (யாகப்படலம் 68) என்று கூறுவது,

"என்று நான்முகன்முதல் யாரும் யாவையும்
நின்றபே ரிருவினை நீக்கி நீணெறி
சென்று மீளாக்குறி சேரச் சேர்த்திடும்
தன்திரு நாமத்தைத் தானும் சாத்தியே". (பால.கடிமணப். 67)

என்னும் கம்பர் வாக்கைத் தழுவி அமைந்ததாயிருக்கிறது இவற்றால் இவ்வுத்தரகாண்ட நூலாசிரியர் வழிவழி வந்த பரம வைணவர் என்று தெரிகிறது.

மேலும் ஆசிரியர் நால்வகைப்படைகளையும் கூறுமிடத்து, கச ரத துரக பதாதி என்றே நிரல்படக் கூறுவர். இதனை இவ்வுத் தர காண்டத்துத் தேவர்கள்மேற்செல்படலம் 9ஆம் பாடலாலும், குமாரர் முடிசூட்டுபடலம் 6 முதல் 12 வரை உள்ள பாடல்க ளாலும் அறியலாம். இம்முறைவைப்பு, 'கசரததுரகமாக் கடல் கொள் காவலன்' (பால. திருவவதாரப். 21) என்னும் கம்பர் கூற்றைத் தழுவியமைந்தது. அன்றியும்,

"கண்ணிலான் பெற்றிழந்தான் என உன்னைப் பெற்றிழந்து காந்திப்பொங்கும்
புண்ணில் நாராசத்தைப் புடைத்தனைய இத்துயரம்"(சம்புவதை. 18) என்பது,

"எண்ணிலா வருங்குணத்தான் இயம்பியசொல் மருமத்தின் எறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையிற் கனல் நுழைந்தாலெனச் செவியிற் புகுதலோடும்
உண்ணிலாவிய துயரம் பிடித்துந்த ஆருயிர்நின் றூசலாடக்
கண்ணிலான் பெற்றிழந்தான் என உழந்தான் கடுந்துயரங் காலவேலான்"
(பால. கையடைப் 11) என்பதனையும்.

'வண்ணமா முகிலோ மையோ மரகத வடிவோ வள்ளல் ஒண்ணிறம்'
(யாகப். 83) என்பது, 'மையோ மரகதமோமறிகடலோ மழைமுகிலோ'
(அயோத்தியா. கங்கைப். 1) என்பதனையும்,

"கனக்கரு நிறத்தினேன்என் கண்வழி புகுந்து வந்தென்
மனத்திடைப் புகுந்தான் வந்த வழி அவன் போகில் பின்னை
எனக்கவன் பிடிதாரான் என்று இமைக்கதவடைத்து ஓர் ஏழை
நினைத்ததுமுடித்தேன்என்னுநெடுநிலைமாடம் புக்காள்",(யாகப்.89என்பது),

"மைக்கருங் கூந்தற் செவ்வாய் வாணுதல் ஒருத்தி யுள்ளம்
நெக்கென உருகுகின்றாள், நெஞ்சிடை வஞ்சன் வந்து
புக்கனன் ஏகாவண்ணம் கண்ணெனும் புலங்கொள் வாயில்
சிக்கென அடைத்துத் தோழீ சேருதும்அமளி யென்றாள்" (பால
உலாவியருள் படலம் 14) என்பதனையும்,

"எனக்குநீ செயஇருந்த இக்கடன் நான் உன்னிற்பின் இருந்து பிள்ளாய்
உனக்கு நான் செய்யவே அஞ்சினேன்" (சம்புவதை. 17) என்பது,

" எனக்கு நீ செய்யத் தக்க கடனெலாம் இரங்கி யேங்கி
உனக்கு நான் செய்வதானேன்" (யுத்த,இராவணன்சோகப். 39)

என்பதனையும் தழுவியமைந்தமை காணலாம்.

மேலும், 'இவையென்ன நியாயங்கள், (அனுமன் பிறப்புப் படலம். 17) எனத், திருவாய்மொழி 7ஆம் பத்து 8ஆம் திருவாய் மொழி முதற்பாசுரத்தின் ஈற்றடிப்பகுதியை அப்படியே எடுத்தாண்டிருப்பதும் நோக்கத்தகும்.

மற்றும் யாகப்படலத்தில் 164 முதல் 270 வரை குசலவர் கானம் செய்வதாய் அமைந்த பாடல்கள், இராம கதையின் சங்கிரகமாயும் பாராயணஞ் செய்தற் கேற்றதாயும் இனியதாயும் இருத்தல் படித்து மகிழத் தக்கது.

இன்னும் அனுமன்பிறப்புப்படலத்தில் சிறந்த சந்தம் அமைந்த முதல் எட்டுப் பாடல்களும், யாகப்படலத்தில் நகைச் சுவையமைந்த 114-ம் பாடல் முதலியனவும், இன்னோரன்ன பிறவும் படித்துப் படித்து மகிழத்தக்கனவாயுள்ளன.

அன்றியும், உவமை, எடுத்துக்காட்டுவமை, வேற்றுப்பொருள் வைப்பு முதலிய அணியமைதியுடையனவும் அறநெறிகளை விரிப் பனவுமான பாடல்கள் இக்காண்டத்துள் ஆங்காங்கு விரவி யுள்ளன. அவையெல்லாம் எடுத்து விரிக்கிற் பல்கும்.

மேலும், இரக்கியுங்கோள், இஞ்சை, அனந்தபோகம், பாவ காரியர், குத்துவாதை, ஆத்தவாக்கியம், தயா, குவிதன், சோபம், அனீகவீரர், நகரி, சராசரம், நிராமயம், விஜயம், தராபதி, தியானபரவசன், மூத்திரபுரீடம், காத்திரம், காமபோகம், இரணியகெர்ப்பன், ஆசுரபாவம், இந்திரியசித்தர், விக்கிரமவான், திரியக்கியோனிகள், பாவநாசன், சபாவிருத்தர், காந்தவர்: என்பன இவர் வாக்கிற் பயின்ற வடசொற்கள்.

மற்றும், 'சிறுவனைப்போட்டு' (அரக்கர் பிறப்புப். 10), 'நன்மை யும் தின்மையும்' (சீதை வனம்புகு படலம் 35), 'விரோதம்பண்ணி' (இராசநீதிப். 6), அத்தனைவரையும், 'இத்தை நீ' (இராசநீதிப். 44), 'இதுக்கு முன்பு' (சம்புவதைப் 25), 'இவையிற்றால்', (யாகப். 271), 'வசுக்களில் எண்மர்ஆவோன்' (தேவர்கள்மேற்செல்.16), 'மறுத்தி யன்று' (யாகப். 167) என்பன இவர்வாக்கில் பயின்ற சாமானிய மான தொடர்கள்,

மேலும், 'இராவணன்தன் அவதாரமும்', 'அங்கவள்தன் மணி வயிற்றில் அவதரித்தாள் இவள் மண்டோதரி' (இராவணாதியர் பிறப்புப். 1, 59) என அரக்கர்கள் பிறப்பையும் இவர் அவதாரம் என்று கூறுவர்.

யாகப்படலத்து 136ஆம் செய்யுள் வேறு பிரதிகொண்டு திருத்திக்கொள்ளத்தக்கதாயுள்ளது.

திரு. கி. இராமாநுஜன்,
மதுரை.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## குலசேகராழ்வார் அருளிச் செய்த

# பெருமாள் திருமொழி

### 10 வது அங்கணெடுமதில்

அம்பொனெடு மணிமாட அயோத்தி யெய்தி
அரசெய்தி அகத்தியன்வாய்த் தான்முன் கொன்றான்
தன்பெருந்தொல் கதைகேட்டு மிதிலைச்செல்வி
உலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள்
செம்பவளத் திரள்வாய்த்தன் சரிதை கேட்டான்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள்
எம்பெருமான் தன்சரிதை செவியால் கண்ணால்
பருகுவோம் இன்னமுதம் மதியோமன்றே. (8)

செறிதவச் சம்புகன்றன்னைச் சென்று கொன்று
செழுமறையோன் உயிர்மீட்டுத் தவத்தோன் ஈந்த
நிறைமணிப்பூண் அணியும்கொண் டிலவணன்தன்னைத்
தம்பியால் வானேற்றி முனிவன் வேண்டத்
திறல்விளங்கும் இலக்குவனைப் பிரிந்தான்றன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள்
உறைவானை மறவாத உள்ளந்தன்னை
உடையோம் மற் றுறுதுயரம் அடையோமன்றே. (9)

அன்று சராசரங்களை வைகுந்தத் தேற்றி
அடலரவப் பகையேறி அசுரர்தம்மை
வென்றிலங்கு மணிநெடுந்தோள் நான்கும் தோன்ற
விண்முழுதும் எதிர்வரத் தன் தாமம் மேவிச்
சென்றினிது வீற்றிருந்த அம்மான்தன்னைத்
தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள்
என்றும்நின்றான் அவன்இவன் என்று ஏத்தி நாளும்
இறைஞ்சுமினோ எப்பொழுதும் தொண்டீர் நீரே. (10)

தில்லைநகர்த் திருச்சித்ரகூடந்தன்னுள்
திறல்விளங்கும் மாருதியோடு அமர்ந்தான்றன்னை
எல்லையில்சீர்த் தயரதன்றன் மகனாய்த் தோன்றிற்
றதுமுதலாத் தன்னுலகம் புக்கதீறாக்
கொல்லியலும் படைத்தானைக் கொற்ற ஒள்வாள்
கோழியர்கோன் குடைக் குலசேகரன்சொற் செய்த
நல்லியல் இன் தமிழ்மாலை பத்தும் வல்லார்
நலந்திகழ் நாரணன் அடிக்கீழ் நண்ணுவாரே. (11)

ஆழ்வார்திருவடிகளே சரணம். ஜீயர்திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருநகரி

ஸ்வாமி ஆதிநாதராழ்வார் சந்நிதி ஸ்தானிகரும், தெற்குத் திருவேங்கட
முடையான், ஸ்ரீராமன் அழகர் சந்நிதிகளின் சொந்தக்காரருமான:-



பெரியன் தேசிகமையங்கார் என்ற
பெரியன் வெங்கிட்டநாராயணையங்கார் (1864—1925)
பத்மாஸனி ஜானகி — ஆழ்வார்திருநகரி.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# உரிமையுரை

ஆசிரியப்பா

திருமகள் கொழுநனே ஒருதனி முதலெனும்
திருவாய்மொழிப்பொருள் செகமெலாம் தெளிய
வரு மணவாள மாமுனி வரரும்
மேதகவார் சீபாடியம் விரித்துப்
பூதலம் உயக்கொள் பூதூர் வள்ளலும்
வேதம் தமிழ்செய் வித்தகக் குரிசிலும்
ஆதிநாதனும் அமர்ந் தினிதுறையும்
தலமாய், நிலமிசை விரசை எனத்திகழ்
பொருநைக் கரையிற் பொற்புடன் விளங்கும்
குருகூர்ப் பூருவ சிகையோர் குழுவுள்
மருவிய பெரியன் மரபு நனி சிறக்க
வழிவழி வணங்கிவரு குலமுதலாம்
இராம திவாகரன் இனிதருளுதலால்
ஓங்கிய பொழில் திருவேங்கடத் துறையும்
நம்பன் பெயர்கொள் நயகுணன் சுதனாப்
பங்குனி உத்தர பல்குனி நன்னாள்
வந்துதோன்றிய சுந்தரக் குரிசில்,
பெரியன் தேசிகன் எனப்புவி பேசும்
வேங்கட நாராயணப் பெயர் விமலன்,
செந்தமிழ் வளஞ்சேர் சேது நாட்டின்
முகமென ஒளிரும் முகவைமாநகர்
அந்தணர்திலகன் அருங்கலை வினோதன்
குருகூர் மருவிய ஒரு கலைக்கோயில்
ஆசானாகிய மாசாத்துவிகன்,
தராதலம் போற்றும் தமிழ்ப்பெரும் புலமை
இராகவற் பயந்த இயற்பெரும் புலவன்
சதாவதானி தமிழுடன் ஆரியம்
கன்னடமொழியும் கரைகண் டுயர்ந்த
தகவினன் முத்துசாமி வரோதயன்
தன்பாற் பயின்ற தமிழ்ப் பெரும்புலவன்
சீர்வளர் தேவராஜ பாரதிபால்
மாணவன் ஆகி வண்டமிழ் கற்றோன்,
ஆதிநாதர் ஆழ்வார் சந்நிதிக்கு
உரிய பொருள்நிறை கருவூலத்துத்
திறவுகோல் கொள் சீர்த்தானீகத்
தலைமைக் குழுவினர் தம்மில் ஒருவன்,
தேவன் தெற்குத் திருவேங்கடமுடைச்
செம்மல் அழகர் சீராமன் சந்நிதி

உரிமையாளருள்ளும் ஒருவன்,
தம் நேரில்லா முன்னோர் மகிழ்ந்து
நிதிமிக நல்க நிகழ் கட்டளைகளால்
ததியரை ஊட்டும் சதுரருள் ஒருவன்,
தேன மாம்பொழில் சீவர மங்கை
இராமாநுசமுனி இணையடி மலர்கள்
சென்னியிற் சூடி, அவர் திருக் கரத்தால்
ஆழியும் சங்கும் அளித்திடப் பெற்றோன்,
தமிழறிஞர்க்கும் தமிழ்நூல் ஆய்ந்து
பதிப்போர்தமக்கும் பாவலர் பிறர்க்கும்
ஏடும் பொருளும் ஈந்துவப்புறுவோன்,
உற்றோர்தமக்கும் அற்றோர்தமக்கும்
உண்டியும் உடையும் உவப்ப வழங்கி
இடுக்கண் தீர்க்கும் விழுத்தகு செல்வன்,
செவ்விருந்தோம்பி வருவிருந்தினரை
நோக்கியிருக்கும் நுண்மதியாளன்,
பெருநிலக்கிழவன், பேதையேன் நிகழ்த்தும்
இலக்கியப் போதுபோக் கெல்லாம் கண்டு
மனம்பெரிதுவந்து வாழ்த்திய மாண்பினன்,
ஆணை செலுத்தும் அதிகாரிகட்கும்
மாஊ உதவும் மதிவளம் படைத்தோன்
ஆகிய எந்தை அடியிணை மலரும்,
திருமால் தேவத் தானம் புரக்கும்
குழுவினில் ஒருவன், குருகூர் மாறன்
மறையுரை முதலிய வண்கலை பலவும்
ஓதியுணர்ந்தவை உற்றோர்க் குரைத்துப்
போற்றிப் புரக்கும் புண்ணியன், புல்லைத்
தெய்வச்சிலைமுகில் திருவருள் பெற்றோன்
அம்புவி புகழும் தம்பு சடகோபன்
திருமகளாகி வரு பதுமாசனி
பொற்பொடு புவிபுகல் கற்பும் மேவிய
எம்அன்னை இணையடி மலரும் என்சிரம்
மன்ன வைத்து, வளர் திருக்குருகூர்ப்
பழஞ் சுவடிகளின்படி யான் பதித்த
இராம கதையில் இந்நிலம் போற்றும்
உத்தர காண்டமாம் ஒள்ளிய மலரை
மற்றவர்க் குரிமை யாக்குவன் மகிழ்ந்தே.

பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸன்

ஸ்ரீ:
ஸ்ரீ ராமஜயம்



# கம்பராமாயணம்

## உத்தரகாண்டம்

### பாயிரம்

#### கடவுள் வாழ்த்து.

1 ஒன்ருய்ப் பலவாய் உளனுய் இலனுய் உரைப்போர்க்
கன்ருகி யாமாய் அருவாய் உருவாகி மெய்ம்மை
குன்ருத ஞானக் கொழுந்தாய்க் குணமூன் றிறந்து
நின்ருன் இயாவன் அவன்நீள்கழல் நெஞ்சில் வைப்பாம்.

#### அவையடக்கம்

2 புன்சொற்க ளேனும் புதல்வன் குதலைச்சொல் தந்தை
இன்சொற்க ளாகக் கொளல்போல் முனிஈங் குரைத்த
தென்சொற் றமிழும் வடசொல் துறையும் தெரிந்தோர்
என்சொற்கள் பொல்லா தெனினும் இகழார்கள் அன்றே.

3 இதுக்குத் தரம்அல்லதி ராம கதைப்பரப்பை
நதிக்குத் தரம்அன்னதை நன்னெறி உய்ப்ப தொன்றை
அதுக்குத் தரம்அன்னதை ஆய்பொருள் ஆய ஆய
மதிக்குத் தரம்உள்ளதை வாக்கினில் கூறல் உற்றேன்.

4 கால்காட்ட வாவென் றிருகண்ணுடை யோர்கண் முன்னே
கோல்காட்ட மெல்லக் குருடற்கு நடக்க லாம்போல்
பால்காட்டும் இன்சொல் முனிபாவழி காட்ட வேத
நூல்காட்டி ராம கதைமேல்தமிழ் நூற்கல் உற்றேன்.

#### 1. கோத்திரப் படலம்

5 கண்ணுர் உலகில் கருதார்குலக் கட்டை வாங்கித்
தண்ணுர் தருமம் தழைப்பத்தனிக் காவல் பூண்டு
மண்ணேர் வணங்க மதிவெண்குடை மேல் நிழற்ற
விண்ணேர் அடி போற்ற இராகவன் வீற்றிருந்தான்.

6 கண்கால் கரம்செங் கமலத்தடங் காடு காட்டத்
திண்கார் வரைபோல் திருமேனி திகழ்ந்து காட்டத்
தணகால் தடவத் தடம்பூண்முலைத் தைய லார்கள்
வெண்சா மரைவீ சிடவேதியர் ஆசி கூற.

7 சீரார்திருச் சோதி திரண்டொளிர் செம்பொன் மோலி
காரார்வரை மேற்கதி ரோன்எழும் காட்சி காட்ட
வாரார்தடங் கொங்கை மடந்தையர் வாட்கண் மொய்த்த
ஏரார்திரு மேனியன் றிந்திரன் மேனி ஏய்ப்ப.

8 சீரொத்த முத்தின்திகழ் நீள்வடம் சேர்ந்தசன்ன
வீரத்தொளி யானது வெள்ளை நிலாவைஒட்ட
ஆரத்தெழு செம்மணிச் சோதி அலங்கிடத்தன்
காரொத்த மேனி கருஞாயிறு போன்றுகாட்ட.

9 தடம்சேர் வலயம் தழுவும்திருத் தோள்கள் நாக
வடம்சேர் வடமந்தர மால்வரை தன்னைமானப்
படம்சேர் அரிச்செம் மணிப்பஃறலைக் கோவை கோத்த
புடம்சேர் எழில் பொன்னிற ஆடை பொலிந்திலங்க.

10 கொடிமன்னு மாடக் குலம்ஓங்கும் அயோத்தி எய்திக்
கடிமன்னு வாயிற் கடைநின்றருட் காலம் நோக்கிப்
படிமன்னி வாழும் பரமன்னிய மண்டலீகர்
முடிமன்னர் எல்லா முறையேபுகுந் தேவல் கேட்ப.

11 மூவா முனிக்கூட் டமும்முன்புமுப் பத்து மூவர்
தேவா திபருந் திருப்பாற்கடல் எய்தி எம்மைக்
காவாய் எனப்போற் றிடக்கண் துயில் நீங்கி அங்ஙன்
ஓவாது தான்வீற் றிருக்கும்படி தன்னை ஒப்ப.

12 *அந்த வேலை யதனுள் அடங்கிய
கொந்த வேல்அயில் வாட்கைக் கொடியவர்
நந்த வேலை அடங்கலும் நக்கினேன்
சந்த வேலையைச் சார்சம தக்கினி.

13 சிரத்து வாச விதழிச் சிவனைநேர்
பரத்து வாசன் வசிட்டன் பகைகெடத்
துரத்து வாசவன் மெய்க்குறி தூக்கினன்
சுரத்து வாசச் சுகம்புரி கோசிகன்.

14 காயும் தீவினைக் காசிபன் அத்திரி
தாயின் மன்னுயிர்க் கன்புடைத் தௌமியன்
தூய ஞானச் சுவத்தி முதலினோர்
நாய கன்திரு வாயிலை நண்ணினர்.

15 வாயி லோய்எம் வரவுரை என்றலும்
கோயில் எய்தி அவன்அது கூறலும்
தூய வன்புகுத் தீங்கெனச் சொல்லலும்
போய வன்புகுத் தப்புகுந் தார்அரோ.

16 புக்க அந்தப் புராண முனிவரை
மிக்கெழுந்த உவகையன் மேதினித்
தொக்க பன்மணிச் சோதி முடியுறத்
தக்க வாறடி தாழ்ந்து தராபதி.

17 ஈசன் அங்கம் எரித்திடு நாள்முதல்
கூச னங்கன் குறுகா அருந்தவ
மாச னங்கள் மகிழ்ந்தினி தேறிட
ஆச னங்கள் அருளின் அருளினன்.

18 பொருந்து மாமணி போர்த்தபொன் ஆசனத்
திருந்த அந்த இருந்தவத் தோர்களைத்
திருந்து தாமரைச் செங்கணில் நோக்கிநும்
அருந்த வங்கட் கழிவிலை யேஎன்றான்.

19 எங்க ளுக்குயிர் ஆய இருந்தவத்
துங்க ளுக்குநும் புத்திரர் பௌத்திரர்
தங்க ளுக்குமைச் சார்ந்தவர் தங்கட்கும்
அங்கெ வர்க்கும் அருந்துயர் இல்லையே.

20 சுந்த ரச்சிலை யோன்சுதை ஊறிய
அந்த அச்சொலைக் கேட்ட அருந்தவர்
தந்தம் உள்ளத் துவகை தழைத்திட
இந்த வார்த்தை இராமற்கி யம்பினர்.

21 *கும்பன்நிகும்பன் அகம்பன்மனம் கும்பும்வெம்போர் அதிகாயன்
உம்பர் உலகு கம்பம்செய் கும்ப கன்னன் உலகனைத்துந்
தம்ப மாய நம்பன்வரை சாய்த்த மொய்ம்பன் தசக்கிரிவன்
இம்பர் உலகு தென்புலமேற் றம்பன் விகடன் என்றிவரும்.

22 தீய ராய கராதியரும் தேவாந் தகனும் நராந்தகனும
மாயை வல்ல மகோதரனும் மற்று ளோருங் களத்தவியப்
பேயும் நாயும் அவர்உடலம் பிச்சுத் தின்னச் சரந்தொட்ட
தூய வில்லி நீஇருப்பத் துயரம் உண்டோ எமக்கினியே.

23 மூவராலும் மற்றொழிந்த முனிவராலும் மூவுலகத்
தியாவராலும் வெலற்கரிய எல்லா மாயை களும்வல்லோன்
தேவராயன் தனைப்பற்றிச் சிறையில் இட்ட இராவணியாம்
பாவகாரி சிரம்அரிந்தோன் இருக்க எமக்குப் பயம்உண்டோ.

24 என்று முனிவர் தாங்கூற இராமன்கூறும் ஓர்இரண்டு
குன்று போலும் திரள்புயத்துக் கும்பகன்னன் முதலானோர்
வென்றி கூறு திராவணிதன் வீர நீர்கூ றியவாறென்
அன்றுசிவன்பால் அவன்பெற்ற வரமும்வலியும் அவன்பிறப்பும்.

25 இரக்கம்இல்லா வன்னெஞ்சத் தெலல்மாயை களும்வல்ல
அரக்கர்பிறப்பும் அவர்பெற்ற வரமும்வலியும் அவர்செயலும்
பரக்கஉரைமின் எனஅமரில் பண்டிந்திரனுக் குடைந்தசுரர்
கரக்குங்கடல்ஏ ழையும்வாங்கிக் கையால்குடித்த முனிகழறும்.

26 *அண்டர் நாயகன் அணிதிகழ் உந்தியாம் மடுவில்
புண்ட ரீகநான் முகன்மகன் புலத்தியன் என்போன்
மண்ட லந்தரு திவாகரன் தேரது வலஞ்சூழ்
விண்ட லந்திகழ் மேருவாம் வெற்பினைச் சேர்ந்தான்.

27 அந்த மாமலைச் சாரலில் அருவினை அகல
இந்த மாநிலத் தியாவரும் அருந்தவம் இயற்றும்
சந்த வார்தொழில் தடவனம் சார்ந்துசார் வினைகள்
சிந்த மற்றவன் அருந்தவம் செய்கின்ற வேலை.

28 நாக கன்னியர் நான்மறை முனிவர்கன் னியர்கள்
போக மேவிய பொன்னுல கத்துமங் கையர்கள்
பாகு சேர்மொழிப் பங்கய முகத்தினர் அந்தப்
பூக நீடிய பொழில்வனம் நாள்தொறும் புகுந்து.

29 பாடு வார்புனல் ஆடுவார் பன்மலர் பறித்துச்
சூடு வார்மலர் நாடுவார் தோழியர் தம்மைத்
தேடு வார்வரக் கூடுவார் தேவருந் திகைப்ப
ஆடு வார்விளை யாடுவார் ஆயினர் அடங்க.

30 இந்த வண்ணம்வந் தேந்திழை யார்விளை யாடச்
சிந்தை யானது கலங்கிடச் செய்தவம் சிதைந்த
அந்த மாமுனி ஆரழல் ஆம்எனச் சீறி
வந்து தோன்றினன் மங்கையர் யாவரும் மருள.

31 எரியும் நெஞ்சினன் என்னிடை இற்றைநாள் துடங்கி
மருவி னீர்எனில் மங்கைமீர் உங்களுக் கடாத
கருவுண் டாகெனச் சவிப்பஅக் கன்னியர் எல்லாம்
வெருவி ஓடினர் திசைதொறும் வேறுவே றாகி.

32 அரிய நான்மறைப் பொருளினை அங்கையில் கனிபோல்
தெரிய நோக்கிய திரணவிந் துவின்மடக் கன்னி
புரியு மாதவப் புலத்தியன் சாபம்இங் கறியாள்
சுரிய வார்குழல் கன்னியர் தங்களைத் தேடி.

33 பண்டு போல்வினை யாடிடம் பயம்இலள் எய்தி
வண்டு சேர்மலர்க் குழலினுள் மறைஒலி கேட்டுத்
தண்டு குண்டிகை தாங்குகைத் தவமுனி தன்னைக்
கண்ட லும்அவள் வயிற்றில்உண் டாயது கருப்பம்.

34 மேனி யானது வெளுத்தனள் விழிகளும் பசப்ப
மானின் நோக்கினள் மற்றதன் காரணம் அறியாள்
தான்வி ரைந்துபோய்த் தந்தையை வணங்கிஇத் தன்மை
ஆன காரணம் ஆங்கவன் தன்னொடும் அறைவாள்.

35 பாங்கி மார்களைத் தேடியான் படர்வனம் எய்தி
யோங்கு மாதவப் புலத்தியன் உறைவிடம் உற்றேன்
ஈங்கென் மேனிபோய் இவ்வண்ணம் ஆயின தென்ன
ஆங்கு யோகத்தின் அருந்தவன் புகுந்தவா றறிந்தான்.

36 அறிந்த மாமுனி அரும்பெறற் கன்னியை உடன்கொண்
டிறந்த மாதவப் புலத்தியன் இருப்பிடம் எய்தி
நிறைந்த கேள்வியாய் நினக்கிவள் தாரம்ஆ குகைக்குச்
சிறந்து ளாள்குண வதிஎனக் கொடுத்தனன் செப்பி.

37 கொடுத்த நாண்முதல் கொம்பனாள் கோதறு முனிவற்
கடுத்த ஏவல்செய் தாங்கினி தொழுகிட அந்தக்
கடுத்த வெவ்வினை கடிந்தவன் காதலி தன்மேல்
எடுத்த பேர்அருள் உடையனாய் இவ்வுரை இயம்பும்.

38 காதன் மேவும்நின் தோழியர் தங்களைக் காணச்
சூத நீடுபூஞ் சோலையில் தேடியான் சொல்லும்
வேத ஓசைநீ கேட்டலும் விச்சிர வாஎன்று
ஓதும் நீதியான் ஒருவனைப் பெறுதியால் என்றான்.

39 அந்த வாசகம் அருள்முனி கூறலும் உயர்ந்த
சிந்தை யாள்திரு வயிற்றினில் திசைமுகன்றனக்குத்
தந்தை தோன்றிய தன்மைபோல் தவநெறி தழைப்ப
வந்து தோன்றினன் விச்சிர வாமறை விளங்க.

40 தன்னில் நேர்பிறர் இலாதவன் தவத்தினில் தந்தை
அன்ன மாமுனி அறம்புரிந் தொழுகலின் அவற்குப்
பன்னு மாமறை பகர்ந்தருள் பரத்துவன் தெய்வ
வன்னி யேஎனும் கன்னியைக் கொடுத்தனன் மகிழ்ந்து.

41 தேவ வன்னியச் செய்தவ முனிவன்ஆங் குரைத்த
ஏவல் செய்தவற் கினிதினின் ஒழுகிட அந்தப்
பாவை தன்வயிற் றோன்றினன் பல்உல குள்ளோர்
யாவ ரும்மன மகிழ்ந்திட எழில்மணிப் புதல்வன்.

42 விரிஞ்ச னேமுத லாகிய வேதியர் உவகை
புரிந்த நெஞ்சினர் புரந்தரன் ஆதியர் புகுந்து
தெரிந்து நோக்கிவைச் சிரவணன் எனப்பெயர் செப்பித்
திரிந்து போயினர் திசைதொறும் சேயினை வாழ்த்தி.

43 விரிந்த வேதங்கள் விளம்பிய பொருள்களின் முடிவைத்
தெரிந்து கண்டவைச் சிரவணன் செய்தவம் தன்னில்
புரிந்த நெஞ்சினன் புரையறு முனிவனம் புக்கான்
சரிந்து தீவினை ஓடிடத் தருமமும் தழைப்ப.

44 தோய மேதனக் காதார மாகவும் துரக்கும்
வாயு வேஉண வாகவும் மன்னுபே ரறத்தை
ஆயும் தூயவன் ஆதியர் எய்திய நியமம்
சாய்வி லாதபல் ஆயிரம் ஆண்டுகள் சலித்தான்.

45 அன்ன தன்மைவைச் சிரவணன் அருந்தவம் செய்ய
முன்னை நான்முகன் தோன்றிஇம் மூவுல கத்தில்
உன்னை ஒப்பவர் யாவரும் இல்லைஎன் றுரைத்துச்
சொன்ன யாவையும் தருவன்நீ சொல்லுதி என்றான்.

46 இலகு மாமணி எழில்முடி இந்திரன் இயமன்
அலகி லாவலி வருணன்ஆங் கவர்களோ டொப்ப
உலக பாலன்நான் ஆகவும ஒள்நிதி தனக்குத்
தலைவன் ஆகவும் வேண்டுமென் றானனத் தந்தான்.

47 வரவு போக்கினுல் மனோகதி உடையது வானத்
திரவி தேரினும் கடியது ஈரேழ்உல குள்ளோர்
விரவி ஏறினும் வெளியிடம் மிகுவது வேகப்
புரவி இல்லது புட்பகத் தேரையும் கொடுத்தான்.

48 கொடுத்து மைந்தநீ போகென ஆசிகள் கூறி
விடுத்து விண்ணவர் சூழ்தர விரிஞ்சன்ஏ கியபின்
தடுக்க ஒண்கலா அருளுடைத் தனபதி தனைப்பெற்
றெடுத்த தாதைக்குப் பெற்றன யாவையும் இயம்பி.

49 பின்னுங் கூறுவான் பிதாமகன் பெருவரம் தந்தோன்
இன்ன தானத்தில் இருத்திஎன் றியமபலன் எனக்குத்
துன்ன லார்களால் துன்னுதற் கரியது துறக்கம்
அன்ன தானநீ அருள்என அம்முனி கூறும்.

50 இலங்கை மாநகர் இராக்கதர் இருப்பிடம் முன்னாள்
வலங்கொள் ஆழிமா மாலினோ டெதிர்மலைந் தமரில்
கலங்கி ஓடிய நிருதர்கீழ் உலகிடைக் கரந்தார்
அலங்கல் மொய்ம்பினுய் அந்நகர் இருத்திநீ என்றான்.

51 என்று கூறிய தந்தைதன் இணைஅடி இறைஞ்சி
நன்று நன்றென மகிழ்ந்தெயில் இலங்கைமா நகரில்
சென்று மேவினன் சித்தர்வித்,தியாதரர் இயக்கர்
தன்து ணைப்பெருங் கிளைதனைச் சூழ்தரத் தனதன்.

52 அலங்கன் மோலியவ் வச்சுதற் கமர்அழிந் தரக்கர்
கலங்கி ஓடிய நாள்முதல் கவின்அழி இலங்கை
துலங்கி ஓங்கிட யாவரும் தொழுதடி போற்ற
இலங்கு நீண்முடி இந்திரன் என்னவீற் றிருந்தான்.

53 தெண்தி ரைக்கடல் ஏழையும் செங்கையால் வாங்கி
உண்ட மாமுனி இவ்வகை உரைத்திடக் கேட்டு
வண்ட லம்பிய தண்துழாய் மணிமுடி துளக்கிப்
புண்ட ரீகமே அனையகட் புரவலன் புகலும்.

54 இந்த மாநிலத் திராவணன் ஆதியாம் அரக்கர்
முந்தை யோர்எலாம் புலத்தியன் வழிஎன மொழிந்தாய்
அந்த வண்ணமே அன்றியும் வேறொரு வழியாய்
வந்து ளோர்கள்ஆர் மாமுனி உரைத்தனை என்றான்.

55 ஏயும் நீள்வலி இராக்கதர் கொற்றமும் இலங்கை
ஆய வாறும்அந் நகர்அவர்க் காயகா ரணமும்
மாய னுககவர் ஓடிய வண்ணமும் மற்றும்
தூய மாதவ சொல்எனக் குறுமுனி சொல்லும்.

1–வது கோத்திரப் படலம் முற்றிற்று.

---

## 2. அரக்கர் பிறப்புப் படலம்

1 *ஆதி தன்பால் அனைத்துல கங்களும்
பேத மான உயிரும் பிறந்தநாள்
ஓது பல்உயி ரில்சில உத்தம
ஏது செய்வோம் எனஇறை கூறுவான்.

2 பரக்கும் இந்தப் பலபுவ னங்களை
இரக்கி யுங்கோள் எனவிரங் காமல்ஏன்
றுரைக்க லால்அன் றுரைத்த உயிர்எலாம்
அரக்கர் ஆயினர் அந்த அரக்கரில்.

3 ஏதி யும்பிர கேதியும் என்றுல
கோது பேர்கள் உடன்பிறந் தார்களில்
நீதி யோன்பிர கேதி நெடுவனம்
சாது மார்க்கம் தனில்நின்று சார்ந்தனன்.

4 மற்றை யேதி மருவலர் ஓடிடச்
செற்ற காலன் உடன்வந்த தீவிழிக்
கற்றை வார்குழல் கன்னி பயைஎனப்
பெற்ற பேருடை யாள்கை பிடித்தனன்.

5 எத்திக் கும்திறல் எய்திய வேதிக்கும்
பத்திச் செம்மயி ராள்பய மாருற
வத்திக் குங்கொடி யாள்தன் வயிற்றிடை
வித்துக் கேசன் பிறந்தனன் வீரனே.

6 இந்தி ரற்குச் சசிபோல் எழில் உடை
அந்த வீரற்கு அணிமணிப் பூண்முலைச்
சந்த வார்குழல் சாலக டங்கரில்
சந்தி தன்மகள் தாரம தாயினள்.

7 நீடு வார்குழல் நேரிழை யாளும்வண்
டாடு தார்திகழ் அந்த அரக்கனும்
கூடும் ஆவியும் கூடிய அன்றிலும்
பேடும் போலப் பிரியலர் ஆயினர்.

8 பெருகு காதலி னுள்பெருத் தோங்கிய
ஒருவன் வீரியம் உற்றது தாங்கினள்
விரியும் வெண்திரை மேவிய வேலைவாய்க்
கரிய மேகம் கருத்தரித் தென்னவே

9 ஆய பேதை அரிதினில் ஈன்றஅச்
சேயை நீத்துச் சிறந்ததன் காதலன்
போய தெவ்விடம் அவ்விடம் புக்கனள்
நேயம் ஓர்இடத் தேஅன்றி நிற்குமோ.

10 சேமம் இல்லாச் சிறுவனைப் போட்டுப்பின்
போம்ம டந்தை புரிந்துபின் பார்த்திலள்
வாம மேகலை மாதர்க்கும் மைந்தர்க்கும்
காம மிக்கதற் பின்புகண் தோற்றுமோ.

11 போய பின்பவன் பொற்கர முட்டிதன்
வாயின் வைத்து மழைஇடிப் பொத்திட
ஆய மைந்தனும் அஞ்சல்என் பார்இன் றித்
தாயி முந்து தனியே கதறினன்.

12 இந்தி ராதி இமையவர் யாவரும்
வந்து கூடி மகிழ்ந்து மலர்மழை
சிந்தி ஈசன் திருவுளம் என்கொல்என்
றந்த ரத்திடை நின்றடி போற்றினர்.

13 ஊறு நீங்கி உலகோர் உறுவினை
பாறி ஓடப் பவனி உலாவுவான்
நாறு பூங்குழல் நாயகி தன்னொடும்
ஏற தேறி இறைவன்அங் கெய்தினன்.

14 இரக்கம் நீங்கியே ஈன்றதாய் போய்விடத்
தரிக்கி லாதழும் சேயைச் சகத்தினில்
அருட்கண் நோக்கிய ஆளுடை நாயகி
திருக்கண் நோக்கிச் சிவற்கிவை செப்பினள்

15 தாயை விட்டுத் தனியே கதறும்இச்
சேயி னுக்கருள் செய்யத் தகும்என்று
நாய கற்கந்த நாயகி கூறிடப்
பாய் புனல்செஞ் சடைதாழ் பரமனும்.

16 ஒல்லை ஈன்றவட் கொத்த பிராயமும்
எல்லை யில்பர மாயுவு மிங்கழும்
நல்ல மைந்தன் பெறுகென நல்கிவிண்
செல்லும் சீரிற் றிகழ்புரம் நல்கினன்.

17 மேய கெற்பம் விரைவில் பிறத்தலும்
தாயை யொக்கும் பிராயமும் தாழ்சடைத்
தூய நக்கன் துணைவி இராக்கதர்
ஆய வர்க்கெலாம் ஆக அருளினள்.

18 எக்க ணக்கும் இறந்த பெருமையன்
பொக்க ணத்தன் புலியதள் ஆடையன்
முக்க ணத்தன் மொழிபெற்ற மூப்பினன்
அக்க ணத்தின் அவரடி தாழ்ந்தனன்.

19 சுந்த ரத்தோள் சுகேசன் பசுபதி
தந்த சீரும் வலியும் தழைத்திட
அந்த ரம்செலும் அந்தப் புரத்திடை
இந்தி ரன்போல் இனிதிருந் தான்அரோ.

20 கொங்க டங்கலர் கொன்றை எருக்கராத்
திங்கள் தங்கிய செஞ்சடை யோன்இடப்
பங்க டங்கிய பார்ப்பதி யாள்அருள்
அங்க டங்கலும் பெற்ற அரக்கர்கோன்.

21 பாடு கந்திரு வக்குலப் பாவையைக்
கேடில் கீர்த்திக் கிராமணி பெண்ணெனத்
தேடு மாமணி தெய்வ வதிதனை
நாடி மற்றவள் நற்கை பிடித்தனன்.

22 சோதி மாமணி மோலிச் சுகேசனும்
தீதில் தெய்வ வதிஎனும் தெய்வமா
மாத ராளும் மயங்கி வளர்பெருங்
காதல் என்னும் கடல்கரை கண்டிலார்

23 மாலை தாழும் மணிவரைத் தோளற்கு
மால வன்திரு அன்னாள் வயிற்றிடை
மால்கொள் மாலிய வானும் சுமாலியும்
மாலியும் எனும் மைந்தர்கள் வந்தனர்.

24 தூய தெய்வ வதிவயிற் றோன்றிய
ஆய மூவரும் ஆகுதி பொங்குமுத்
தீவ ளர்ந்தெனச் செய்மருந் தொன்றும்இல்
நோய் வளர்ந்தென நொய்தின் வளர்ந்தனர்.

25 அந்த மூவரும் அன்றரன் தன்னிடைத்
தந்தை பெற்ற வரமும் வலியும்தம்
சிந்தை எண்ணித் திகழ்வட மேருவாம்
சந்த நீடு தவவனம் சார்ந்தனர்.

26 இந்தை பொய்கள வேதம தெய்திடும்
வஞ்ச பாவம் வரும்வழி மாற்றிநல்
தஞ்ச நெஞ்சர் தயாவினர் தாம்புலன்
அஞ்சும் வென்றங் கருந்தவம் செய்தனர்.

27 முன்னை வானவர் தானவர் முற்றுநூல்
மன்னு தாபதர் மானிடர் மற்றுளோர்
அன்ன மூவர் அருந்தவங் கண்டுல
கென்ன தாகுமோ என்று நடுங்கினார்.

28 ஆய காலத் தவர்கள்முன் அந்தணன்
தூய மாமணித் தேர்மிசைத் தோன்றினான்
ஏயு மாதவத் தீர்நும் மனத்திடை
மேய யாவையும் வேண்டுதிர் நீர்என்றான்.

29 பூவ யன்புக லப்புகல் வார்அவர்
தேவ ராதி திரிபுவ னத்துளோர்
ஏவ ரேனும் எமக்கமர் தோற்கவும்
தேய்வில் காலங்கள் செல்லவும் செப்புவாய்.

30 சிந்தை எண்ணிநீர் செப்பின யாவையும்
தந்த னன்எனத் தாமரை ஆசனத்
தந்த ணன்தான் அருள அரக்கர்தோள்
வந்து பூரித்த மால்வரை என்னவே.

31 ஆதி தன்னிடைப் பெற்ற அருளினால்
பீதி இன்றிப் பெரும்புவ னங்களை
வாத பித்த கபம்என வன்திறல்
ஓது மூவரும் ஒத்து நலிந்தனர்.

32 காசில் பன்னக நாடு கலங்கிட
நாசம் எய்திட நானில மானது
வாச வன்முதல் வானவர் ஓடிட
ஆசை பத்தும் அடிப்படுத் தார்அரோ.

33 மாவ லிப்புய மாலிய வான்முதல்
மூவர் முப்புவ னங்களை வென்றுளார்
தேவ தச்சன் வருகெனச் செவ்விதில்
கூவி மற்றவ னுக்கிவை கூறினர்.

34 *நீடு புவனம் ஒருமூன்றும் அயனும் சிவனும் நெடுமாலும்
கூடி அமரின் முயன்றாலும் குறுக அரிய அரணினதாய்
ஆடல் அமரர் பதியின்அழ கழிக்கும் நகரி அமைத்திஎன
நாடி நல்லோய் எனஉரைப்ப நன்றென் றவன்போய் நாடுவான்.

35 குலையா நிலத்தின் வடமேரு குலைய மோதி அதன்திகழ்முத்
தலையார் சிகரம் தனைமுறித்துத் தடங்கா லதனைக் கொண்டுபோய்
அலையார் கடலின் முன்பிட்ட வந்த இடம்இம் மூவர்க்கும் .
நிலையாம் பதியாம் எனத்தச்சன் நினைந்தங் கதனை நிகழ்த்துவான்.

36 மூல தலந்தென் கனகமலை முறிந்த சிகர முக்குடுமிக்
கோல வரையாங் கதுபிறர்க்குக் குறுக அரிய கொள்கையதால்
ஏல அமைந்த தேவரால் இலங்கை எனப்பேர் தரத்தக்க
தாலம் அனைய கொடுந்திறலோர்க் கதுவே நகரம் ஆம்என் று.

37 தாழ்வில் மதியுங் கதிரோனும் தாராகணமும் அவை எல்லாம்
கீழ வாகி மேலோங்கிக் கிளர்ந்து பரந்த தருவினையில்
சூழும் மதிலும் அம்மதிலைச் சூழ்ந்த கிடங்கும் புவிசூழ்ந்த
ஆழி வரையும் அவ்வரையைச் சூழ்ந்த அகல்வே லையும்என்ன.

38 குலையும் வண்ணம் உறநம்மைக் குலிசத் தாலே இறகரிந்த
இலகும் மோலி இமையவர்கோன் இன்னம் சிறகை அரியும்என
அலைகொள் பெருநீர்க் கடல்சூழ்ந்த அழியா இலங்கை அரண்தேடி
மலைகள் எல்லாம் அவ்விடத்தே திரண்ட போன்ற மணிமாடம்.

39 ஆக்கும் முந்நீர் உகாந்தத்தில் அழிக்கும் வெள்ளம் அதுதனக்குப்
போக்கு வேண்டும் எனவகுத்த போன்ற பெருங்கோ புரவாயில்
காக்கும் ஒருநால் திசைமுடிவு காணப் போந்த கார்இருளை
நீக்கும் மணிவே திகைஇருபால் நிறைந்து விளங்கும் நெடுவீதி.

40 சகரர் தோண்டும் நீர்வேலை தழுவும் இலங்கா புரிதன்னில்
நிகரில் கூட கோபுரங்கள் நீடா டரங்கு நெடுஞ்சாலை
சிகர மாட மணிச்சோதி திரண்டொன் றாகிச் சிவந்தெழலால்
மகர வேலை யுடன்கனலும் வடவா முகத்தை ஒத்துளவால்.

41 இன்ன தாய இலங்கையின தெழிலை நோக்கி எதிரில்லா
மன்னு வீர மாலியவான் சுமாலி மாலி என்றுரைக்கும்
அன்ன மூவர் அகமகிழ்ந்தவ் வாசாரி யற்குப் பூசைசெய்
தொன்ன லார்கட் கிடங்குடிக்க ஒலிநீர் இலங்கை யுட்புகுந்தார்

42 யாவ ராலுங் கண்களினால் எட்டிப் பார்க்க ஒண்ணாத
காவல் இலங்கை வீற்றிருந்த காலைக் கானக் கந்திருவப்
பாவை யான தருமதைதான் பயந்த மூவர் கன்னியரில்
மூவ ராய மூவர்க்கும் மூப்பின் அடைவின் முறைகொடுத்தாள்.

43 சிறந்தார் காதல் மாலியவான் தனக்கும் சீரார் சுந்தரிக்கும்
பிறந்தார்பெருவச்சிரமுட்டி பெரும்பாக்கன் துன்முகப்பெயரான்
மறந்தான் பெருகும்சுதகத்தன் றணியாக் கோபன்மத்தன்மனத்
தறந்தா னில்லா உன்மத்தன் என்னும் எழுவர் அனலையொடும்

44 பாதி மதிக்குப் படர்செய்நுதல் பணியா மணியார் கலையல்குல்
சூதுமதிக்கும் இளங்கொங்கைத் துணைக்கைகசியும் தூமலர்மேல்
மாது மதிக்கும் வடிவுடைய மங்கை கும்பி நசியும்எழில்
கேது மதிக்கும் சுமாலிக்கும் பிறந்தார் அறந்தான் கெட்டோட.

45 திளையா வெம்போர் அனலன்சீர் திகழும் அனிலன் அரனுடனே
வளையா வலிசேர் சம்பாதி மன்னும் உலகில் மைந்தர்மனத்
தளையாம் விழியாள் தருமதைதான் தந்த மூவர் மங்கையரில்
இளையாள் தனக்கும் மாலிக்கும் இவர்கள் பிறந்தார் ஈரிருவர்.

46 கூற்றம்என்னக்கனல்என்னக்கொதிக்குமாலம்எனக்கொடியோர்
சீற்றம் என்ன அறிவில்லோர் செல்வம் என்னத் திகழறத்தின்
ஆற்றில் நின்றல் லவைநீக்கி ஆறில் ஒன்று கொள்ளாதே
ஏற்றமான இறைகொள்ளும் இறைவன் பாவம் எனவளர்ந்தார்.

47 ஏழிப் புவனம் படைத்தோன்பால் எய்தும் வரத்தின் வலியாலே
பாழித் திரள்தோள் மாலியவான் சுமாலி மாலி அவர்மைந்தர்
ஆழித் தேர ரடற்சிலையர் அளவி லாத பெரும்படையார்
ஊழிக் காற்றும் தீயும்என உலகை அழிக்கத் தொடங்கினர்.

48 மேவு நாகர் குலம்இறுத்து வேலை உலகம் பொடிசெய்து
தேவர்கோமான் தனைத்துரந்து செம்பொன்உலகம்கைக்கொண்டு
பாவும் இந்தப் பல்உலகும் படைத்துக் காத்துத் துடைக்கின்ற
மூவர் ஆவார் இவரேஇம் மூவர் என்று மொழிந்தனரால்.

49 பரவைப் புவியில் உள்ளோரும் பதிவிட் டோடிந் திரனுதி
சுரர்கோத் துள்ளோர் யாவர்களும் துணையி லாத முனிவோரும்
உரகப் புவனத் துள்ளோரும் ஒருபற் றின்றி உறுதுயரால்
நரகத்திடையேகிடந்தழுந்தி நடுங்குமஉயிர்போல்நடுங்குவரால்.

50 ‡இத்தன்மையதாமரக்கர்செயும் இடும்பையழித்தார்யாவரென்று
சுத்த மான தவமுனிவா தோன்ற அருள்செய் திடும்எனக்கா
குத்தன்மொழியும்மொழிகேட்ட கும்பமுனிவன்உரைகுளக்கண்
மூத்தன்மொழியாலமர்சொல முராரிமுடித்தமறைமொழிவான்.

## 2-வது அரக்கர்பிறப்புப் படலம் முற்றிற்று

---

## 3. இலங்கை அழித்த படலம்.

கோல கால மாயுலகம் குலைந்து நடுங்கக் கொதித்துவரும்
ஆல காலம் அமுதாக அடக்கி வைத்த மணிமிடற்றோன்
பால காலன் எனும்மொய்ம்பன் பதறப் பற்றி உதைத்திடும்அக்
கால காலன் வீற்றிருக்கும் கயிலை மலையைக் கண்ணுற்றார். 1

குவளைவிழிப்பூணிளங்கொங்கைக்கொடிபோனுசுப்பிற்குயில்மென்
லவளை இடத்தும் சடைமேலும் ஆறும்தரித்த அரும்பொருளைத் (சொ
தவள வெள்ளித் தடங்கிரிமேல் தவமா முனிவர் தற்சூழப்
பவள வரைபோல் பொலிந்திலங்கும் பரசு பாணி தனைக்கண்டார்.

எந்தாய் போற்றி ஏறேறும் இறைவா போற்றி ஏழுலகும்
தந்தாய் போற்றி அணிகொன்றைத் தாராய் போற்றி சகம்உய்ய
வந்தாய் போற்றி முடிவைத்த வாருய் போற்றி வஞ்சமனச்
செந்தா மரையோன் சிரம்அரிந்த தேவே போற்றி சிவபோற்றி. 3

என்றுபலவும்பன்னித்த னிணைத்தாமரைத்தாள் தாழ்ந்திறைஞ்சி
நின்று நடுங்கும் அவர்தம்மை நீலகண்டன் முகம் நோக்கி
இன்று தேவாசு ராதியரும் வேண்டி யேயாங் கெல்லோரும்
ஒன்றி வந்த காரணத்தை உரையும்என்ன அவர் உரைப்பார். 4

வன்திண் புயத்து மாலியவான் முதலாய் உள்ள வல்லரக்கர்
சென்றிந் திரனைச் செருமறித்துத் தேவர் உலகங் கைக்கொண்ட
வென்றி வீரர் தங்குலத்தை வேரோ டறுதே விடுதியேல்
இன்று நாளை உலகங்கள் எல்லாம் அழிப்பர் எனஉரைத்தார். 5

மல்லார் புயத்துச் சுகேசன்தன் வழியில் உள்ள வல்லரக்கர்
எல்லாப் பிழையும் செய்தாலும் எம்மை அடைந்தோர் ஆதலினல்
கொல்லே னவரை என்கையால் கொல்லு முபாயங் களுமெல்லாம்
வல்லான்மாயன் என்றவர்க்கு மங்கைபங்கன் விடைகொடுத்தான்.

* தூயவன் தன்பொற்றுணையடி பணியார் தொகுபுரமெரிந்திடச்சிரித்த
தீயவன் விடுத்த தேவர் தானவர்கள் சித்தர் வித்தியாதரர் இயக்கர்
மேயகந் திருவர் விளங்குமா முனிவர் மேதினி உள்ளவர் நாகர்
ஆயவர் முதலோர் அச்சுதன் துயிலு மணிதிருப் பாற்கட லடைந்தார்.7

திங்குடையரக்கர் செல்வமுஞ்செருக்கும் திறலுடைஆயுவும் சிதைந்து
நீங்கின எங்கும் நிலையிலா அறமும் நிலையினைப் பெற்றது மறைகள்
ஓங்கிய உலகம் பிழைத்தன எனு முவகையா னதுதழைத்தோங்க
ஆங்கவர் தமமைக் கண்டெழுந்தோடி ஆர்ப்பது போன்றதவ்வாழி 8

முந்தைமா லியவான் சுமாலிபோர்மாலி எனஇவர் மூவரும் இவர்கள்
தந்தகா ளையருந் தடமணித் தேரும் தானையும் தரைப்படுமுபாயம (ல்
சிந்தையின்எண்ணித்தேவர்கோன்முதலோர் திருமகள்காதலன் தன்பா
வந்தனர் என்றுமகிழ்ந்தெதிர்கொள்வபோன்றனவருபெருந்திரைகள்.

நீடியஅரக்கர் நெடும்படைக்குடைந்து நிலையழிந் தொருவழிநில்லா
தோடியகால ருலர்ந்தமேனியர்க ளூறுவிடாய் கெடுப்பலென்றவர் தம்
வாடியமுகத்தும் மார்பினும்புயத்தும் வளர்இளம் புன்னையின்வாசம்
கூடிய சீதம் பூண்டிடுதிவலை கொடுப்பதொத் ததுகுளிர் தென்றல்.10

ஆயபாற்கடலை அடைந்தஆங்கவர்கள் ஆயதொன்றையுறும்அவர்க்கும்
காயம துலர்த்தித் தவம்புரிவோர்க்கும் கமலவா சனன்முத லாய [து
தூயயோகியர்க்கும்சொல்லுமறை துவுக்கும் சுருதிக்கும்தோன்றநில்லா
சேயனைஅடைந்தோர்க்கணியனும்ஆதிதேவனைத்தெரிவுறக்கண்டார்

ஒருங்கியமனத்தின் யோகியருண்மை யுணர்ந்தவ ருறுபெரும்பதத்தர்
நெருங்கியெம் மருங்கு மிருந்துசே விப்ப நாரதர் நின்றுகூத் தாடப்
பெருங்கரம்எடுத்து மாகதர் ஏத்தப் பிறழ்திருப் பாற்கடல் மேலோர்
கருங்கடல்நிமிர்ந்துகிடந்ததுபோலக் கிடந்துதன்கண் துயில்வானை.12

தெரிவையர்இருவர் செங்கையால்வருடச் சிவந்தசே வடிமலரானைக்
கருவரை யைச்சூழ்ந் தெளிதரும் மின்னைக் காட்டிய பீதக வாடைத்
திருவரை யானைத் திசைமுகன்ஆதி தேவரும் முனிவரும் மற்றும்
ஒருவரும் ஒழியா துலகங்கள் யாவும் உள்ளடங் குதரத்தி னானை. 13

வண்டெனவிரிஞ்சன் மாமறைபாட வடவரை கொட்டையாச்சூழ்ந்த
திண்தடங்கிரிகளல்லியாய்த்திசைகளிதழ்களாய்த்திகழுமிவ்அண்டப்
புண்டரீ கத்தைப் புறப்பட விட்ட உந்தியாம் பொற்றடத் தானை
தெண்திரைக்கடலி லெழுந்தினகரன்போல் திகழ்ஒளிஆரமார்பினனை

வண்டடங்கிரிபூண் கட்டியதொப்ப வலயங்கள் தழுவுதோளானைத்
தண்தர ளத்தின் நிரைதிரைதழுவு பவளமும் தாமரை இரண்டும்
குண்டலம்இரண்டுங் குனிசிலைஇரண்டும் கூடிய குளிர்மதிவதன
மண்டலத்தானை வலக்கைகீழாய்க்கண் வளர்ஒளி மணிமுடியானை.

ஆழியும் சங்கும் சாபமும் வாளும் அடல்பெருந் தண்டிவை ஐந்தும்
சூழவும் வந்து நின்றுமெய் காப்பச் சுவணனும் சுற்றும்வந் துலாவப்
பாழியஅனந்த யோகத்தி லவன்தன் பணங்களா யிரங்கொடு கவிப்ப
ஊழியா யிரங்கள் ஒருகண மாக யோகநித் திரைஉகந் தானை. 16

இன்னதன்மையனாய் இந்திரைகொழுநன் யோகநித்திரைசெயுங்காலை
முன்னைவானவர்கள்தானவர்முனிவர்முதலினர் மூண்டெழுபயத்தால்·
என்னதாகுங்கொல்இவன்திருவுள்ளம்எனநினைந்தியாவரும்நிற்ப
அன்னவன்குணந்தானறிந்தனஎல்லாமமரர் கோனறையலுற்றனனால்

உலகினைஎல்லாம்படைத்தளித்தழித்துமுண்டுமிழ்ந்தளந்திடந்தாண்
நிலையுடைவானாய்வாயுவாய்க்கனலாய்நிலனொடுநீருமாய்எண்ணில்(டும்
தொலைவிலா உயிராய் உயிர்க்குயிர் ஆகிச் சுடர்களாய்ச் சிவனய னாகி
அலகிலாவினையாட் டாடுவாயகண்ட மாயினாய் யாருனைஅறிவார். 18

பிறியிலாஉயிருமுடலும்வாசகத்துப்பேர்கலாப்பொருளுமாங்கெனவும்
வெறியுலாமலரும்எள்ளும்எண்ணெயும்போல்விரிந்தஎப்பொருள்களு
கறுவிமேல்முயலும்காரியம்ஆகிக்காரணமாய்க்கருத்ததுவாய் (மேவிக்
அறிவுமா யறியப் படுவதற் கறிவ னாயினாய் யாருனை யறிவார். 19

பொன்னிடைப் பிறந்த முடிகட காதி பூண்பல போலவும் புணரி
தன்னிடைப்பிறந்ததடந்திரைஎனவும்தரையினின்றெழுதுகளென
நின்னிடைப் பிறந்த சுரர்மனு சாதி முதலபல் உயிர்களும் நீயும்[வும்
அன்னிய மாகி ஆயில்ஒன் றுவா யாழியாய் யாருனை அறிவார். 20

உறப்பெரி துணரி லருவியா யுருவாய் உளவுமாய் இல்லையு மாகிப்
பிறப்பிலியாகிப் பிறத்திநீ ஆண்பெண் அலிஎனப் பேசவும்படாதாய்
மறப்பகை ஒன்றும் இன்றியே நிற்றி வலிகொள்பஞ் சாயுதம் எடுத்தி
அறச்சிலுகுடைத்து நின்திறமுரைக்கில் அச்சுதாஆருனைஅறிவார். 21

பவக்கடல் கடக்கும் பரிசறி யாது பலபெருஞ் சமயத்தின் மயங்கி
அவத்தினில்பிறந்து கழிபவர்எல்லாமகண்டமாய்வரவுபோக்கறுத்துச்
சுவத்தனாய் நின்ற நின்னிலை அறியார் நின்னுளே தோன்றிய துலகம்
அவற்றினு தார மாபினாய்அமல நாட்டினாய் யாருனை அறிவார். 22

தெவ்வடவிரைவின்உதவவேண்டுமெனத்திகிரிசங்கங்கையில்தரித்தா
செவ்வடங்கோத்தமணியெனக்கோத்துத்திரியவும்சிதறுவாயுலகை[ய்
மொய்வடமேரு கிரியொடுமுலகைமுற்றுமுண் டாலிலைத் துயின்றோய்
அவ்வடம் நின்ற தெவ்விட மறியேன் அமலனே யாருனை அறிவார்,23

கனல்துறைநிற்றி அந்தணர்க்குள்ளங் கசிந்துகண் ணீர்சொரிபத்தர்
இனத்தொடுநிற்றி ஏவல்செய்தொழிலோர் யாவர்க்கு மாசையினிற்றி
மனத்திடை நிற்றி யோகிய ருக்கு மாசறு தூயஞா னியர்க்கும்
அனைத்தினும் நிற்றி ஒருவழிப்படாத அமலனே யாருனை அறிவார் 24

ஒருமுத லாகிக் கவடுமூன் றாகி உயர்பெருஞ் சாகைகள் பலவாய்த்
தருவெனநின்றாய் தலையுரைதெரியாச் சமையநூல் யாவையும்தந்தாய்
அருவினை யாகி அருவினைப் பயனாய் அருவினை அனுபவிப் பவனாய்
அருவினை ஆக்கி அருவினை அறுக்கும் அற்புதா ஆருனை அறிவார் 25

என்பன சொல்லி இந்திரன் ஏத்தும் ஏத்தொலி இருஞ்செவி எய்த
இன்பநித் திரையை விட்டுணர்ந் தருளி ஏழுலகுடையவன் எழுந்தவ்
அன்பரை நோக்கி அனைவரும் வந்த காரணம் என்என அகத்தில்
துன்பமதொழித்துத் தொழுதகையினராய்ச் சுராதிய ரிவையிவைசொன்னார்

வரப்பெரும்வலியான் மாலியவானும் சுமாலியும் மாலியும்என்னும்
இரக்கமில் அரக்கர் ஈறிலாப் படையும் எவ்வுல கங்களும் ஊழி
நெருப்பென எரிக்கும் நிருதர்வேர் அறுத்து நீடுல கங்களை நீயே
பரிக்கிலை ஆகில் இனியடிதொட்டுப் படைக்கவேண் டும்படிஎன்றார்27

நஞ்சினுங்கொடிய வெஞ்சினஅரக்கர் நாள்தொறுங் கோறலினாலே
எஞ்சினோம் செக்கில் எடபிழைத்தார்போலிங்குவந் தார்களே பிழைத்தோம்
அஞ்சன மேனிக் கஞ்சநாண் மலர்க்கண் அமலனே ஒருகதி இல்லோம்
அஞ்சினோம்வந் துனடியிணை அடைந்தோம் ஆழியாயபயம்நின் அபயம்.

ஆங்கவ ரபயம் என்றலு மஞ்சல் அஞ்சல்நீர் என்றுகை கவித்துத்
தீங்குடைஅரக்கர்குலத்தைவேரறுத்துச் சிந்தைநோய்தீர்க்குவன் திண்ணம்
நீங்கள்போய்உங்கள்நிலைகளில்நின்மின்என்றடல்நேமியோன்விடுப்ப
ஓங்கியமனத்தர்போனபின்அரக்கர்க் குற்றனஒழிவின்றிமொழிவாம்.

*இமையவர் அரக்க ராலே உற்றன இடும்பை எல்லாம்
உமையொரு பாகத் தானுக் கொழிவின்றி உரைத்த வாறும்
நமையடைந் தவரை நாமே கொல்கைநன் றன்று நாகத்
தமர்துயில் அரிபால் சொல்மின் என்றவன் அறைந்த வாறும் 30

அந்தமந் திரத்தை நெஞ்சில் கொண்டுதம் அல்லல் எல்லாம்
செந்திரு மகள்கோ னுக்குத் தேவர்கோன் செப்ப உங்கள்
சிந்தைநோய் தீர்ப்பன் திண்ணம் எனஅருள் செய்த வாறும்
வந்துசா ரணர்தாம் கூற மாலிய வானுட் கொண்டான் 31

தம்பியர்க் குற்றதெல்லாம் தான்உரைத் தவரும் தானும்
வெம்பிய மனத்தர் ஆகி மேற்செயும் வினைகள் தேர்வார்
அம்புயக் கண்ணன் தன்மேல் ஆயில்ஓர் குற்றம் இல்லை
உம்பர்கோன் அவன துள்ளந் திருத்தியுட் படுத்திக்கொண்டான் 32

ஆதலால் நம்மை எல்லாம் அடியற எண்ணும் அந்தப்
போத மிலாத தேவர் பொன்னகர் பொடிய தாகக்
காதிமற் றவரை எல்லாம் களப்படக் கொன்று மீளத்
தீதினம் சேனை முன்னே செல்கதேர் தருக என்றான். 33

வீரராய் உள்ளோர் மண்ணில் விண்ணு லகத்தில் யாரும்
நேர்எதிர்ப் போரை இன்றி நீங்கிய நிருதர் சேனை
போர்எனும் வார்த்தை கேட்டுப் பொங்கிய உவகை தூண்ட
ஆர்கலி உவாவுற் றென்ன ஆர்த்துமிக் கெழுந்ததன்றே. 34

எறிபடை வீரர் பாய்மா இருள்மதக் களிறு திண்தேர்
செறிதலிற் பெயர்ந்து செல்ல இடம்பெறு துள்ளே தேங்கி
மறிகடல் மோழை பட்ட தாம்என வாயி ரேறும்
உறுபடை வெள்ளம் தள்ளிப் பரந்ததெவ் உலகும் உட்க 35

இடர்உறு கருமம் பார்த்தோம் என்னகா ரியஞ்செய் தோம்என்
றுடல்நடுங் கும்பர் எல்லாம் ஒளிப்பிடம் தேடி ஓடப்
புடைபரத் துயர்ந்த வாயில் போக்கிடம் பெறுது வானில்
தடமுகில் தாவிப் பாய்ந்து பரந்தது தானை வெள்ளம். 36

காலிடை அணிந்த வீரக் கழலினம் கவசம் இட்ட
கோலநீள் மார்பர் பட்டங் குலவிய நுதலர் கொற்ற
மாலிய வானு மற்றைச் சுமாலியும் மாலி தானும்
நீலமால் வரைகொள் மொய்ம்பர் ஏறினர் நெடும்பொற் றிண்தேர்.

தேர்ஒலி கொம்பு காளம் செறிவளை சின்னம் ஊதும்
பேரொலி முழங்கும் பேரி முரசொலி பெருங்கை வேழக்
காரொலி கவன மாவாம் காற்றெலி எல்லாம் கூடி
ஓரொலி ஆகி எங்கும் உற்றதெவ் உலகும் உட்க, 38

பண்ணுறு பாய்மா வேழம் படர்கொடி நெடுந்தேர் காலாள்
எண்ணுறு சேனை ஆகி விரிந்தவர் எழுந்து பொங்க
விண்ணுல காய தெல்லாம் வெளியிடம் இன்றி விம்மி
விண்ணுல காகும் வண்ணம் செறிந்தது வளர்ந்த தூளி. 39

உதிரமும் என்பும் மேகம் பொழிந்தன ஓங்கல் கம்பித்
ததிர்படா காச மோங்க அன்னதுன் னிமித்தங் கண்டு
மதியினில் கொண்டு மீளார் வாள்எயிற் றரக்கர் உந்தும்
விதியினை வெல்ல வல்லார் யாவரே வினையம் எண்ணி. 40

அரக்கரா ரம்பம் எல்லாம் அமரர்கள் விடுத்த தூதன்
உரைத்தலும் உறக்கம் நீங்கி உணர்ந்தெழுந் துவணப் புள்ளின்
வரைத்தடந் தோளில் ஏறி வானவர் வாழ்த்த வந்து
செருக்கின படையை வந்து தாக்கினன் திருவாழ் மார்பன். 41

துன்னணி கலம்பொற் சோதி சுடர்ஒளி மறைத்துத் தோன்றத்
தன்னெதிர் இல்லான் தோளில் தோன்றிய சார்ங்க பாணி
பொன்னெடு மேரு உச்சிப் பொருசிலை யோடுங் கூடி
மின்னெடுந் தழுவி நின்று விளங்குகார் மேகம் போன்றான். 42

வெற்றிசேர் வயின தேயன் விரிசிறை வேக வாயு
உற்றிட முறிந்த திண்தேர் உம்பல்தேர் பூண்ட பாய்மா
கொற்ற வாள் அரக்கர் எல்லாம் குன்றெனக் குலைந்து வீழ்ந்தார்
பற்றுறு பதாகை எல்லாம் பஞ்சுபோல் பறந்த தன்றே. 43

ஆயன நிகழுங் காலை அஞ்சனக் கிரியை முட்டித்
தோயதம் எல்லாம் மாரி சொரிவதோர் தோற்றங் காட்டித்
தீயவர் வளைத்த செம்பொற் சிலையினர் செறுத்து நோக்கி
மாயவன் தன்னைச் சூழ்ந்து வடிக்கணை தூவி ஆர்த்தார். 44

ஒண்டிறல் அரக்கர் சேனை யுவாக்கிளர்ந் தென்னப் பொங்கித்
திண்டடந் தேரு மாவும் சினமதக் கரியும் தூண்டித்
தண்டம்வாள் முசலம் கூர்வேல் சக்கரம் சூலம் பாசம்
மிண்டிபா லங்க ளாதி பெரும்படைக் கலங்கள் விட்டார். 45

தேவர்தேவன் அவ் வரக்கர்செய்தசெயல் கண்டுதன்னுள்நகை செய்துகைச்
சாவ மேருவை வளைத்து விட்டசத கோடி கோடிதழல் வாளியான்
பாவ காரியர் விடுத்த பல்படை அனைத்தை யும்பொடி படுத்தியம்
மூவ ரேவிவிடு மூள்பெரும் படையை மூட வாளிமழை தூவினான். 46

தேர் துணிந்தவுணர் தேர்க டாவினர் சிரந்து ணிந்தன துணிந்தமாத்
தார்துணிந்தமக முந்துணிந்த கட வெண்மருப் புடைய செம்முகக்
கார் துணிந்தமரு மந்துணிந் தகவ சந்து ணிந்தன துணிந்தவில்
போர் துணிந்தஅடல் வீரர்கால் கையுடல் பொன்முடித் தலை துணிந்தவே. 47

கொள்ளை வார்கணை துணித்தபேருடல் குரத்தி னில்பரி மிதித்தலும்
அள்ள லாய்உதிர ஆறு மண்டிட அமர்க்க ளத்தினிலை யற்றரும்
பள்ள மோடுபுனல் வெள்ளமாம்என உடைந்தடா நிருதர்சேனையுட்
கள்ள மேவியசு மாலிவில் வின்அணை கட்டி மாயவனை முட்டினான்.

எடுத்தவில்லினன் எறிந்தநாணினன் இடிக்குரப்பிய கடுஞ்சொலான்
மடித்த வாயினன் மதித்த நெஞ்சினன் இம் மாயன்வெங் குருதி அங்கையில்
குடிப்பன்என்றுசினம்வந்துமுந்கஉயர்குன்றுபோற்புரவிஒன்றுதேர்
முடுக்கி வந்துசர மாரியால் அரியை மூடினான் அமரர் ஓடினர். 49

நல்லை நல்லைவலி நன்றுநன்றுயிர் நடுங்கு போர்புரி உபாயம்நீ
வல்லைவல்லைஉனை ஒக்கும் வில்லிகளிம் மாநிலத் தில்இலை என்றுமால்
வில்லின் உந்துசர மாரியால்அவன் விடுத்த வெஞ்சரம் விலக்கிவெம்
பல்லவங்கள்கொடு பாகனைப்பரி கொன்று தேர்பொடி படுத்தினன்.

நேரழிந்தமர ரோடு தானவர்க ளோட வோடவிடு நீள்கொடித்
தேரழிந்துதமை யன்தளர்ந்துவினை செய்வதொன்றும் அறியாதிடிக்
காரழிந்தென விடித்து ருத்துவரு காலன்என்னவிடம் என்னவும்
ஆரமுந்துதிரு மார்பினையமர் மாலி வந்தெதிர் அடர்ந்தனன். 51

ஆனை பாய்புரவி தேர்நெருக்கிய அளப்பிலா அடல் அரக்கர்வெஞ்
சேனை சூழஉயர் தேர்கடாவிவரை மேல்கொள் சீயமென மாலிபோர்
வானதேயனெடுமாலுமா திரமும் மண்ணும்விண்ணு மறையப்பெருஞ்
சோனை மாரிஎன ஒய்விலாதசுடர் வாயின் வாளிமழை தூவினன். 52

அந்த வார்கணையை ஆதிநாயகன் அனைத்தையும்பொடி படுத்துநீள்
கந்தநாறுகுழல்மங்கைமாருடைய கண்கள்போல் கொடியஅம்பினல்
மந்த ராசலம் எனத்தி ரண்டபுய மாலி மார்புருவ எய்துதேர்
உந்து பாகனெடு வாசி நாசம்உற ஒன்ற லாத சரம்உந்தினன். 53

மார்பி னின்றுதிர வாறுமண்டிட மயங்கி ஓல்லையின் உணர்ந்துதன்
தேரின் நின்றும்இழி யக்குதித்து வெகுள் சீய மாம்என முழங்கிவெங்
காரின் நின்றிடி விழுந்தெனச்சுரர் கலங்கிடக் கலுழன் நெற்றிமேன்
மூரி நின்றதொரு தண்டுகொண் டதிர மோதினன் அசுபம் ஓதினன்

நெற்றி மேல்அடி படத்த ளர்ந்துநிலை நின்ற வீரன்நிலை கண்டுமால்
வெற்றி நேமியை விடுப்ப மற்றது விளங்கு மாறிருவ ரன்றியும்
மற்றும் ஓர்இரவி உண்டெ னக்கதுவ மாலி வன்சிரம் முடிக்கழுத்
தற்று வீழஅது கண்ட வானவர்கள் ஆடினர் நிருதர் வாடினர். 55

மண்ட லங்கிழிய வாளரக் கர்கள் மயங்கி வீழவட வெற்பொடும்
திண்த டங்கிரிகள் விண்டிடத் திகழ் திசைத் தடங்கரி திகைத்திட
அண்டம்விண்டதென அஞ்சி வானவர் அலம்தலைப் படஅகண்டமும்
உண்டசெம்பவள வாயில் வைத்துவளை ஊதினன் மறைகள்ஓதினன்.

மாலி பட்டுவிழ மற்றவன் தமையன் மார்கள் சோகம்உற மாயவன்
கோலி விட்டசுடர் நேமி யாலும்இரு கூர்அயில் கணைக ளாலுமா.
ஆலம் ஒத்தகதை யாலும் வாளினும் அரக்கர் தம்படைஅவிந்ததால்
வேலி அற்றபயிர் காலி உற்றெனவும் வேந்தர்இல்உலகும் என்னவே

வெற்றி மேவுதிகழ் சக்கரத்தின்மிசை விண்ணில்ஏறுவனவீழ்குவார்
அற்ற பைந்தலைகள் உற்ற வீரமகள் ஆடும் அம்மனையை ஒத்தவால்
கொற்ற வெண்குடையின் அற்ற திண்கைஅவை சென்று வீழ்வதுளிர் திங்களைப்
பற்றி ராகுவினை ஒத்த பாறுகள் பரந்த கூளிகள் நிரந்தவே. 58

வெஞ்சுடர்க்கணை துணித்தசெந்தலைகள் மீளவவ்வழி முளைத்தபோ
லுஞ்ச டக்கென எழுந்தவெங் குருதி ஓதவேலை யினை உற்றதா
மஞ்ச டக்கிய நிறத்தன் நேமிபதம் வன்கரம் சிரம் அறுப்பஉள்
அஞ்ச டக்கிய கிடக்கு நீலநிற ஆமை ஒத்தனர் அரக்கரே. 59

கால்கள்அற்றஉரல் ஒத்தவில் சுளகு கன்னம்ஒத்தலில் உரோமநீள்
வால்கள் அற்றன துடைப்பெனக்கதிர்மருப்புலக்கையெனஒத்ததால்
மாலை ஒத்தநிற மால்செயக்கொடி மலர்க்கைபற்றுவ துவைக்குமுன்
கோலி நெற்குறும் இடத்தை ஒத்தமத குன்றுபட்டு விழு சூழலே. 60

குன்றின் மேல்இடி விழுந்தெனக் கதை கொதித்து மோதஉயர் கொற்றமா
ஒன்று தேர்கள்பல தூளிஆயின உலைந்த யானைகள் மலைந்தபோர்
வென்றி வீரர்கள் கரும்புபோல் உடல் நெரிந்து போயினர் விளங்குசீர்க்
கன்று வாளில்ஒரு கண்ட நூறுபல கண்டமாயினர்கள் கண்டரே. 61

அடு மாலிஅவ் வான்ஏகிட அடையார் உயிர் தளரக்
கடு மாலிய வான்அவ்வழி கடிதோ டிய காலைக்
கொடு மாலிய வான்சேனையும் தோற்றோ டிடக் குலையா
நெடு மாலிய வானின்றென நின்றான் பகைவென்றான், 62

கட்டேறு சுமாலிப்பெயர் கண்ணன் தனை அணுகாக்
கெட்டோ டிய படைகொன்றனை கிளர்வீரரில் எண்ணப்
பட்டோய் அலை உலகில்பெரும் பழிபூண் டதோர் நெறியை
விட்டோர் செயல் செய்தாய்இது கேள்நீ என விளம்பும். 63

பொர விட்டமி லாதோர் அமர் புறகிட்டவர் விழுந்தோர்
கரம் விட்டவெம் படையோர்அமர் கைவிட்டவர் தூதாய்
வர விட்டவர் அலிமங்கையர் வன்னோ யருன் உறவென்
றுரை யிட்டவர் இவர்வெங்கொலைக் குரியோர் அல உரவோய். 64

தடந் தோள்நிரு தன்கூறிடத் தாமோதரன் மொழிவான்
உடைந் தோடியு மக்கஞ்சி ஒளித்தும்பர்கள் எனைமுன்
அடைந் தோர்களுக் கமர்அஞ்சியும் அழிந்தோடினும் உமைநான்
தொடர்ந் தேகொல முன்பேவரங் கொடுத்தேன் எனச்சொன்னான்.

தன்னோ டிணை இல்லாதவன் தான்இங் கிவை கூற
நின்னோ டமர் புரிவான்தனி நின்றேன் நிலைபேரேன்
என்னோடெதிர் பொரவாஎன நிருதன் இடித் துரப்பா
மின்னோடிய ஒளிவேலினை விடுத்தான் அறங் கெடுத்தான். 66

வெவ் வேலையில் விடநுங்கிய விமலன்தரு குமரன்
கைவ் வேலொடு வலிஒப்பது கனலாம் எனக் கனலாச்
செவ்வே திகழ் திருமார்பிடைச் சென்றங் கெதிர் உதைப்ப
அவ் வேலினைப் பிடித்தச்சுதன் அவர்மார் பிடை எறிந்தான். 67

அஞ்சத்தி அழைப்பக் கடி தணுகார் அருள் உடையோன்
கஞ்சத்திரு நயனந் திகழ் கரியோன் விடு கனவ்கால்
வெஞ்சத்தியர் அரம்பைக் கனி மேலூசியின் வெய்யோன்
நெஞ்சத்தின் நுழைந்தோட நெடுஞ்சத்தி தளர்ந்தான். 68

இறந்தான் இவன் எனவானவர் எழுந்தாடிடும் அளவில்
உறங்கா உணர்ந் தனன்போலவும் உணர்ந்தான் ஒரு சூலம்
அறங்காவலன் மிசையேவினன் அதுசென்றவன் மணிமார்
பிறங்கா எதிர் உதைத்தோடிட இகலோன்இது செய்தான். 69

கருவிற் கிடை கடியுங் கனை கழலான் கரு முகிறன்
உருவிற் கிடை ஒருவன் திரு உறத்துங் கவுரத்தும்
செருவிற் கிடை உயர்தோள் வலி செறிமுட்டி யிற்சாடி
ஒருவிற் கிடை உயர்ந் தவ்வழி உயர்வெற் பென நின்றான் 70

உடை யாவலி யினனச் சுதன் உருமே றென உரப்பா
இடை யாதெதிர் நின்றான்எறி கடல்வாய் விழ விற்கால்
படையா உற்று பெருங் காற்றினில் பொருதேர் கரி பரியாட்
படையானது பஞ்சாம் எனப் பறந்தோ டிட அறைந்தான், 71

மறிந்தார் சிலர் மலைபோல் பெரு வாடைச்சரு கிலைபோல்
செறிந்தார் சிலர் பிறிந்தார் சிலர் திகைத்தார் சிலர் வாயுப்
பறிந்தார் சிலர் பறந்தார் சிலர் பதைத்தார் சிலர் பணைத்தோள்
முறிந்தார் சிலர் நெரிந்தார் சிலர் சொரிந்தார் தலைமூளை. 72

கழிந்தார் சிலர் கடல் ஏழையும் கலுழன் சிறைக் காற்றால்
எழுந்தார் சிலர் அயர்ந்தார் சிலர் இளைத்தார் சிலர் ஏங்கி
விழுந்தார் சிலர் புரண்டார் சிலர் வெகுளாமிசை கொடுபோய்
அழிந்தார் சிலர் குருதிக்குழம் பளைந்தார் அடல் அரக்கர் 73

பாழிப்புயத் தரக்கன்பழி யொடுதம்பியும் தானும்
ஆழித்துயில் நெடுமால்படை ஐந்தாலும்அக் கலுழன்
ஊழிப்பெருங் காற்றாலும்இவ் உலகில் பிழைப்பரிதென்
றேழில்பெரும் பாதாளம டைந்தார்இகல் இடைந்தார் 74

முன்னோர் முழு வலி மாலிய வானேமுத லானோர்
தந்நேர் வலி பிறர்இல்லவர் தாஞ்சால கடங்கர்
உன்னேர் எதிர் மலைந்தோர் புலத் தியன் தன்வழி உள்ளோர்
என்றே இவை முனிபின்னும்இ ராமற்கிவை இயம்பும். 75

ஓரா அற நிருதக்குலம் ஒழியக் கடிதறுக்கக்
கூராழியி னற்கல்லது கூடாதிது குணத்தோய்
நேரே திரு நெடுமால் அது நீ ஆதலின் இவர்தம்
வேரோடற அறுத்தாய் பிறர் வேறார் இது செய்வார், 76

3 இலங்கை அழிந்த படலம் முற்றிற்று.

---

## 4. இராவணாதி பிறப்புப் படலம்

வேலை உண்ட மாமுனிவன் விரித்து விளம்பும் கதைகேட்டுக்
கோல மணிநீண் முடிதுளக்கிக் கொண்டல் வண்ணன் வியப்பெய்தி
ஆவம் அனைய இராவணன்தன் அவதா ரமும்ஆங் கவன்செயலும்
சால விருப்புற் றனங்கேட்கச் சாற்று கென்ன முனிசாற்றும். 1

பெருநாள் அரக்கர் பாதாளம் பேரா துறையுங் காலத்தில்
ஒருநாள் சுமாலி தன்மகளுக் குற்ற வரனைத் தேடுவான்
குருநாண் மதிபோல் முகத்தவளைக் கூடக் கொண்டிக் குவலயத்தில்
வருநாள் அம்பொன் மதில்இலங்கை மன்னன் குபேரன் வரக்கண்டான் 2

காதற் குருசெவ் வழிகாட்டக் கற்குந் தோறும் மிகப்பெருகும்
போதத் தளவும் பெருகிடத்துப் புட்பகத்தின் மிசைஏறி
வேதத் தலைவர் இயக்கர்திகழ் விண்ணோர்சூழ வருவானைக்
கோதில் குணத்துத் தாதையிடம் கூடும்ஆசை உடையானை. 3

திக்கு நிகழ்இந் திரன்இயமன் சீரார் வருணன் குபேரன்என
ஒக்க எண்ணும் தரத்தானை ஒளிசேர் சங்க பற்பநிதி
பக்கம் வந்து சேவிப்பப் பண்டு செய்த தவத்தானைத்
தொக்க மணிநீண் முடியானைச் சுமாலி கண்டிங் கிவைநினைந்தான். 4

வலியார் எல்லாம் கீழ்ப்பட்டு மற்றை யவரே மேற்பட்டுப்
புலிவாழ் இடத்தே பசுஉறைந்து போரார் ஆழித் தேராராய்
அலியாம் அவனே ஆளுகி அஞ்சா திலங்கை அரண்புகுந்து
நலிவார் இன்றி உலகாள நங்கண் ணாலே கண்டோமே. 5

என்று நினைந்து தன்மனத்தில் எழுந்த வெறுப்பன் பாதாளம்
சென்று புக்குத் தமையனுடன் செய்யுங் கருமம் தேர்ந்தெண்ணி
வென்றி வேல்வில் பிறைபவளம் விளங்குந் தரளம் திகழ்வதெனத்
துன்று குழல்தன் மகள்தன்னை சுமாலி கண்டிங் கிவைசொன்னான் 6

தக்க குணத்தோய் பெண்பிறக்கத் தந்தை குலமும் தாய்குலமும்
புக்க குலமும் இவைவிளங்கும் பூமேல் இருந்த பொற்பாவை
ஒக்கும் உருவம் உடையாளே உன்னா லேநம் குடிவிளங்கும்
மக்கள் உண்டாம் புலத்தியன்தன் மகனை வரனாய் வசிஎன்றான். 7

தந்தை உரைத்த இம்மாற்றம் தலைமேல் கொண்ட தடங்கண்ணாள்
எந்தை குறையை யான்முடிப்பன் இதுநன் றாக தீதாக
வந்த வண்ணம் வருகஎன மனத்துட் கொண்டு மாமறைதேர்
சந்த மலரோன் மகன்மகன்சேர் தானம் அதனைத் தான்உற்றாள் 8

சுத்த முனிதீத் தொழில்முடித்துச் சுடர்த்தீ நாலுண் டெனத்தோன்ற
வைத்த கலச மாமுலையாள் வணங்கி நின்று மலர்க்கமலம்
ஒத்த சரணப் பெருவிரலான் ஒல்கி நின்று நிலங்கீறி
மைத்த குழலாள் மற்றவன்முன் மலர்மேல் மடந்தை எனநின்றாள். 9

அன்னஅவளை அருமறையோன் அருளின் நோக்கி யார்மகள்நீ
என்ன கருமம் போந்ததுபேர் என்னென் றுரைக்கச் சுமாலிதரு
கன்னி பெயர்கை கசிவந்த கருமநீ கண்டு கொள்ளென்ன
மின்னின் இடையாள் கருத்தறிந்து வேதமுனிவன் இவைவிளம்பும்.

மைந்தர்ப் பெறநீ காதலித்து வந்தாய் வந்த காரியத்தைச்
சிந்தை எண்ணி நீஎன்னைச் சேர்ந்த காலம் தீதுன்கண்
வந்த குமாரர் வரத்தாலும் வடிவினாலும் கொடியோராய்
இந்த உலகை இடர்செய்வார் என்ன மின்னேர் இடைவிளம்பும். 11

உன்னைஅடைந்துன் அருள்பெற்றால் உன்தன்குணத்துக் கொவ்வாத
அன்ன குமரர் உண்டாக லாமே என்று யிழைகூற
வன்னி அனைய சீற்றத்துன் வயிற்றிற் பிறந்த மைந்தர்களில்
பின்னை யவன்பே ரறிவுடையான் ஆகும்என்றான் பெருந்தவத்தோன்.

இத்தத் துவங்கள் உரைத்தமுனி இரவி குடபால் திசைவீழும்
அத்தமான பொழுதினில்ஆங் கவளை அன்பால் நினைந்தணையப்
பத்துத் தலையும் பத்திரட்டித் தோளும்ஆகப் பார்ஒடுக்கும்
சத்தித் திரள்தோள் தசக்கிரிவன் தான்வந் துதித்தான் தரைநடுங்க

நறையார் குழலாள் தன்வயிற்றின் ஞாலம் அடங்க விழுங்கிடினும்
நிறையா வயிற்றன் நெடும்பசியன் நீண்ட ரூபன் நிமிர்கையன்
பிறையார் எயிற்றுப் பிலவாயன் பெருத்த விழியன் ஒருக்காலும்
குறையா தெழும்பும் பசியோடும் கும்பகன்னன் பிறந்தனனால். 14

பண்ணார்மொழியாள் தன்வயிற்றில் பருத்தஇடையும் பருங்கழுத்தும்
விண்ணார் மேகத் திடிஎன்ன வெடிக்குங் குரலும் உடையாளாய்க்
கண்ணார் புகையும் கனலும்எழக் கனற்கட் காலன் கருக்குலையப்
பெண்ணாய் உலகம் நடுங்கவந்து பிறந்தாள் பெரிய சூர்ப்பநகை. 15

மன்னோர் தவத்துப் புலத்தியன்தன் மரபு விளங்க மறைவிளங்கத்
தன்னேர் இல்லாத் தந்தைக்குத் தக்க மகனாய்ச் சண்டாளர்
அன்னோர் முன்னோர் அவர்கிடந்த அந்தவயிறு சுத்தம்உற
மின்னோர் இடையாள் தன்வயிற்றில் விளங்கும் புகழ்வீ டணன்பிறந்தான். 16

பாதமறைவெவ் வரவுக்குப் பாலும்நெய்யும் புகட்டிடினும்
வாதைசெய்யும் மாவிடமே வளருமாபோன் மனுநூலும்
வேதம் அவைஓர் ஆயிரமும் விளங்கும்கலையும் தசக்கிரிவன்
ஓதஓதப் போதங் கெட்ட போதமான ஓங்கியதே. 17

ஒத்தகுணத்துக் குடிப்பிறந்தோர் ஒழுக்கங் கெட்டிவ்வுலகத்து
வத்தியாமை புலத்தியன்தன் வழிவந்தோர்பால் கைகொண்டோம்
குத்துவாதை மிகமெலிந்து கும்பகருணன் குவலயத்தில்
சுத்தராய முனிவரையே கொன்று தின்னத் துடங்கினான். 18

வசையின் மறையோர் குடிப்பிறந்தும் மாதாகுலத்தின் வழிநின்றே
அசைவில் ஆற்றல் சூற்பநகி ஆணைப் பிறந்தார் பின்தொடர்ந்து
பசையும் நெஞ்சர்தமைஎல்லாம் பத்தாவாக வசீகரித்தங்
கிசைவிலாதார்தமைஎல்லாம் எடுத்துப் புடைத்துத் தின்னுமால், 19

பொய்யுங் களவும் பாதகமும் பொல்லா ஒழுக்கும் இவைகடிந்து
மெய்யும் தயாவும் தருமமுடன் விளங்கும் பொறையும் இவைபூண்டு
செய்யும் செயல்கள் அவைஎல்லாம் சிட்டர் செய்யும் செயலாகி
அய்யன் புகழ்வீ டணன்மறைகள் அறைந்த அறத்தின் வழிநின்றான்·

அந்த வனத்தில் அந்நால்வர் அந்த வழியே ஒழுகுநாள்
எந்தை சரண இணைபணிவேன் என்னும் ஆசை தனைஉந்த
வந்த மகனைக் கைகசிதன் மலர்க்கண் ணாலே நோக்கித்தான்
தந்த திரள்தோள் தசக்கிரிவன் தனக்குக் காட்டி இவைசொன்னாள்

நலஞ்சேர் தவத்துப் புட்பகமும் நாடற்கரிய நிதி இரண்டும்
சலஞ்சே ராத தவத்தாலே சாதித் துடையோன் நின்தமையன்
வலஞ்சேர் திண்தோள் மைந்தாநின் வழிஉ ளோர்கள் முன்னாண்ட
இலங்கை நகரை ஆள்கின்றான் இவன்காண் இப்போ தெனஉரைத்தாள். 22

என்று தாயர் இவைகூற எயிற்றி னாலே இதழ்அதுக்கி
ஒன்று தவத்தால் இவனோடே ஒத்தல் செய்வென் நான்என்னக்
கன்று மனத்தாய் தனைத்தேற்றிக் கறுவு மனத்தன் அநுசரொடும்
குன்று புரைதிண் புயத்தரக்கன் கோகன் னவனங் குறுகினனால்.

கும்ப கன்னன் ஐந்தீயுள் கொதிக்குங் காலத் திடைநின்றும்
உம்பர் நடுங்கக் கார்காலத் தோவா மழையின் உடல்நனைந்தும்
தம்பம் ஒருநீ ராசனத்தும் சலியா திருந்தும் சயித்தியத்தில்
அம்பின் முழுகிக் கிடந்துமன்றும் ஆண்டுபதினா யிரங் கழித்தான் 24

திரிகால் உணர்விற் செய்தவத்தோர் திகைக்க ஐயா யிரத்தாண்டும்
ஒருகால் போல ஒருகால்மண் ஊன்றி ஒருகால் எடுத்துமன்றும்
எரிகால் இரவி மண்டிலமே நோக்கி இருகை களும்எடுத்து
வருகா லங்கள் வீடணனும் வருடம்ஐயா யிரங்கழித்தான். 25

ஒரா யிரத்தாண் டுபவசித்துக் கழித்த ஓரோர் தலையாகச்
சீரார் சிரம்ஒன் பதுந்தடிந்து செந்தீ யிடைஆ குதிபண்ணிப்
பேரா உவவா சத்தினனாய்ப் பின்னும் ஓரா யிரத்தாண்டில்
தாரார் மற்றைத் தலைதடியல் உற்றான் பற்றித் தசக்கிரிவன், 26

அன்ன காலை அயன்தோன்றி அவனை நோக்கி அருந்தவத்தின்
நின்னை ஒப்பார் நீஅன்றி ஒருவர் இல்லை நின்கரத்தால்
முன்னை அரிந்த தலைஎல்லாம் முன்பு போல முளைத்திடுக
என்ன அவைதாம் பண்டையிலும் எழிலுண் டாக எழுந்தனவால்.

பின்னும் சொல்லும் பிதாமகன்தான் பெருகுந் தவத்தோய் நீஇங்குச்
சொன்ன வரந்தான் தருவன்நீ சொல்என் றுரைப்பத் தொல்புவியில்
மன்னு மனிதர் தமைப்பொருளா மனத்தின் நினையான் வாள்அரக்கன்
உன்னும் பொருள்ஒன் றொழியாமல் வேண்ட விரிஞ்சன் உவந்தளித்தான் 28

தரும சீலன் வீடணன்மெய் தழுவி நின்று தவஞ்செய்த
அருமை கண்டு வியப்பெய்தி ஆதி முதல்வன் வெளிப்பட்டுன்
இருமை பொருந்தும் உள்ளத்தின் இயைந்த வரம்வேண் டுதிஎன்னக்
கருமை சேரா உள்ளத்தோன் கருதி இனைய கட்டுரைத்தான். 29

நல்லாய் அறத்தைக் கைவிட்டு நடுங்கும் இடும்பை வரினும்நான்
பொல்லா தனசெய் யாதொழியப் போரிற் பிரமா திகள்என்னை
வெல்லா தொழிய இவ்வரங்கள் வேண்டும் என்ன விரிஞ்சன்அவை
எல்லாம் பெறுதி என்றென்றும் இறவா தொழிக நீஎன்ருன், 30

கும்ப கன்னன் தவங்கண்டு குலைந்தீங் கிவனே வரங்கொள்ளின்
தம்பம் இல்லை நமக்கென்று தடுமா றியசிந் தையாகி
உம்ப ரோடு தானவரும் உயர்மா தவரும் ஒத்தீண்டி
எம்பி ரானே கேட்டருள்என் றிறைஞ்சி அயனுக் கிவைசொன்ஞர்,

படைத்தாய் ஆதி பல்உலகம் பறிப்பான் கையில் சிற்றரிவாள்
கொடுத்தாய் ஆகின் முன்னமே கொடிய கும்ப கன்னனுக்கு
வடுத்தான் இல்லா இவ்வரங்கள் வழங்கி ஞயேல் எங்களையும்
கெடுத்தாய் ஆதி எனத்தேவர் கிளத்த அயன்இங் கிவைசெய்தான்.

சொல்லார் கலைக்கு நாயகிதன் தூய கமல முகம் நோக்கிப்
பொல்லா ஒழுக்கம் இவைபூண்டு புவன மூன்றும் பொடிபடுத்த
வல்லான் கும்ப கன்னன்எனை வரம்வேண் டுங்கால் அவன்வாய்நின்
றெல்லாம் பிழைக்கத் துயில்வேண்டும் என்ன நீநின் றியற்றென்ருன்

இந்தப் படிக்கு நாமகளை இயைவித் தடவி இருந்தவஞ்செய்
அந்தக் கும்ப கன்னனிடை அமரர் சூழ அயன்வந்துன்
சிந்தைக் கியைந்த வரம்தருவென் செப்பென் றுரைப்ப நாமகள்நா
உந்தத் துயில்வேண் டுவன்என்னப் பெற்ருய்என் றங் கவன்போஞன்.

அள்ளல் மடுவின் மூழ்கித்தாம் அரும்பட் டினிவிட் டலமந்தும்
உள்ளந் தூயர் அல்லாதார்க் கொருகா ரியமும் பலமாகா
கள்ள மனச்செய் தவக்கும்ப கன்னன் கருதும் வரங்கொடுக்கும்
வள்ளன் மலரோன் இடைப்பெற்ற வரத்தான் மாருத் துயில்பெற்ருன். 35

சந்த மலரோன் போனதற்பின் தடந்தோட் கும்ப கன்னன்தன்
சிந்தை தெளிந்திங் கிவைஎல்லாம் தேவர் செய்த மாயைஎன
நொந்த மனத்தான் முன்ஞேற்கும் நுண்ணூல் உணர்ந்த பின்ஞேற்கும்
வந்த துரைத்துப் பின்னவர்க்கும் வளர்சீர் செல்லும் வனமடைந்தார். 36

✤ ஆங்கவர்கள் பெற்றுடைய வாழும்ஆண் மையும்வலியும் அடங்கக் கேட்டுப்
பூங்கமலக் கண்ணனுக்குப் போர்தோற்றுப் பாதாளம் புக்கு வீழ்ந்த
ஓங்குபுகழ் மாலியவான் சுமாலிஎனப் பேர்பெற்ருேர் உள்ளிட் டோர்கள்
தாங்கரிய பேருவகை தள்ளப்போய்த் தசக்கிரிவன் தன்னைச் சார்ந்தார். 37

கொலை எடுத்த குன்றென்னக் குவவுத்தோள் தசக்கிரிவன் கும்பகன்னன்
கலைஎடுத்து வளர்ந்தோங்கும் வீடணன்என் றிங்கிவரைக் கண்ணில் நோக்கி
அலைஅடுத்த கடற்றுயிலும் அச்சுதனுக் கமாழிந்த அரக்கர் எல்லாம்
தலைஎடுக்கப் பிறந்தீர்கள் வருகவென உயிர்பொருத்தத் தழுவிக் கொண்டார்.

அன்னவர்கள் இனிதிருந்த அக்காலைத் தசமுகனைச் சுமாலி நோக்கி
முன்னமரில் தாமெல்லாம் முகில்வண்ணன் தனக்கஞ்சி முடுகிட் டோடிப்
பன்னகநா டதுவாய பாதாளம் புக்கமையும் தாம்பண் டாண்ட
பொன்னகரி யிடைத்தனதன் புக்குவீற் றிருந்தமையும் பொருந்தச் சொன்னான்.

தண்உய்க்கும் தடமலரோன் வழிவந்த தசக்கிரிவன் நாமுன் ஆண்ட
மண்ணுக்கும் பலர்அறிய மணம்புக்கு மனையாளாய் வருக்கப் பட்ட
பெண்ணுக்கும் படாதார்கள் பெருவாழ்வில் பிச்சையே நன்று காண்போம்
கண்ணுக்கும் பொறிப்பறக்கக் கடல்இலங்கை ஆள்கின்றான் குபேரன் காண்டி.

தேனத்தார் திகழ்மார்பன் தென்இலங்கை ஆள்கின்றான் குபேரன் சேர்ந்த
மானத்தால் உனக்கந்த வளநகரி விடுகலான் சாம பேத
தானத்தால் தாரானேல் தண்டத்தால் கொள்ளுதிநீ கொள்ளா யாகில்
வானத்தார் நகைசெய்வார் மாசுண்ணும் நின்வலியும் வரமும் என்றான். 41

என்றுதாய் தந்தைதனக் கியம்பியசொல் கேட்டதசக் கிரிவன் நேரே
இன்றெனக்கு மூத்தானை இகல்செய்யு மாறெவன்கா ணென்று கூறத்
துன்றுபுயப் பிரகத்தன் சுற்றமது பார்ப்பாரோ துரந்துபோரில்
அன்றுபிரா தாக்களாம் அசுரர்குலம் அறுத்திலரோ அமரர் என்றான்.

என்றுதனக் கவன்இயம்பக் கேட்டதச முகன்தனக் கியைந்து நீபோய்ச்
சென்றுதன பதிக்கிதனைச் செப்பிவா வெனவிடுப்ப அவனுஞ் சென்று
குன்றுபுரை மணிமாட கூடகோ புரஇலங்கை குறுகிச் சீறில்
தன்துணைபி லான்தனக்குச் சாமவா சகங்களையே தகுவச் சொன்னான். 43

உன்னுடைய தம்பியாம் உயர்வரைத்தோள் தசக்கிரிவன் உரைத்தகேட்டி
முன்இலங்கை நகர்ஆண்டோர் மாலியவான் முதலாய மூவர் மூத்தோன்
அன்னகருக் குரியோர்கள் யான்அன்றிப் பிறர்இல்லைப் பேசிப் பேணி
என்உறவு வேண்டுமேல் இலங்கைநகர் தருகஎனக் கென்று சொன்னான். 44

அன்னவா சகங்கேட்ட அருநிதிக்கோன் வருங்கருமம் மனத்தின் ஆராய்ந்
தென்னரசும் என்பதியும் என்தம்பி யினதென்றே எனக்கென் தம்பி
சொன்னபடி செய்வன்எனச் சொல்லிவிடுத் தவன்தனக்குச் சொன்ன வெல்லாம்
தன்னுடைய தாதைக்குத் தான்கூறக் கேட்டந்தத் தவத்தோன் சொல்லும்.

முன்னாளில் என்னுடைய மூதாதை ஆண்டநகர் இலங்கை என்று
பன்னாளும் எனக்குரைப்பப் பழியான காரியமீ தொழிதி என்று
சொன்னாலுங் கேளான்அத் துன்மதியோன் தசக்கிரிவன் அவனுக் கானேன்
என்னாதே மைந்தஉனக் கிதமான காரியங்கேள் என்னச் சொன்னான். 46

* திசைமுகன் வரம்எனும் வலிகொடு திசைதொறும்
வசைமுகம் வளர்தர மகிதல நலிதரு
தசமுகன் வழிநகர் தனைவிடு தரணியில்
இசைமுகம் வளர்தர எனமுனி இவைசொலும். 47

குடதிசை குணதிசை குழுவிய குரைகடல்
இடைஅமை இருதலை இமையம தெனும்மலை
வடதிசை உளதது மலைஅர சிதுஎன
இடமுடை உலகவர் இடுபெயர் உடையது. 48

மயில்இயல் உமையினை மகள்என உடையது
குயில்மொழி அவளொடு குளிர்சடை அரன்உறை
கயிலையை ஒருபுடை உடையது கதிரவன்
வெயில்நுழை வருமரம் மிடைதடம் உடையது. 49

பகுமுக மொருதிசை பகிரதி இழிதரு
மொகுமொகும் எனும்ஒலி முழவொலி அதுதர
அகமகிழ் அறுபத அளிஇசை முரல்தர
மிகமயில் நடம்உறும் விரிபொழில் உடையது. 50

எறிகதிர் மணிமுடி இமையவர் பொழில்உடை
வெறிமலர் மதுநுகர் விரிசிறை மதுகரம்
உறுதலு மதுநுகர் இவர்என உவகையொ
டறுபதம் எதிர்கொளும் அரவம துடையது. 51

மலைதனின் இனமென வரிஅர வெழுமதி
குலைகுலை தருமுயர் குடுமிய துறவளி
கலகல வெனஎழு கழையொலி யொடுபுனல்
சலசல வெனவிழு தடவொலி உடையது. 52

இனையன எழிலுடை இமையம தெனுமலை
தனைஉறு கிளையொடு தழுவுதி தழுவிய
பினைஅதன் இடைவளர் பெருநிதி யொடும்இரு
எனமுனி இவைசொல இசைமனம் உடையவன். 53

*எந்தை உரைத்தது செய்வன்எனத் தனதன் கிளையொடும் இலங்கைவிட்டுச்
சிந்தையினுங் கடுந்தெய்வத் தேரேறித் திகழ்இமயக் குன்றஞ் சேரத்
தந்திரமாக் கடல்சூழத் தசக்கிரிவன் தன்னகரி வந்து சார்ந்து
மந்திரிகள் முடிசூட்ட மாமணியார் மண்டபத்தின் மகிழ்ந்திருந்தான். 54

உழன்றதுயர் உம்பருக்காய் உலகனைத்தும் உண்டுமிழ்ந்த ஒருவன் முன்னுள்
அழன்றிலங்கை பாழாக்க அன்றுமுதல் பாதாளம் அடைந்து ளோர்கள்
இழந்ததனம் பெற்றவர்போல் இராக்கதர்கள் இனரத்தீண்டி இழந்த தங்கள்
பழம்பதியில் குடிபுகுந்து பண்டுபோல் இனிதிருந்தார் பகையை வென்றூர். 55

தடையில்லா வலியில்லை அரம்பையர்க்கும் தம்முலைகள் தம்மைத் தாங்க
இடையில்லை என்னைப்போல் இமைப்பளவில் எவ்வுலகு முட்டி மீளும்
நடையில்லை எனப்பழிக்கும் நங்கைமடச் சூர்ப்பநகை நலத்தைக் கண்டு
விடஒல்லேன் எனவிரும்பும் வித்துருசிங் கேசனுக்கு விதியின் ஈய்ந்தான். 56

ஆங்கொருநாள் தசக்கிரிவன் அடவியிடை வேட்டைபோம் அளவில் ஆங்கோர்
தேங்கமழ்பூங் குழலியொடு திகழ்மணிப்பூண் மயனவனைச் சென்று சார
ஈங்கிவனை உடனேகொண் டியாவருமில் லாவனத்து வந்தா யாவன்
பாங்குபெற உரைஎன்று தசக்கிரிவன் பகரமயன் பகர லுற்றான். 57

தாமநெடும் புயத்தோய்யான் தயித்தியர்கோன் மயன்என்னத் தகுவேன் பண்டு
மாமலர்மேல் திருஒக்கும் வடிவுடைய கஞ்சனையை வானோர் ஈய
ஏமபுரம் என்பதெமக் கிருப்பாக யான்நிருமித் தவளும் நானும்
காமம்எனும் பெருங்கடலைக் கரைகாணு தைஞ்ஞூருண் டிருந்தகாலை. 58

அங்கவள்தன் அணிவயிற்றில் அவதரித்தாள் இவள்மண்டோ தரிஎன்பாளிம்
மங்கையுடன் பிறந்தோர்கள் மாயாவி துந்துமியாம் வலியின் மிக்கார்
இங்கிவள்தன் குணத்துக்கும் எழிலுக்கும் நேரொக்கும் வரனைக் காணு
தெங்கும்உழன் றிவ்வனத்தின்இடைப்புகுந்தேன் என்றுரைத்திங்கிவைபின்சொல்லும்

குலம்வேண்டும் என்றிருப்பார் குடிப்பிறந்தோர் வேதமுதற் குலவும் விஞ்சைப்
பலம்வேண்டும் என்றிருப்பார் தந்தைமார் பரந்தபெருஞ் செல்வமுள்ள
தலம்வேண்டும் என்றிருப்பார் தாய்மார்கள் எவ்வனமும் அழகும் சார்ந்த
நலம்வேண்டும் என்றிருப்பர் நாறுபூங் குழலியர்கள் நலத்தின் மிக்கார் 60

பண்புடைய குடிப்பிறப்பும் பழுப்பில்லாப் பேரழகும் பரந்தகேள்வி
நுண்பொருளும் நீர்ஒழியப் பால்நுகரும் அன்னம்போல் நோக்கித் தேரும்
ஒண்பொருளும் இந்நான்கும் உடையாரைக் கிடையாதிவ் உலகம்தன்னில்
பெண்பெறுகை தனைப்போலப் பெரிதுதுயர் கண்டிலேன் பேசுங் காலை, 61

பின்னுமயன் கூறுவன்நீ பேரெழிலும் எவ்வனமும் பேசவேண்டா
உன்வழியும் உன்பெயரும்உன்னலமும் தெரியஎனக்குரைத்தி என்ன
அன்னவனும் அயன்மைந்தன் மகன்மைந்தன் அணிஇலங்கா புரியைஆளும்
மன்னவன்பேர் தசக்கிரிவன் மறைகளோர் ஆயிரமும் வல்லன் என்றான். 62

திண்தடந்தோள் தசக்கிரிவன்இவைசெப்பச் சேயிழையை வளர்த்துவைத்துக்
கொண்டிருந்த பயன்பெற்றேன் எனமகிழ்ந்து குண்டிகைநீ ருதகஞ்செய்ய
எண்திசையும் போற்றுதிற லிராவணன்தா னரக்கர்குலம் எவரும்போற்ற
வண்டலருங் குழல்மண்டோ தரியைமணஞ் செய்ததற்பின் மகிழ்ந்துமாமன் 63.

தாளார்தண் தாமரையோன் தன்மேலை விடிஙுமவ னுயிர்கொண்டன்றி
மீளாவே லுங்கொடுத்து மயன்போக மெல்லியலை உடனேகொண்டு
தோளாறும்ஏழிரண்டும் கடர்முடிகள்ஈரைந்தும் பொலிந்துதோன்ற
வாளார்திண்படைசூழ மதிள்இலங்கை வளநகரின்மன்னன்புக்கான்.

மன்னன்வயி ரோசனன்தன் மகன்மகளாம் வச்சிரசு வாலைஎன்னும்
கன்னிகையை அணிவீரக் கழற்கும்ப கன்னன்கைப் பிடித்தபின்னர்
தன்னிகரில் கந்திருவத் தலைவன்சயிலூடணன்தான் தந்தவேற்கண்
மின்னிடையாள் சரமைதனை விளங்குபுகழ் வீடணனும் விதியில்கொண்டான். 65

இந்திரனும்சசியும்போல் இலங்கிழைமண்டோதரியும் தானும்ஏய்ந்து
சிந்தைஉவந் தனுபவித்துச் செல்கின்ற காலத்தே திருஅருள்பால்
வந்துத்தயஞ் செயுமைந்தன் மழைஇடித்த தெனவாய்விட் டழுதலால்அவ்
அந்தவலி மேகநா தன்எனப்பேர் இட்டனன்அவ் வரக்கர்கோமான்

பிறைஎயிற்றுப்பிலப்பேழ்வாய்ப்பெருவரைபோல் கருஉருவப்பிறழ்கண்திண்தோள்
துறுகழற்கால்தசக்கிரிவன் தோன்றலைஇம் மூன்றுலகும் சுடுவான்வேண்டி
உறுசுவைச்சோறூன்முதலாயுணவென்னும்சிறுகுளகையிட்டுமூட்டிச்
சிறுநெருப்பைப்பெருநெருப்பாய் வளர்ப்பான்போல் வளர்த்தார்செவிலித்தாய்மார்.

அன்னவன்தன்பின்பிறந்தோர் அதிகாயன்திறலக்க குமரன்வானோர்
பொன்னகரி பொடிபடுத்தத் தனித்தனியே பூணிக்கும் போரில்வீரர்
மன்னியசீர் வச்சிரச்சு வாலைகன்னி மணிவயிற்றில் வரைத்தோட்கும்ப
கன்னனுக்குப் பிறந்தோர்கள் கும்பனிகும் பன்கனிகா லகம்பனென்போர். 68

பனிகாய்செங் கதிர்ஒளியில் பன்மணிப்பூண் பொலிந்திலங்கும் பாலர்ஓங்கத்
தனிகானிற் றவஞ்செய்து சாதித்துப் பெற்றதுயில் தன்னைச்சாரக்
குனிசாபத் தசமுகனைக் கும்பகன்னன் தான்குறுகிக் கூறுவான்இங்
கினிதாக எனக்குறங்க எழின்மணிமண்ட பம்சமைப்பி என்னச்சொன்னான். 69

தென்னிலங்கை மன்னவனும் தெய்வதச் சனைஅழைத்து செப்பக்கேட்ட
அன்னவனும் அகலம்ஏழ் யோசனையாய் அதற்கிரட்டி நீளம்பெற்ற
பொன்னணிமண்டபமூன்று புவனத்தும்இல்லதுசெய் தமைப்பக்கும்ப
கன்னனது கண்டுவந்து நெடுங்காலம் கண்துயிலா நின்றகாலை. 70

4-வது இராவணாதி பிறப்புப் படலம் முற்றிற்று.

---

## 5. குபேரன் மேற்செல் படலம்

பூவயன்தரு வரத்தினுல் புயவலிச் செருக்கால்
ஆவதல்லதென் றறிகிலா அரக்கர்கோன் இயக்கர்
தேவர்மாதவர் சிதறிடத் துறந்துநல் லளகைக்
காவெலாம்பொடி செய்துவெங் களிறெனத் திரிந்தான். 1

அன்ன தன்மையர் அதிக்கிர மங்கள்கேட் டளகை
மன்ன வன்ஒரு தூதனை விடுப்பமற் றவன்போய்த்
தென்னி லங்கைநா யகன்தனை நோக்கிநின் தமையன்
சொன்ன வாசகங் கேள்எனத் தூதுவன் சொன்னுன். 2

சொல்லும் போதறன் இனியவை சூழவும் இருந்து
சொல்லு வோர்பெரி தந்தஅச் சொற்பய னினுத
சொல்லும் போதறக் கடுவதாய்ச் சொற்பயன் இனிய
சொல்லுவார் இல்லை சொன்னகேட் பார்களும் இல்லை. 3

மூத்து ளோர்கள்சொல் முனியலை முன்பினு தென்னும்
வார்த்தை உண்டது மனத்தினிற் கொண்டியான் உரைத்த.
ஆர்த்த வாக்கியம் என்றுகொண் டறம்வழு வாமல்
பார்த்துச் செய்வசெய் பழிபடு காரியம் செய்யேல். 4

தேவர் அந்தணர் தங்களைச் சீறிடும் தீயோர்
யாவ ராயினும் இம்மையில் கெடுவர்மேல் மறுமைப்
பாவ காரியர் புகுத்திடும் பழியொடும் புகுவார்
ஆவ செய்குவர் அவரொடும் பழிகொள்ளார் அறிவோர். 5

உம்பர் வானவர் ஆதியர் உனக்குடைந் துலகில்
தம்பம் இன்றியே தளர்ந்திடும் தன்மையுங் கேட்டேன்
வம்புசேர் பொழின் மாய்ந்ததுங் கண்டனன் தமியன்
தம்பி ஆகில்இத் தன்மைசெ யாதொழி தக்கோய். 6

இமையத் தைம்முக ஈசனை நோக்கியான் எழில்சேர்
சிமையத் துத்தவம் செய்கின்ற வேலையில் சிவனே
டுமையைக் கண்டிந்த உத்தமி யாவளோ எனஓர்
சமையத் தாங்கவள் முனிந்தெனைத் தழல்எழ விழிப்ப. 7

பார்த்த என்இடக் கண்ணது பற்பமாய் வீழ
வேர்த்து மெய்குலைந் தவ்விடத் திருக்கயான் வெருவிச்
சேர்த்த வந்திகழ் சிலம்பின்வே ருேர்இடம் சேர்ந்து
பேர்த்து முன்புபோல் பெருந்தவம் புரிந்தனன் பேணி. 8

அரிய தாம்விர தத்தின்நின் ருண்டிரு நூறும்
உரிய செய்வன ஒருதினம் போற்செய்து முடிப்ப
விரி பெருஞ்சடை விமலனும் சிவன்வெளிப் பட்டுப்
பிரிய ஞய்எனைப் பேணிநோக் கினன்இவை பேசும். 9

நின்னை ஒப்பவர் தவத்தினின் நீஅல்ல தில்லை
உன்னை ஒப்பவர் யானலா தொருவரும் இல்லை
நின்னை உத்தம தோழனாய் வேண்டுவன் நீயும்
என்னை ஒத்தவுன் தோழனாய்க் கொள்ளுதி என்றான், 10

மங்கை சீறிட மாய்ந்தநின் வாமநேத் திரமும்
பிங்க லந்திகழ் நிறத்ததாய்ப் பெறுதிநீ என்று
கங்கை சேர்சடைக் கறைமிடற் றோன்அருள் புரிந்தான்
இங்கி தென்னியல் இன்னமுங் கேட்டியால் இயம்ப. 11

வாச வன்முதல் ஆகிய வானவர் குழுவும்
ஈசன் அன்னமா தவம்புரி இருடிகள் எவரும்
கூசி நின்வலிக் கோடினார் கூடினார் உனக்கு
நாசம் எண்ணுவர் தசமுக நாடொறும் இருந்து. 12

அரக்கன் அன்னவை கேட்டலும் அழல்எழ உரைத்துக்
கரத்தி னோடுகை புடைத்துவெங் கனல்விழி காலப்
பரக்க நோக்கித்தன் பாடிருந் தவர்முகம் பார்த்தோர்
இரக்கம் இல்லவன் அவர்களுக் கிளைஇவை இயம்பும். 13

*பன்னப் பாரமில் பலநரி திரண்டொரு சிங்கம்
தன்னைக் கொல்லிய தன்மைபெற் றால்அன்ன தரத்த
என்னைக் கொல்லுவ தெண்ணுவ திமையவ ரோடும்
முன்னிப் பார்ப்பன பசுக்களாய் ஒழிவதாய் நிற்கும். 14

ஆசில்மா தவத்தோன் ஒப்பான் அளகையி லவனும்
ஈசன்தோ ழனும்இவை எல்லாம் என்முனே சார்ந்து
பேசுந் தூதனார் பெறுவன இவைஎன் வாளால்
வீசி னான்அவன் இருதுணி ஆகிமண் வீழ. 15

அன்ன கோபத்தவ் அரக்கர்கோன் அளகையில் அவனை
முன்னர் சென்றுநான் முட்டிஎன் மனச்சின முடித்துப்
பின்னை நின்றது செய்குவன் பெரும்படை எழுக
என்ன லுங்கடல் கிளர்ந்தென எழுந்தது சேனை. 16

கட்டி யிட்டபொற் கனைகழல் காலினர் கரிய
வட்டம் ஒத்தமா மேனியர் வயங்கிய வீர
பட்ட நெற்றியர் பணைத்ததிண் தோளினர் படர்மார்
பிட்ட போர்க்கவ சத்தினர் இராக்கதர் எழுந்தார். 17

தேர்கள் உற்றன செம்முகக் கரியினை நெருக்கப்
போர்ம தக்கரி புரவியை நெருக்கிடப் போரில்
வீர ரைப்பரி நெருக்கிட வீரர்கள் போகத்
தாரை பெற்றிலர் தங்களில் தனித்தனி நெருக்கி. 18

பாழி வாள்எயிற் றரக்கர்கோன் படைஎழு தூளி
ஏழு லோகமும் எய்திமீண் டிவ்வுல கத்தில்
ஆழி யானவை அடங்கலும் தூர்த்தள ருக்கிச்
சூழி மாதிரத் தும்பிகைத் தூம்புசெம் மியதே. 19

அன்ன மாப்படை அளகையை நெருக்கிட அரக்கர்
மன்னன் மாநிதித் தலைவன்மேல் கறுவுகொள் மனத்தன்
பொன்னின் வார்கழல் பொலிவுறக் காலிடைப் புனைந்து
மின்னு மாமணிப் பஃறலைக் கச்சரை விசித்து. 20

கூர்மை யிட்டவேல் விழியினர் குவிமுலைக் குறியும்
ஆர்வம் விட்டிலா ஆங்கவர் கண்களும் நெருங்கும்
சீர்கொள் வட்டமா மார்பிடைக் கவசமும் சேர்த்து
வீர பட்டங்கள் நுதல்தொறும் விளங்கிட வீக்கி. 21

உடன் துணித்தெழு படையினால் உலகுகீழ் இருப்ப
விடம் துடித்திடும் வெள்எயிற் றனந்தன்மெய் நடுங்கிப்
படம் துடித்திடப் பைம்பொழில் அளகைநா யகனுக்
கிடந் துடித்திட இராவணன் ஏறினான் இரதம். 22

மாயை வல்லனும் மகோதரன் வயப்பிர கத்தன்
தீய ராம்சுக சாரணர் திறற்புகைக் கண்ணன்
ஆய மாமன்மா ரீசன்அவ் அறுவர்தற் சூழப்
போயி னான்அவன் அளகையாம் பொன்னகர் நோக்கி. 23

சென்ற சேனையைச் செறிபொழில் அளகையைச் செறுப்ப
நின்று காப்பவர் நீசனும் தசமுகன் நம்மேல்
அன்றி வந்துநம் அளகையின் புறத்துவந் துற்றான்
என்று கூறமா டிருந்தவர்க் கியக்கர்கோன் இயம்பும். 24

அறிவி லாதவர்க் காவன சொல்லுவோர் அவரால்
இறுதி எய்துவர் என்னும்அ தின்றுகைக் கண்டோம்
உறுதி ஆயின துரைத்தனன் என்றுளத் துள்ளான்
மறுகி என்தன்மேல் வந்தனன் போர்க்குவாள் அரக்கன். 25

என்று வாய்மடித் தெரிவிழித் தரக்கர்தங் கோமான்
வென்றி வீரமும் வரங்களும் கெடும்படி விண்ணோர்
இன்று காண்பரால் எனஎழுந் திரும்பரி இரதம்
ஒன்று சேனைமுன் செல்கென உரைத்தனன் உரவோன். 26

✤அரக்க ரோடமர் என்றள காதிபன்
உரைத்த வாசகம் கேட்டலும் ஊழியில்
திரைப்பெ ருங்கடல் சீறி எழுந்தென
விரைத்து மண்டி எழுந்தது சேனையே. 27

மூரி மேகம் முழங்கின வாம்எனப்
பேரி பம்பை பெரும்பட கந்துடி
தாரை கொம்பணி சங்க முழங்கின
வீரர் வந்தணி வீதி நெருங்கினர், 28

தாள்க ளோடவர் தாள்தடு மாறின
தோள்க ளோடவர் தோள்கள் துறுமின
வாள்க ளோடயில் வாள்கள் மயங்கின
கோள்க ளோடு கொடிகள் பிணங்கின, 29

ஆனை தேர்பரி ஆள்அள வற்றன
சேனை சூழச் செறிகுழல் தேமொழி
மானை நேர்விழி மங்கையர் வாழ்த்திடத்
தான சீலன் தனபதி தோன்றினன். 30

திரைப் பெருங்கடல் மேற்கடல் சென்றென
அரக்கர் சேனை அளகைப் பெரும்படை
இரைத்து மண்டி எதிர்ப்ப இமைப்பிலோர்
வெருக்கொ ளும்படி வெம்போர் விளைந்ததே. 31

சென்று தாக்கின தேர்களும் தேர்களும்
கன்றி வேழமும் வேழமுங் காந்தின
ஒன்று மாவொடும் மாப்பொர உற்றன
வென்றி வீரரும் வீரரும் வெம்பினர். 32

கொற்ற வீரர் கொடும்படை ஏவிட
அற்ற கால்சிரம் அற்றன அற்றகை
இற்ற மெய்யும் இருதுணி ஆயின
உற்ற தாழி உதிரத்தின் ஓதமே. 33

ஆய காலை அளகைப் பெரும்படை
வீய நூறிய வெம்புகைக் கண்ணனும்
மாயை வல்ல மகோதர னும்முதல்
ஆய தீயோர் அழல்எழச் சீறினர். 34

ஏக வீரர் அரக்கர் இயக்கரைப்
போக நூறிப் புனல்பெருங் காற்றினல்
நாக மோழை யினும்புக நாடுபோர்
ஏக கண்டகன் என்போ னுரறினன். 35

ஆய வன்னிலை கண்டவ னேடடல்
மாயை யானவை வல்லமா ரீசனும்
தீய வன்சென்று தாக்கலும் திண்திறல்
சாய மோதினன் தன்கரத் தண்டினல். 36

மயங்கி வீழ்ந்து தெளிந்தமா ரீசன்தன்
தயங்கு பூண்வலி சாய்வில் இயக்கனைத்
தியங்கி ஓடத் துரந்தவன் சேனைமண்
முயங்கி வீழக் கதைகொடு மோதினன். 37

பற்ற லார்கள் படுகள அம்மியில்
கொற்ற மேவு தண்டென்னுங் குழவியால்
வெற்றி வேல்இலங் கேசன் வெகுண்டெழுந்
துற்ற சேனை உறுகுழம் பாக்கினன். 38

தானை எல்லாம் தரைப்படுத் துத்தமர்
ஆன தீய மகோதர னேடடல்
ஏனை யோர்புடை சூழ இராவணன்
வானை நோக்கிய வாயிலை முட்டினன். 39

வானி மிர்ந்த மதிதவழ் வாயிலோன்
மேனி மிர்ந்தெழு மெய்யினன் சூரிய
பானு என்னும் பெயரினன் பாதக
நீநில் என்றவன் வந்தமர் நேர்ந்தனன். 40

இலங்கு தோரண கம்பம் இருங்கையால்
நிலங் குலுங்கிட வாங்கி நிருதன்மேல்
விலங்கன் மேல்இடி வீழ்ந்தென வீசலும்
கலங்க லான்இலங் காபுரி காவலன். 41

இன்ன தோரண மேகொண் டரக்கர்கள்
மன்னன் மன்னு பெருவலி வாயிலோன்
தன்னை மெய்தெரி யாவகை சாடினன்
என்ன வீரனே என்றிமை யோர்சொல 42

ஏணின் மிக்கவன் வீழ இயக்கர்கோன்.
காண அப்படை கைகழன் றேடிடத்
தாணு ஒத்த புயத்தினன் தானைசூழ்
மாண பத்திரன் வந்து விலக்கினன், 43

விலங்கி ஆங்கவன் வெய்ய அரக்கரைக்
கலங்கி ஓடக் களப்படக் கொன்றிட
வலங்கொள் வைவாள் மகோதர னாதியோர்
சலங்கொள் சீயம் எனவந்து தாக்கினர். 44

தாக்கி மேல்வரு தானை சரிந்திட
நூக்கி ஆயிரம் ஆயிரம் நூழில்கள்
ஆக்கி ஆங்கவர் ஆர்த்திட அப்படை
காக்கு நாயகன் கண்எரி கான்றுளான். 45

நன்று நன்றுநம் வீரம்என றுநகாக்
கொன்று மேல்வரும் கூற்றம்அன் ஞர்களில்
கன்று வெம்புகைக் கண்ணனைத் கண்ணுருச்
சென்று தாக்கினன் தேவர் திகைப்பவே. 46

தாக்கும் வெம்போர் இயக்கர் தலைவனும்
வீக்கும் பைங்கழல் வெம்புகைக் கண்ணனும்
நூக்கி நாட்டம் எரியெழ நோக்குவோர்
போக்கி லாது பொருகின்ற எல்லையில். 47

வாள்நிரைத்த மணிவல யங்களாம்
பூண்உ டைப்புயத் தம்பன் புகைக்கணன்
மாண பத்திரன் தன்வரை மார்பிடை
ஏணு டைக்கை முசலத்தின் எற்றினன், 48

அலகில் ஆற்றல் இயக்கன் அடித்திட
நிலை கலங்கல் இலாது நிசாசரன்
தலை நெரிந்திடத் தண்டின் அடித்தலும்
மலை விழுந்தென வீழ்ந்தனன் மண்ணின்மேல் 49

ஆங்க வன்விழக் கண்ட அரக்கர் கோன்
தாங்கு தண்டினன் சென்று தலைப்படப்
பூங்க ழற்கால் இயக்கனும் போர்எதிர்
நீங்க லான்வந் தவனொடும் நேர்ந்தனன், 50

அக்கு ரூரனும் ஆங்கவ னுஞ்சின
மிக்க போரில் இராவணன் மெய்யில்வேல்
தைக்க ஏவி இயக்கன்வெந் தண்டினால்
பக்க மோலி பறிந்திட மோதினன். 51

முடி பிளக்கத் தரிப்பில னய்முகில்
இடி எனக்கத றிக்கொடி ராவணன்
கொடு மனத்தன் கொதித்தவன் மேல்விழ
அடுபுலிக் கிடை ஆடென ஓடினன். 52

ஈடுபட்ட இயக்கர் இரிந்து போய்
நாடு விட்டவர் சென்றனர் நன்னிலைக்
கோடு விட்ட குரங்கென கூடலார்
காடு விட்டருங் கன்முழை எய்தினர் 53

அன்ன சேனை கெடஅள காபுரி
மன்னன் வாளமர் மாறெதிர்ப் போரிலாத்
தென்இ லங்கைக் கிறைவன்முன் சென்றவற்
கின்ன வாய இனியன சொல்லினன். 54

முன்உ னக்கு மொழிந்த உறுதிகள்
பின்எ னக்குப் பெரும்பகை யானவால்
கொன்னி னைப்போர் மனத்தறங் கூடுமோ
என்னு னக்கினிச் சொல்லுவ தேழைகேள். 55

தந்தை தாயரைத் தம்முனைச் சார்நெறி
அந்த ணாளரைச் சீறும் அறிவிலோர்
இந்த லோகத் திரும்பழி எய்திமேல்
அந்த லோகத் தருநர கெய்துவார். 56

என்னநீதி இராவண னுக்கவன்
சொன்ன மாற்றம் சுவர்எறி பந்தென
அன்ன வன்னுண் ணுழையா தயர்த்திடந்
தன்னின் நேரிலான் தண்டினை வாங்கினன். 57

❖நீதியான தோதினும் நீசரான வர்க்கறம்
போதியா தெனத்தெளிந்து போர்புரிந்த பொற்கணன்
ஏதியான சாதியா வியாதுதான நாதன்மேல்
ஆதிநாதன் மோதினன் அழன்றுதண்டு கொண்டரோ. 58

துன்றுதோளி ராசராசன் மோதமெய் துளங்கிலான்
இன்றுகாண லாமிவன்தன் ஆண்மைஎன்றி ராவணன்
குன்றுசென்ற தென்னஉட்கொ தித்துமண்டி மேல்விழ
வென்றிவீரர் தங்களுக்கு வெய்யபோர் விளைந்ததே. 59

கோபமுந்து வாலிசுக்கி ரீவருங்கொ தித்தசுந்
தோபசுந்த ரும்எனச் சுழன்றுசாரி கைத்துறைத்
தாபம்ஒன்றும் இன்றியாது தானனுந் தனேசனும்
பாபதன்ம மும்எனப் பகைத்துவந்து போர்செய்தார், 60

தேசநாசம் ஆனதென்று சித்தரும் இயக்கரும்
கூசவாச வாதியோர் குலைந்திடச் செருச்செயும்
நீசன்மேல்அவ் ஈசன்நண்பன் நீள்நெருப்பின் ஆயுதம்
வீசவாசில் பரசுபாணி வாளியால் விலக்கினன். 61

ஏயும்என்ன மாயைஒன்றி யற்றிஉண் மயக்கிஅத்
தீயவன்கு பேரனைச் சிரத்தின்மேல் அடிப்பஅத்
தூயவன் தளர்ந்துமெய் துளங்கிநின்று சோர்தலால்
ஆயதன்மை யானைஅன்பர் அங்குநின்ற கற்றினர். 62

வண்டுசேர் தொடைக்குபேர மன்னர்வாழும் மாநகர்க்
கண்டகண்ட மாடெலாம் கவர்ந்துகொண்டு பண்டைநாட்
புண்டரீக வாசனன்கொ டுத்தபுட்ப கத்தையும்
கொண்டுவெற்றி கொண்டரக்கர் கோன்உவந்து போயினன். 63

5–வது குபேரன் மேல் செல்படலம் முற்றிற்று.

## 6. வரையெடுத்த படலம்.

வெற்றிகொள்அரக்கன்விடு புட்பகம் எழில்கயிலை வெற்பைஅணுகா
திற்றவலி யச்சின எனக்ககன நிற்றலில் இதற்குள் நடவாக்
குற்றம்வரு கைக்குவழி தெற்றென உரைத்திர்என உட்கொடியனும்
அற்றதலை பெற்றிடும் அரக்கன்இ துரைத்திட அமைச்சர்நினைவார். 1

அந்தணன் அருந்தவம் முயன்றதன தன்பெற உவந்தருளொடும்
தந்தபின் அவன்தனை நெடும்பகல் பிரிந்திலது தங்குபிரிவால்
சிந்தைஅல மந்துசெயல் இன்றிஇது நின்றதுகொல் என்றுதெளியா
மந்திரிகள் சிந்தைசெய வந்தணுகி இந்தஉரை நந்திபுகலும். 2

சங்கமலை உந்திடு தடங்கடல் அனந்தசய னந்தனில் இருஞ்
செங்கமலை யுந்திகழ் முகுந்தனும் இருந்தென இருந்திரிபுரம்
மங்கமலை சங்கரனும் மங்கையும் மகிழ்ந்தினி திருந்தஇடம்இத்
துங்கமலை என்றிரதம் இங்குவரு கின்றிலது துன்றுபழியோய். 3

படிக்கமி வினைச்செய்மிகு பற்றலர்கள் முப்புரம் நெருப்பழலவோர்
வடிக்கணை கிரித்தவன் மலைக்குமிசை புட்பக நடக்கஅரிதிங்
கடுக்கழி வினைச்செயல் அகப்படுகை நிச்சயம் அகற்றிரதம்என்
றிடித்தவ னுரைத்திட இரக்கமிலரக்கன் இதுரைத்திதுசெய்தான்

உரங்குளையும் வெஞ்சரம் எனும்சொல் பலவஞ்சொலி உயர்ந்தகுணனும்
குரங்குமுக நந்திதன் முகந்தனை இகழ்ந்திட அவன்குவிதனுய்
இரங்கலை குரங்குமுகம் என்றெனை இகழ்ந்தஉன் இலங்கைநகரில்
குரங்குகள்புகுந்துநனிகொன்றிடுகநின்கிளையை என்றுரைசெய்தான்.

சகட்டுரு வோயில்திரி பிறப்பிலி சலிப்பவெரு வுற்றதவசிப்
பகட்டிது எனக்கரு திரக்கமி லரக்கனோர் பழிப்பின்மணிமேல்
முகட்டெனது புட்பசம் விலக்குகயி லைக்கிரி முரிப்பன்எனவோர்
துகட்டுகள் படக்கடிது எடுத்தனன் மிசைத்தவந் துணுக்கம்உறவே.

சத்தஇரு டிக்கணம் அகப்பட எழில்தவ முனித்தலைவரும்
சுத்தஇதை யப்பிரம நிட்டரும் மறப்பில்சுரர் கொத்தடையவும்
பித்தரும் மதத்தகு சிவபத்தரும் எழில்பிற மதத்தலைவரும்
சித்தரும் இயக்கரும் வெருக்கொளும் மனத்தர் அடையச்சிதறினர். 7

ஆடல்புரி பூண்முலை அரம்பையர்கள் சிந்தைஅல மந்தலறினர்
பாடல்புரி தும்புருவும் நாரதனும் ஆதியர் பயந்தழுவினர்
கூடலை முயன்றரன் விரும்பஅதி கோபமொடு கூடநினையா
ஊடலை மறந்துமை மடந்தை அவனைத்தன முறத்தழுவினள். 8

மறைத்தவர் மறுக்கமும் மடக்கொடி நடுக்கமு மனத்தின்நினையாப்
பிறைச்சடை முடிக்கடவுள் பொற்றிருவ டிப்பெரு விரல்தலையினால்
நெறுக்கெனஅமுக்கிட உடற்பொறைபதைப்ப நிருதர்க்கிறைவனும்
கறுத்தஉரு வத்தினு மறக்கரு மனத்தன் வெருவிக் கதறினன். 9

காய்பவரை ஆலமிசை பாய்பவர் அமுக்கிய கரும்பின்நெரியச்
சேயுயர் விசும்புநில னுங்கிரிக ளுந்திசைக ளோடதிர்தர
வாய்ஒரு பதுங்குருதி சிந்திட வயங்குவரு டங்கள்அவைஓர்
ஆயிரம் விலங்கலுள் அடங்கினன் முடங்கிஅலம் வந்தலறினான். 10

✤வான்தொடர் வெள்ளிவெற்பின் கீழ்உற்று வருந்துகின்ற
ஊன்திகழ் வேலினானை அமைச்சர்தாம் உற்றுநோக்கித்
தேன்திகழ் இதழியான்தன் திருச்செவி சாரநின்கை
தான்திகழ் வீணையாகப் பாடுதி சாமம்என்றார். 11

அன்னதே கருமம்என்ன அரக்கனும் அறிவுகொண்டு
தன்னது தலையின்ஒன்றைத் தடிந்துதன் கையில்சேர்த்தி
இன்னன நரம்பில்தந்தங் கிளைமுதல் இசைகள் ஏழால்
பன்னருஞ் சாமகீதம் பண்பெறப் பாடல் உற்றான். 12

✤ பொருப்பரசன் மடப்பாவை இடப்பாகன் பொருப்பின்கீழ்க் கிடந்துபோக்கற்
றிரக்கமுறக் கதறுதலா லிராவணனே எனப்பெயரு மியம்பிப் பின்னர்
அரக்கனுக்கு முக்கோடி யரைக்கோடி வாள்நாளும் ஈய்ந்துபோஎன்
றுரைப்பஅவன் அடிவணங்கிஒங்கெழில்சேர் புட்பகத்துமீதுபோனான்.

6வது வரைஎடுத்த படலம் முற்றிற்று.

---

## 7. வேதவதி அனல்மூழ்கு படலம்

கங்கை சேர்சடைக் கண்ணுதல் காதலி
தங்கு பங்கன் தனதருள் பெற்றஅத்
துங்க மால்வரைத் தோள்நிரு தன்புவி
எங்கும் போய்வந் திமவனம் எய்தினான். 1

மைதவழ்ந்த கார் வண்ணனைக் கண்ணுறச்
செய்தவம் புரி சிந்தையி னாள்தனைக்
கைதவம் இலாக் கற்புடைக் கன்னியை
எய்தவந் தனி ராவணன் நோக்கினான். 2

வாக்கி னால்மனத் தால்மழை வண்ணனைப்
போக்கி வேறறி யாதபொற் பாவையை
ஆக்கும் வேணியும் மானுரி ஆடையும்
வீக்கு மாதவ வேடத்தி னாள்தனை. 3

அன்ன கன்னியை நோக்கி அரக்கர்கோன்
உன்னை நோக்கி உலகம் செயும்தவம்
தன்னை நீசெயத் தக்கதன் றுன்பெயர்
என்னை யார்மகள் நீஎன் றியம்பலும். 4

கோதில் நீதிக் குசத்துவ சன்எனும்
மாதவன் மறை ஓதிட மற்றவன்
ஓது வேதத்தின் உற்பவித் தேனையென்
தாதை வேத வதிஎனச் சாற்றினான். 5

பேசி வந்தவர் தங்களுக் கென்பிதா
மாசி லாவர னாவான் மகளுக்கு
வாசு தேவன் தனைவரித் தேனென
ஆசை அற்றங் கனைவரும் போயினார். 6

சம்பு என்னும் தயித்தியர் கோன்மனம்
வெம்பி எல்லி உறங்கிடும் வேலையில்
எம்பிதா உயிர் உண்டிட எம்மனை
உம்பர் வாழ்த்த உடன்எரி மூழ்கினாள். 7

எந்தை எண்ணம் முடிக்க இயற்றும்என்
சிந்தை மாயவன் தன்வழிச் செல்கையால்
இந்த மாதவம் பூண்டனன் யான் என
அந்த நீசன் அடாதன கூறுவான். 8

இலங்கை மன்னன் இராவணன் என்பெயர்
புலங்கள் வென்ற புலத்தியன் பௌத்திரன்
கலங்கல் சிந்தைஎன் காதலி யாய்த்தரா
தலங்க ளுக்குத் தலைவியும் ஆகென்றான். 9

குலத்தி னான்மிகு கொற்றத்தி னால்பெறும்
வலத்தி னாலோர் பழிப்பில் வடிவினால்
நலத்தி னால்எனை நாரணன் ஒக்குமோ
உலததி னால்ப யன் என்னிவ் வுடம்பைநீ. 10

ஓராத அரக்கன் உரைத்தன சொல்
சீரார் மடவாள் செவியில் கனல்காய்
நாராசம் நுழைந் தென நண்ணுதலும்
ஏரா அவள் இன்ன விளம்பினளால். 11

பையா டரவில் துயிலும் பரனைக்
கையா ழியுடைக் கருணா கரனை
மையார் மழைவண் ணனைமா மலர்மேல்
செய்யாள் உறையும் திருமார் பினனை. 12

சேயோ னையடைந் தவர்சிந் தையனைத்
தூயோ னைஎன்ஆ வியைஎன் துணையை
மாயோ னைவரித் தனன்யான் எனவும்
பேயே றினர்போல் இவைபே சுவையோ 13

நிலம் மன்னு நெடும்பழி மேல்நிரையம்
பல மன்னுவை பாரில் நினைத்திடில்ஐம்
புலன் வென்ற புலத்திய மாமுனிவன்
குல மன்ன வருக்கிவை யோகுணமே. 14

குயில் பற்றிய சொல்இவை கூறுதலும்
அயில் பற்றிய மன்மதன் ஐங்கணையும்
உயிர் பற்றி அரிந்திட உள்அழியும்
செயிர் பற்றிய சிந்தையன் ஏதுசெயும். 15

மையார் குழலாள்தன் மலர்க் கையினைக்
கையால் அவன்முட் டிடலும் கனலா
நெய்யார் அழலாம் எனநின் றெரியாச்
செய்யாள் வடிவாள் இவைசெப் பினளால். 16

*வாடா மலரோன் வரச்செருக்கால் மற்றென்னைக்
கூடா தனசொல்லிக் கூசாது தீண்டினை நீ
ஏடாஉனக்கும் இலங்கைக்கும் உன்கிளைக்கும்
கேடாகத் தோன்றுவன்யான் என்றுள் கிளர்சினத்தாள். 17

வானோர் மகிழ்ந்து மலர்மா மழைபொழிந்தார்
ஏனோர்கள் எல்லாம் இனிப்பிழைத்தோம் என்றியம்பக்
கானோர் அருந்தவத்தோர் கண்டு வியப்பெய்தத்
தேனோர் மொழிமடவாள் செந்தழலில் மூழ்கினாள். 18

வன்னியிடை மூழ்கிய மாதவத்தாள் மாச்சனகன்
தன்னுடைய வேள்வித் தரணியிடை வந்துதித்த
அன்னவளை முன்னாள் அமுதில் பிறந்தாளை
மின்ஒளிர்செய் பூணினாய் வில்இறுத்துக் கைப்பிடித்தாய். 19

என்று முனிவன் இயம்பும் அதுகேட்டு
வென்றிச் சிலைதரித்த வீரன் வியப்பெய்திக்
கன்றிய சிந்தை அரக்கன் கடைசெய்த
தொன்றும் ஒழியாமல் உரைத்தி என உரைப்பான். 20

7-வது வேதவதி அனல்மூழ்கு படலம் முற்றிற்று.

---

## 8, மருத்தன் வேள்விப் படலம்

வேதவதி தான்சீறி வெந்தழலில் மூழ்கியபின்
போதம்இல்லா வல்லரக்கன் புட்பகத்தின் மீதேறி
ஏதமிலா இந்திரனே ஆதி இமையவரும்
மாதவரும் சேர்ந்த மருத்தன் மகம்அடைய. 1

வாசவன் அஞ்சி மயில்உருவம் தான்கொண்டான்
காசில் நமன்கலங்கிக் காக்கை வடிவானுன்
பாசக் கரத்தோன் பறந்தான்ஓர் அன்னமாய்க்
கூசிக்கு பேரனும்போய்க் கோம்பி வடிவானுன். 2

மற்றையோர் எல்லோரும் மாயா உருவம்கொண்
டுற்றதிசை திசையே ஓட உயர்நியமம்
பற்றி யிருந்த பரமன் தனைநோக்கிக்
கொற்றம் புரிமனத்துக் கோளரக்கன் கூறுவான். 3

தோற்றேன் உனக்கென்று சொல்லுதிநீ சொல்லாயேல்
ஆற்றலால் என்னோ டமர்பொருவாய் என்றுரைப்பச்
சீற்றமிகு மன்னநீ யாரே எனச்செப்பக்
கூற்றம் அனையான் நகைத்தினைய கூறுவான். 4

மன்னன் குபேரனைமுன் வாள்அமரில் போர்வென்று
பொன்னின் விமானமாம் புட்பகமும் கைக்கொண்ட
என்னை அறியாயோ என்ன இறைஉனக்கு
முன்னவனைப் போர்வென்ற மூர்க்கனே நீஎன்றான். 5

✤என்றுரைத் தெரியிற் பொங்கி எழுந்தமர் புரியநீ
புன்தொழில் கடிந்தஅந்தப் புரோகிதன் அவனை நோக்கித்
துன்றிய திறலோய்நீயும் தொடங்கிய மகமுற் றுது
குன்றிய வினையதாகில் கொல்லும்நின் குலத்தை என்றான். 6

அன்னவன் அறையக்கேட்ட அரசர்கோன் அமர்கை விட்டு
வன்னிசார்ந் திருப்பக்கண்டு மாமகம் அடைய நூறி
என்னது வெற்றிஎன்றார்த் திராவணன் ஏகத் தேவர்
மன்னவன் பிழைத்தேன்என்றோர் மயிலினை நோக்கிச் செல்லும். 7

தீயவல் அரக்கன்சீறத் திகழும்நின் உருவம் கொண்டு
போய்உயிர் பெற்றேன்இன்றே புகழினும் புவனம் தன்னில்
ஓய்விலா மாரிபெய்ய உவகையும் என்னைப் போல
ஆயிரம் கண்ணும்உண்டா கென்றனன் அமரர்கோமான். 8

வனத்தில்ஓர் காக்கைகண்டு மன்னுசீர் இயமன் கூறும்
உனக்கொரு கால்நோய்இன்றி உலகத்தில் இறந்தோர் தம்மை
நினைத்துனை ஊட்டஅன்னார் மகிழநீள் நிலத்தில் வாழும்
அனைந்துயிர் களினுந்தீர்க்க ஆயுஉண் டாகஎன்றான். 9

பாலைநீர் ஒழியஉண்ணும் பறவையை வருணன் கண்டுன்
கோலமாம் உருவம்கொண்டு கொலையினைப் பிழைத்துப் போந்தேன்
மேலைநான் முகனுக்கூர்தி ஆகியே விளங்கி ஐந்து
வாலிதா நிறமும்ஆகி வாழுதி ஆகஎன்றான். 10

பொன்னிறச் செல்வன் கோம்பி போவதைப் போற்றிக்கூறும்
என்னிற வதனைத் தீர்த்தாய்க் கெதிர்உப காரமுண்டோ
மின்னிறம் விளங்கும்பூணுய் வேண்டுவேண் டுருவியாகி
உன்னிறம் எல்லாம் செம்பொன் ஒளிநிறம் ஆகஎன்ருன். 11

இந்திரன் முதலோர் எல்லாம் இவ்வகை வரங்கள்ஈந்து
வந்துமன் னவனேடைந்த மகத்தினை முடித்துப் போனூர்
வெந்திறல் அரக்கன் போரில் வேந்தர்கள் எதிர்ந்தோர் தம்மை
அந்தக புரத்தில்ஏற்றி அயோத்திமா நகரம் சேர்ந்தான். 12

8-வது மருத்தன் வேள்விப்படலம் முற்றிற்று.

---

## 9. அனரண்ணியன் சாபப் படலம்

*எம்மாலும் ஒருக்காலும் இருக்கால் உணர்இமையோர்
தம்மாலும் ஒருக்காலும் நினைக்கும் தரம்அல்லோய்
இம்மாநகர் அனரண்ணியன் என்போன் இனிதாள்வோன்
அம்மாநில மன்னற்கிவை உரைத்தான் அடல்அரக்கன். 1

போரஞ்சினன் உனக்கென்னுதல் போர்செய்குதல் செய்என்
நீரஞ்சின எனவிஞ்சொளி முடியோன்இவை இயம்ப
வீரஞ்சின மிகுமன்னவன் மேகங்குமி றிடமைச்
சீரஞ்சின மயிலால்உயர் திருநாடனி துரைக்கும். 2

திருவோங்கிய இம்மாநகர் அரசாண்டவர் தீயோய்
ஒருவோங்களும் கேளாதசொல் உரைத்தாய்எனை இனிநாம்
இருவோம்பொர இருவேம்படை இடைவந்துத வாமல்
பொருவோம்செரு எனவென்றலும் புறப்பட்டது படையே. 3

பாழிப்புயத் தரக்கன்படை யொடுதும்பியும் தானும்
ஆழிப்பொரு தேரான்மிடை அனரண்ணியன் படையும்
ஊழிக்கனல் எனஒன்றிட உறுசேனையை அரக்கன்
நூழில்படச் சோரிக்கணை நூருயிரம் சமைத்தான். 4

ஆனைத்தொகை தேராள்மிடை பரியோஅள விடோணு
தானைக்கடல் பாழாயிடத் தரியாதவன் சரியா
மானத்தினன் அனரண்ணியன் வளைவாளெயிற் றரக்கன்
சோனைப்பொரு மாரிக்கணை சொரிந்தான் மனம் எரிந்தான். 5

வீரச்சிலை அனரண்ணியன் விடுவாளிகள் வெய்யோன்
மார்பத்திடை உறத்தைக்கவும் மதியாதெழுந் தடர்த்துப்
பாரப்பனைக் கரத்தாலவன் பதைப்பப் புடைத்தாவி
சோரத்துயர் உறுவான்தனை முகம்நோக்கினன் சொல்லும். 6

பொடிப்பட்டது நின்திண்படை பொரவந்தமர் ஆற்ரு
தடிபட்டு விழுந்தாய்எனக் கமர்அஞ்சினை என்றும்
மிடிகெட்டர சாளாதற விளைத்தாயென மிகையா
இடிபட்டிட நகைசெய்தலும் அனரண்ணியன் இயம்பும். 7

துன்னிட்ட தலைத்துன்மதி தோற்றேன்என அறப்போர்
நன்னிட்டை இலாதேஎமை நகைசெய்தனை நாங்கள்
வென்னிட்டிலம் உனக்குன்னெடு வெம்போர்செயு மெங்கால்
முன்னிட்டது பின்னிட்டிலெம் எனப்பின்னையும் மொழிந்தான். 8

காலத்தினை ஞாலத்தவர் யாரேகடப் பவர்தாம்
ஆலக்கொடு மனத்தோய்அவ மதித்தாய்எனை அதனுல்
கோலத்தச ரதராமன்என் குலத்தோன்கொடும் கணையால்
தாலக்குலை போல்உன்தலை தரைவீழ்கெனச் சபித்தான். 9

இச்சாப வரத்தைப்புகழ் இறைவர்க்கிறை இயம்பும்
அச்சாப மனத்தில்கொள் கில்லாதரு மறையாம்
விச்சாபர நிருதன்திறல் வெல்வேந்தரை அமரில்
கைச்சாபம் அதைக்கொண்டு கடந்தான்வழி படர்ந்தான். 10

ஒன்ஞர்தன் நிலைஓர்வரும் உயர்மாயையின் இலங்கை
மன்னுரத னனமாநிதி கண்டோனென மகிழப்
பன்ஞர்த நடுவேதிகழ் பகலோன்என வருவோன்
முன்நாரதன் வந்தான்அவன் முகம்நோக்கினன் மொழிவான், 11

9-வது அனரண்ணியன் சாபப்படலம் முற்றும்.

---

## 10. இயமன்மேல் செல் படலம்

*போரார்வெஞ் சிலைக்கரத்தோய் பொருளல்லா நரியோடும் பொருமோசிங்கம்
தீராத தீவினையால் அடர்ப்புண்டு திண்பசிநோய் மூப்பின்ஓய்ந்து
சோராவி மானிடரைத் துரந்தறுத்தாய் எனக்கேட்டேன் துன்னுர்போரில்
பேராத நிலையுடையோய் பிணம்வெட்டி வாள்முறித்தால் பெறும்பேறுண்டோ. 1

பெற்றதாய் கிடந்தலறப் பிள்ளைகளை உயிர்கொண்டும் பெருகுகாதல்
உற்றகா ளையர்கதற ஈன்றெடுத்து வளர்த்ததாய் உயிரைஉண்டும்
குற்றமா னதுபெருகும் கொடுநமன்தன் வலைப்பட்டும் குலைந்துதேற
மற்றெருதா பரமில்லா மானிடரை இனிக்கொல்கை வழக்கன்றென்ருன். 2

என்றுமுனி இவைகூற இராவணன்கேட் டெம்பெருமான் இயம்பிற்றென்றை
இன்றுசெயும் இதுவலா லியான்அறிவ தொன்றுண்டோ என்றுகூற
நன்றுபெரி தெனமகிழ்ந்து நாரதமா முனிகூறும் நல்லாய்இவறு
சென்றுநமன் தன்னேடு செருச்செய்தி அவன்தோற்கை திண்ணம்என்ருன். 3

அந்தமுனி அதுகூற அவனுடைய அடிவணங்கி அரக்கர் கோமான்
சிந்தையினுங் கடுந்தெய்வத் தேர்ஏறித் தென்திசையில் விடுப்பத்தேரின்
முந்துமுனி தனைக்கண்டு முறையாலே அருச்சித்து முனியேஇங்கு
வந்தபொருள் உரைஎன்று நமன்கூற மாமுனிவன் வரைந்துகூறும். 4

மின்அஞ்சும் மணிமுடியாய் விளம்பக்கேள் வேதியன்விச் சிரவாமைந்தன்
முன்னஞ்செய் தவச்செருக்கால் மூடனுய் மூவுலகும் சுடுவான் என்னும்
வன்நெஞ்ச இராவணன்வா ளமர்பொருவா னின்மேலே வரக்கண் டாற்றேன்
என்னெஞ் சமஎனேஉந்த வந்தேன்யான் இதுஇங்குப் புகுந்ததென்றான். 5

ஆதித்தன் திருமைந்தற் கந்தமுனி இந்தஉரை அறையுங்காலைச்
சாதிக்கும் பொருள்எல்லாம் தவத்தினுல் சாதிக்கத் தகும்என்பான்போல்
சோதிப்பொன் மணிநெடுந்தோட் சுடர்மவுலி இராவணன்தொல் உலகைஎல்லாம்
வாதிக்கும் நமன்தன்னை வாதிக்க வவனகிரி வந்து சார்ந்தான். 6

சீர்க்குமிழின் நிலைகலக்கித் திகழ்குழையைச் செலநோக்கிச் செறுத்துக் கோட்டில்
பார்க்கும்விழிப் பாவையராம் படுகுழிநல் விழாதோர்க்கும் பற்றென்றில்லா
நீர்க்குமிழி உடம்பென்று நிலைஅறங்கள் செய்தோர்க்கு நெறியில்நின்றோர்
யார்க்கும்இழி வருஞ்சுவர்க்கத் தாங்கவர்கள் இனிதுவீற் றிருப்பக்கண்டான். 7

பூதானம் கோதானம் முதலாய பூசுரர்கள் தம்மைப் போற்றி
மாதானம் செய்தோரும் வறியோராய் இவைகொடுக்க மாட்டாராகி
யாதானும் தமக்கப்போ தெய்திதை இட்டுண்ணும் இவரும்அன்ன
தாதாவும் முதலாய தயாவினோர் வீற்றிருக்கும் தன்மைகண்டான். 8

சடங்கொடுக்கும் வினைகடிந்த தாபதர்கள் இனிதங்குத் தங்கக்கட்டி
மடங்கொடுத்து மறையவர்க்கு மனைகொடுத்து வைகாசி மாதந்தண்ணீர்க்
குடங்கொடுத்தும்குளிர்காலம்குளிர்ந்தவர்க்குப் போர்வையினைக்கொடுத்தும்தங்க
இடங்கொடுக்கும் ஆங்கவர்கள் எழில்மணிமா மண்டபத்தின் இருப்பக்கண்டான்.

உடுப்பதுவும் உண்பதுவும் இல்லாதோர்க் குடுப்பனவும் உணவும்ஆங்கே
கொடுத்தவர் நோய்தீர்த்தோரும் கொடியோராய்க் குற்றங்கள் செய்துதம்மை
அடுத்தடுத்து வைதாலும் பொறுப்போரும் அந்தணரோ டாவுக்குற்ற
நடுக்கமது தீர்த்தோரும் நல்லுலகின்நாயகராய் இருப்பக்கண்டான். 10

மன்றுமறித் துண்டோரும் வழக்கல்லா துரைத்தோரும் மனையாள்தன்னோ
டொன்றியுடன் வாழாதே ஓராதே பரதாரம் உவந்துள்ளோரும்
கொன்றுடல்கள் தின்றோரும் கோட்சொல்லித் திரிவோரும் கோலிச்செய்த
நன்றியினை மறந்தோரும் நரகத்தின் இடைக்கிடந்து நடுங்கக்கண்டான். 11

கற்றவரைக் காய்ந்தோரும் கைப்பிடித்த காதலியைக் கனன்றுளோரும்
பெற்றதாய் பசித்திருக்கத் தன்வயிறு வளர்த்தோரும் பேணித்தம்மோ
டற்றவருக் குறுதாரும் அந்தணரை இகழ்ந்தோரும் அமரில்ஆண்ட
கொற்றவனை விட்டோடும் கொடியோரும் கும்பியிடைக் கொதிப்பக்கண்டான். 12

கோபத்தால் வினைஎண்ணிக் குடிகேடு சூழ்ந்தோரும் குலத்தால்வந்த
தாபத்தால் இரந்தோரைத் தாமடர்த்து வைதளிக்கும் தயாவிலோரும்
ஆபத்தால் அவைபம்ஈன் றடைந்தோரை விட்டோரும் ஆதியாய
பாபத்தா ரும்பலரைப் பழிப்போரும் படுநரகில் பதைப்பக்கண்டான். 13

மாவிரிநீர்க் கடல்சூழ்ந்த மண்ணுலகின் மனிதராய்ப் பிறக்கப்பெற்ற
நாவினையும் பெற்றுநமோ நாராயணுயை நமஎன்ன மாட்டாப்
பாவியரும் பலதெய்வம் பழித்துரைக்கும் பாதகரும் பண்பினேடு
வாய்வழியே புழுச்சொரிய மாநரகக் கும்பியிடை மறுகக்கண்டான். 14

கூறுபடு தசைமூளை குருதியொடு குடர்வழும்பு குழம்பிஒருன்ய்ச்
சேறுபடு கொடுநரகில் தீவினையோர் கிடைந்துழைப்பத் தெரியநோக்கி
ஏறிடுமி னென்றரக்கன் ஏறவிட இன்றெல்லாம் பிழைத்தோம் என்றென்
ருறுதுய ரினராக அருநரகங் காவலர்உள் அழன்றுவந்தார் என்று. 15

வெஞ்சினம் உருக்கொண்டன்ன மேனியர் வெய்யகண்ணர்
மஞ்சிடி இடித்தசொல்லர் மலைமுழை திறந்தவாயார்
நஞ்சினும் கொடியநெஞ்சர் நமன்தமர் ஞாலம்எல்லாம்
அஞ்சுநம் வலிக்கின்றஞ்சா தரக்கர்கள் வந்தடர்த்தார். 16

என்றுரைத் தெரியிற்பொங்கி இராவணன் தன்னைச்சூழ்ந்து
கொன்றுயிர் குடித்தும்என்று கொதித்துமேல் மண்டிவீழ
வன்திறல் அரக்கரானேர் மகோதரன் முதலாயுள்வோர்
சென்றுதாக் கினர்கள்அந்தச் செருக்கிளர் சேனையோடும். 17

தருக்குடைத் தருமன்சேனை தாக்கிய அரக்கன்சேனை
வெருக்கொள நெருக்கிப்புக்கு வெங்களத் தவியநூறி
அரக்கர்கோன் கரியமேனி அணிகிளர் முருக்குப்பூத்த
பொருப்பெனக் குருதிபொங்கப் பொருபடை தூவிஆர்த்த. 18

விரிகடல் இலங்கைவேந்தன் மேவிய ஊழிக்காலத்
தெரியென எழுத்துபொங்கி இருபது கைகளாலும்
பொருபடை வழங்கித்தெய்வப் புட்பகம்கடாவி வெம்போர்த்
தருமன்வெஞ் சேனைசாயத் தரைப்படச் சாடுங்காலை. 19

செருவழித் தருமன்சேனை திரண்டெழுந் தொருங்குசெல்லின்
உருவழி அரக்கன்மேனி உள்ளுறப் படைகள்உந்தி
ஒருவழி ஒருவர்போகா வகையுறு படையைஓட்டிப்
பொருவழி அரக்கன்சீறிப் புட்பகம் நின்றும்பாய்ந்து. 20

வரிசிலை கையின்வாங்கி வாள்எயிற் றரக்கன்ஈசன்
பொருபடை விடுதலோடும் பொங்கெரி பரந்துமண்டித்
தருமன்வெஞ் சேனைதாபந் தாவிய தாலம்என்னத்
திரிபுரம் என்னவெந்து தீய்ந்தனர் சிலைக்கைவீரர். 21

போர்ப்படை ஒடியநூறிப் புனைகழல் அரக்கன்ஆர்ப்ப
ஆர்ப்பொலி செவியின்எய்த அனல்உயிர்த் தழன்றுபொங்கித்
தார்ப்பொலி குருதிவண்ணத் தாண்டுமாப் பூண்டசெம்பொற்
றேர்ப்பொலிந் திலங்குமேனித் தென்புலத் திறைவன்சீறி. 22

நெற்றியிற் காலன்செல்ல நீள்பெருங் காலபாசம்
மற்றைவெங் காலத்தண்டும் வந்திரு மருங்குஞ்செல்ல
உற்றபே ரூழிக்காலத் துருத்திர மூர்த்திஒப்பச்
சுற்றிய சேனையோடும் தோன்றினன் உலகம்துட்க. 23

நட்டமாம் உலகம்இன்றே நாம்இனிப் பிழைப்பதெங்கே
எட்டனை அறிவும்இல்லா இராவணன்ஏழை இங்குப்
பட்டது படுகஎன்று பயம்உறப் பின்பு பாராக்
கெட்டனர் அரக்கர்எல்லாம் கெடாதிலங் கேசன்நின்றான். 24

நின்றவன் நிலைமைகண்டு நெய்சொரி அழலிற் பொங்கி
வென்றனன் அன்றேஎன்றான் வெருவலன் நின்றபோதே
என்றுதென் திசைக்குநாதன் ஈட்டிவேல் குலிசமேவச் *
சென்றவை நிறத்தில்தைப்பத் தென்இலங் கேசன்சீறி. 25

கார்முகம் வளையவாங்கிக் கார்முக மாரிபோலக்
கூர்முக வாளிஏவிக் குறித்தவை துணித்துவீழ்ந்து
நேர்முகத் தெதிரில்லாத நிருதனை நிறத்தில்வன்னி
ஆர்முகக் கணைகள்உந்தி அந்தகன் அலக்கண்செய்தான். 26

இருவரும் இந்தவண்ணம் ஏழுநாள் இடைவீடாதங்
கொருவரை ஒருவர்வெல்லக் கறுவுவோர் உபாயம்பார்த்துப்
பொருவழி அரக்கன்சீறிப் பொருந்துதேர்ப் பாகன்தன்மேல்
தருமன்மேல் காலன்தன்மேல் சரங்கள்ஆ யிரங்கள்தைத்தான். 27

* என்பு லத்திய மேனி இருந்தவன்
வன்பு லத்தியல் மாற்றிய மாமுனி
நன்பு லத்தியன் நன்மகன் மைந்தன்மேல்
தென்பு லத்திய மன்மிகச் சீறினன். 28

ஆலம் என்ன அனல்என அந்தகன்
ஞாலம் எல்லாம் நடுங்கக் கொதித்திடும்
வேலை வெங்கனல் என்ன வெகுண்டுவெங்
காலன் அன்னவற் கின்ன கழறினன். 29

என்னை ஏவுதி என்னில் இராவணன்
தன்னை நான்உயிர் உண்பன் தடையிலா
வன்னி அன்ன மதுகை டவர்முதல்
ஒன்ன லார்உயிர் உண்ட துணர்தியால். 30

காலன் இவ்வகை கூறிடக் காணிவன்
காலம் உண்பன் என நமன் கண்ணெரி
கால மன்உயிர் எல்லாம் கலங்கிடக்
கால தண்டம் விடுவான் கருதினன். 31

ஆய காலே ஆனேத்துல சங்கஞம்
மாயும் இன்றென வானவர் அஞ்சிடத்
தூய நான்முகன் தோன்றியத் தொல்உயுர்
நாய கன்தனே நண்ணி இவை சொல்வான். 32

திண்த டம்புயத் தென்னிலங் காதிபன்
பண்டு பெற்ற தவத்தின் பயத்தினல்
தண்டு விட்டிடில் ஆங்கவன் தன்உயிர்
உண்டி டாது விடுதல் ஒழிதியால். 33

என்று நான்முகன் இவ்வா றியம்பலும்
தென் திசாபதி தீய அரக்கன்மேல்
வென்றி மேவிய தண்டம் விடாதவன்
நின்ற காலே நிருதர் குலாதிபன். 34

✤வெற்றிஎனதென்றுரைத்து மிக்கெழுந்தவுவகையனுய் விறலின்மிக்க
மற்றடந்தோள் மாரீசன் மகோதர னேமுநல்வ ரொடும்மணித் தேர்ஏறிப்
பற்றலரைநிலைகெடுப்பான் பாதாளத் திடைபுகுந்துபடையினேடும்
பொற்றடமாளிகைவிளங்கும்போகவதிஎனும்நகரி சென்றுபுக்கான்.

10-வது இயமன் மேற்செல் படலம் முற்றும்.

---

## 11 பாதாளஞ் செல் படலம்

அந்நகருக் கரசனும் அடல்மிகுபோர் வாசுகியோ டளவளாவி
மன்னியபே ருறவாகி மணிமதியாம் வளநகரி வந்துசாரத்
தன்னிகரில்லாதோர்கள் சாதித்த பெருவரமும் வலியுஞ்சார்ந்தோர்
நின்னில்எனப்புறப்பட்டு நிவாதகவ சாதியர்கள் சென்றுநேர்ந்தார்.

ஆங்கவர்கள் அடர்ந்துவந்த வரக்கன்மேல் அளவிலாப் படையைஉந்தப்
பூங்கழற்கால் இராவணனும் பொருபடையால் பொருபடையை விடுத்துமாற்றித்
தாங்கரியப படைவிடுத்தும் அப்படையை அவர்தடுத்தும் தளர்வொன்றின்றி
ஓங்கரிய பேராற்றல் ஓராண்டு கைவிடா துறுபோர் செய்தார். 2

புண்டரிகத் தயன்வந்து பொரும்அவரைப் போர்விலக்கிப் புகல்வான்நீங்கள்
பண்டுடைய வரத்தினல் பகைத்துநீர் பல்லாண்டு பொருதகாலும்
திண்டிறலில் ஒத்தீர்கள் ஒருவர்ஒரு வரையும்அமர் செயிக்கஒண்ணு
தெண்டிசையும்உங்கள்வலிஏறியதால்இனிஉறவேஇனிதிங்கென்றன்

பூமருவு நான்முகத்தோன் புகன்றஉரை யதுகேட்டும் அவனைப்போக்கித்
தாமருவி எல்லாரும் தப்பாமல் தனித்தனியே சபதம்செய்த
தேமருவுந் தாரவுணர் சிறப்போடு பூசைசெய்ய அரக்கர்கோமான்
ஏர்மருவும் அந்நகரி ஈராறு திங்களினி திருந்தகாலை. 4

அந்நகரி விட்டரக்கன் அடல்வருணன் தன்னகரம் அடுவான்வேண்டிக்
கன்னகரி தனைமுட்டிக் காலகே யரைஎல்லாம் களத்தில் கொன்று
தன்னுடைய தங்கையாம் தடவரைத்தோள் சூற்பனகி தன்னைக் கொண்ட
மின்னனைய சுடரிலைவேல் வித்துருசிந் குவினையும்வெங் களத்தில் வீழ்த்தான். 5

புனலுறுவெண் மேகம்எனப் பொலிந்திலங்கித் தோன்றுவன பொருந்தார் ஊர்கள்
நினைவதன்முன் எரிசெய்த நெடுஞ்சரத்தோன் மங்கையோடு நீடு வெற்புத்
தனைஉருவா நிறத்தினுல் ஒக்கும்எனத் தகுவதனைச் சாயா வென்றிக்
கனைகழற்கால் தசக்கிரிவன் கடலரசன் மாளிகையைக் கண்ணில் கண்டான். 6

11-வது பாதாளம் செல்படலம் முற்றும்

## 12. வருணன்மேல் செல் படலம்

பைவிரிநாகத்தணைமேல் பரன்துயில்கொள் பரந்தபாற் கடலைத்தந்த
தெய்வநெடுஞ் சுரபிதனைச் சென்னிநிலம்உறவணங்கித்திறலின்மிக்க
மைவரைபோல் மெய்யரக்கன் வந்துனக்குத் தோற்றேன்என் றுரைததல்அன்றி
வெவ்வமர்செய் குதல்செய்யா கெங்கெரளித்தான் வருணன்என விளம்பும்வேலை.

ஊழித்தீஎனப்பொங்கி ஓங்கியசீர்வருணன்தன் உயர்தோண்லமந்தா
ஆழித்தேர்ப்படைசூழ அரக்கர்பெரும்படையோடு அமர்செய்வேலை
சூழிப்போர் மதகரியும் தொகுபரியும் இரதமும்போர் துணியநூறிப்
பாழித்தோள் வாள்அரக்கன் பாசகரத் தோன்படையைப் பாரில்வீழ்த்தான். 2

சேனைபடத் தரியாது திறல்வருணன் தருளமந்தர் சீற்றம்பொங்கி
வானமதில் புட்பகத்தின் மிசைநின்ற வாள்அரக்கன் நின்மேல்வந்து
சோனைமுகிற் குலம்மாரி சொரிவனபோல் கணைமாரி தூவிஆர்ப்ப
ஆனவற்றை விலக்குகையே பணியாகி அடல்அரக்கன் அலச்சுணுற்ருன். 3

மதிகொன்றை வளர்சடையோன் வரைஎடுத்தோன் வாருணிக ளொடுபோர்செய்ய
அதுசுண்ட மகோதரன் பேரழல்என்ன ஆலம்என்ன அழன்றுபொங்கித்
கதிகொண்டு வருணபலம் கதைகொண்டு களத்தவிய நூறக்கண்டு
குதிகொண்டு வருநீரக் குரைகடற்கோன் மைந்தர்மனம் கொதித்துளோர்கள் 4

மாயைமிக வல்லனும் மகோதரன்தன் மருமத்தில் வன்னிபோலும்
சாயகங்கள் உறத்துறத்து தானையினைத் தரைப்படுத்தித் தசக்கிரீவத்
தீயவன்தன் செறிவயிரத் திரள்புயத்தும் மார்பகத்தும் செந்நீர்ஓதம்
பாயவடிக் கணைஏவிப் பகிரண்டங் குலுங்கஉயிர் பதைப்பஆர்த்தார். 5

ஆலம்என அனல்என்ன அன்றரக்கர் கோன்சரங்கள் அனைத்தினாலும்
சூலமயில் வேல்குலிசம் தோமரம்தண் டுலக்கைமுதல் படைகள்தூண்டிக்
காலன்எனக் கதித்துரப்பிக் கடிதடர்த்து மேல்வீழ வருணன்தந்த
பாலர்அனை வருங்கெட்டுப் பயத்தோடும் பழியோடும் பதியில்வீழ்ந்தார். 6

வெவ்விடத்தில் கொடியனும் விறலரக்கன் விளம்புவான் வெளியினில்லா
தெவ்விடத்தான் வருணன்என அவன்அமைச்ச ரீரண்டு முகத்தோன்வைகும்
அவ்விடத்தான் அவன்குமரர் உனக்காற்று தமரழிந்தங் ககன்றுபோனார்
இவ்விடத்தில் நினக்கொருத்தர் எதிர்இல்லை இராவணநீ இனிதேகென்றார். 7

அந்தஉரை கேட்டுவந்த அடல்அரக்கர் கோன்அண்டம் அதிரஆர்த்து
வந்தவழி புறப்பட்டு மதில்இலங்கா புரிநோக்கி வழிக்கொள்வேலை
அந்தணர்தம் கன்னியரும் அசுரர்சுரர் கன்னியரும் அளவிலாத
கந்திருவர் கன்னியரும் முதலாய கன்னியரைக் கண்ணில்கண்டான். 8

ஆங்கவர்கள் பூசைவாய் அகப்பட்ட கிளிஎனவும் அளவில்ஆற்றல்
ஓங்குபுலி வாய்ப்பட்ட உழைஎனவும் உள்நடுங்கல் உற்றோர்கொன்றைத்
தேங்கமழ்பூங் குழலியரைத் தெய்வத்தேர் மிசைஏற்றிச் சேனைசூழத்
தாங்கரிய பேராற்றல் தசக்கிரிவன் தன்னகரி வந்துசார்ந்தான். 9

*கன்னியர்கள் தாய்மார்கள் கன்றிழந்த பசுப்போலக் கதறிஏங்கி*
நன்னுதலார் தமைஎல்லாம் நடுக்கங்கண் டிடுதலால் நறுமென்கூந்தல்
அன்னநடையாள்பொருட்டால் அடல்இலங்கை பாழாகி அரக்கர்கோமான்
தன்னுடைய முடியோடும் தலைஅற்று விழுகஎனச் சபித்தார்அன்றே.

12. வருணன்மேல் செல்படலம் முற்றும்.

---

## 13 சூற்பநகி சோபப் படலம்

*ஆயனென்தன் அணிநகரம் அவன்அடைய அடற்கால
கேயர்அமர் பொருகளத்துக் கிளர்ந்தெழுந்த பெருஞ்சேனை
சாயஅமர் பொருதழித்துத் தன்கணவன் படக்கேட்ட
தீயகொடுஞ் சூற்பநகி செய்தனயாம் உரைசெய்வாம், 1

சலமேவு துயரினளாய்த் தான்வீழ்ந்து புரண்டலறித்
தலைமேலே கைவைத்துத் தன்கணவன் தான்கிடந்த
கொலைமேவு போர்க்களத்தைக் குறுகியவன் மிசைக்கிடந்து
மலைமேலே வந்ததொரு மலைவிழுந்த தெனவிழுந்தாள். 2

விழுந்தாளை நெடும்பொழுது வெய்துயிர்ப்பொன் றில்லாளைக்
கழிந்தாள்தன் கணவனொடும் எனஇரங்கிக் காரிகையார்
செழுந்தாரை நீர்முகத்துத் தெளிப்பஉயிர் தீர்ந்தஉடல்
எழுந்தாற்போல் எழுந்தவள்தான் இவைசொல்லிப் புலம்புவாள். 3*

காதலால் நீஎன்னைக் கைப்பிடித்த அன்றுமுதல்
பேதையேன் சொல்லியசொல் பிழைத்தறியாப் பேரவுணர்
நாதனே என்னைநீ நடுக்கங்கா ணுதூரில்
போதவே எழுந்திராய் பொய்யுறக்கம் உறங்காதே. 4

என்னிற்பின் சூற்பநகி இருக்குமோ இராளோஎன்
றுன்னிச்சோ திப்பான்உள் உயிரடங்கிக் கிடந்தாயோ
பின்னிற்கும் பழிபூண்டு பெருந்துயரப் பட்டுநான்
உன்னிற்பின் இருக்கலேன் எழுந்திராய் உத்தமனே. 5

முன்னமே தான்என்னை முறைமையாற் கொடுத்துப்பின்
என்னைநுல் இழப்பித்த இராவணனும் என்தமையன்
தன்னைமூ வுலகாள யான்கண்டு தார்அவுணர்
மன்னனே உடல்சுமந்து வாழ்வேனோ வாழேனே. 6

கைமுறுக்கி வாய்மடித்து நீகிடந்த கருத்தறியேன்
மைமுறித்த கருமனத்து வாளரக்கர் கோமானை
மெய்முறிக்கப் பெற்றிலேன் எனநினைந்தோ மேவாரை
மொய்முறிக்கும் ஆற்றலாய் காரணம்என் மொழிவாயே. 7

என்றினைய பலபன்னி எழில்கணவன் தனைப்புல்லிக்
கன்றியநெஞ் சினள்ஆகிக் கதறுகின்ற சூர்ப்பநகி
தன்துணைவி மாரவளைத் தாங்கிக்கொண் டவர்போகக்
குன்றனைய தோளானை விதிமுறைதீக் கொளுத்தினர். 8

ஆயவன்தன் காதலனை அழல்படுத்தார் எனக்கேட்டுக்
காயும்வெங் கனல்என்னக் காந்துகின்ற மனத்தினளாய்
வாய்ஒருகால் ஓயாது மழையிடித்த தெனக்கதறிச்
சேயிழையார் எல்லாரும் தேற்றவுந்தான் தேறாதே. 9

ஆக்கும்அவ னேஅழிக்கை அழகன்றென் றுணராதே
தாக்கியென்தன் காதலனைத் தரைப்படுத்த தசமுகன்முன்
நாக்கினைத்தான் பிடுங்கியென்தன் நடலைநோய் தான்தீரப்
போக்குவன்என் உயிரைஎன்று சூர்ப்பநகி புறப்பட்டாள். 10

மாத்தானை உரிபோர்த்த வார்சடையோன் வாழ்கயிலை
பேர்த்தானைப் பெருவலியால் பெரும்புவனங் களைவென்று
போர்த்தானை புடைசூழப் பொன்னகரில் புக்கிருந்த
மூத்தானை இளையாள்கண் டிவைசொல்லி முறையிட்டான். 11

காசுக்கும் பொன்னுக்கும் மாளிகைக்கும் கடுஞ்சொல்லின்
வாசிக்கும் கலாய்த்துண்ணு மணவாளப் பிள்ளைகளைப்
பூசிக்கப் பொருகளத்தில் கொன்றுபுரட் டிடுகையோ
ஆசைக்கப் புறஞ்செலுத்தும் அண்ணுவோ அண்ணுவோ, 12

சொல்லெடுத்துன் பழிதூற்றித் துன்பத்தால் தன்வீடு
கல்லெடுக்க நல்உற்றுர் கரைந்தேங்கக் கடைகாணில்
வில்எடுக்கை உன்னுடைய வீரத்துக் கழிவன்ருே
அல்எடுக்குந் தலையாயத் தண்ணுவோ அண்ணுவோ. 13

முலைப்பாலே நஞ்சாகி முனைமுகத்தில் ஒருக்காலும்
கொலைப்பான்மை அல்லாத மைத்துனனைக் கொலைசூழ்ந்த
புலைப்பாவி உன்தமையன் பொல்லான்என் றெல்லாரும்
அலைப்பாலே உறமெலிந்தேன் அண்ணுவோ அண்ணுவோ. 14

மிகைஎல்லாம் செய்தாரே ஆயிடினும் விளையாட்டாம்
வகையல்லா தொருக்காலும் மைத்துனனுர் தம்மோடும்
பகையில்லை எனும்அந்தப் பழமொழியு‍ர் பார்த்திலையே
அகைவில்லான் வரைஎடுத்த அண்ணுவோ அண்ணுவோ. 15

✠இலங்கைவேந்தன் தன்முன்னே இன்னசொல்லி முறையிட்டு
விலங்கல்வந்து வீழ்வதுபோல் விரித்ததலையும் வெறுங்கழுத்தும்
கலங்குமனமும் உடையாள்என் கணவாஎன்று கைஎடுத்துப்
புலம்பிஅவன்தன் அடிவீழ்ந்து வீழ்ந்துபொருமிப் புரண்டழுதாள்.

தங்கைவிழுந்து புரண்டலறத் தாங்கிஎடுத்துத் தசக்கிரிவன்
மங்கைஉனக்கிவ் வன்துயரம் வந்ததென்கா ரணம்என்னக்
கங்கைமுடியோன் வரைஎடுத்தோய் காலகேயர் பொருகளத்துன்
அங்கைவாளால் என்கணவன் ஆவிஉண்டாய் எனஅழுதாள். 17

✠பெண்ணுனள்அன்னியர்குலத்துப் பிறந்தாள்வினைப்பேரிடும்பையுற
அண்ணுநான்உன் தங்கைஎன அவளுக்கவன்தன் உயிர்அளிப்ப
தெண்ணுதேஉன் உடன்பிறந்த என்காதலனை நீகொன்ருல்
விண்ணேர்உன்னை என்சொல்லார் என்றுவிம்மி வெய்துயிர்த்தாள்.

இன்னபலவும் பன்னும்இவட் கிலங்கைவேந்தன் இவைவிளம்பும்
உன்னைஉடைய கணவனைநான் ஒன்றும்உணரா துயிர்ஒழித்தேன்.
என்னைஅமரின் மதிமயக்கி என்னுலேஇங் கிவன்ஆவி
தன்னைஉண்ட விதியாரைத் தடுக்கவல்லார் தாம்உண்டோ. 19

என்றுதங்கை மனம்உவப்ப எல்லாமாட்சி களும்பண்ணி
ஒன்றுகுணத்து நற்ருய ருடனேபிறந்தாள் வயிற்றுதித்த
வென்றிவீரக் கரனும்அவன் விரிந்தபடைக்குத் தலைவனும்
துன்றுபுயத்துத் தூடணனும் தோலாவழிமுச் சிரத்தோனும் 20

இந்தமூவர் தண்டகமாம் எழில்சேர்வனத்துள் இருப்பார்கள்
முந்தியேநான் அங்கவர்க்கு மொழிந்துவிட்டேன் அவரோடும்
சிந்தைஉவந்தாண் டிருத்திஎனத் தேவர்செய்த தவப்பயனுல்
அந்தஅரக்கி அவ்வனத்தில் அவரோ டிருந்தஅக்காலை. 21

13-வது சூர்ப்பநகி சோபப்படலம் முற்றும்.

## 14. மதுவின் மேற் சென்ற படலம்

நிருதர்கோமான் நிகும்பலையாம் நீடுவனத்தின் இடைபுக்கு
மருவிஅங்கண் மகம்செய்யும் மகனைக்கண்டு மனமகிழ்ந்து
கருதிநீசெய் காரியம்என் கழறென்றுரைப்பக் குருவாய
சுந்திவேலை கரைகண்ட தோலாவினைச்சுக் கிரன்சொல்லும். 1

அங்கிட்டோமங் கோமேதம் இராசசூயம் அயமேதம்
பங்கப்படாத பவுண்டரிகம் வாசபேயம் பாசுபதம்
இங்கிப்பெயராம் பெருவேள்வி ஏழும்சமைத்த நின்மகற்குக்
கங்கைச்சடையோன் வெளிப்படஇக் காளையவனைக் கண்டுவப்ப. 2

அழிவிலாத அடல்தேரும் சிலையுமாவ நாழியையும்
இழிவிலாத பெருந்தவத்தின் இன்பதுன்பங் களைஅறுத்தோர்
மொழியும்சாபம் எனத்தப்பா முரட்பல்லவமு முனைமுகத்தில்
ஒழிவிலாத பகைஅறுக்கும் ஒளியத்திரமும் உவந்தளித்து. 3

இலங்காபரணத் திளமுலையார் இடுக்கண்மாயத் தகப்பட்டும்
கலங்காநெஞ்சத்து யோகியரும் கலங்குமாயை கடிதியற்றி
நிலங்கால்குலைய நீடமரர் நின்றுநடுங்க நேர்வெல்லும்
பலங்காதலித்த வவைபெறுவாய் என்றுகொடுத்துப் பரனகன்முன்.

† இன்னன சுக்கிரன் இயம்பக் கேட்டருள்
மன்னனும் அரக்கனும் மகிழ்ந்து மைந்தனைப்
பொன்னகர் பொருவிடும் இலங்கை புக்குருத்
தன்னினநட் டாரொடுஞ் சாரமற் றேரர்நாள். 5

* பாகுபோலும் மொழியாரைப் பற்றிக்கொணர்ந்த பாவையரைச்
சோகமேவு சிந்தையரைத் துணைக்கண்அருவி சோர்வாரைச்
சேகுசேரு மனத்தரக்கன் திரளவளைப்பத் தீவினைகள்
போகமுயன்ற வீடணன்அப் பொல்லாச்சரிதற் கிவைஉரைப்பான்.

மாசிலாத குடிப்பிறப்பு மானங்கீர்த்தி இவைமாய
ஆசைநோயா னதுபெருக அனங்கசரத்தால் ஏவுண்டு
கூசல்இன்றிக் குவலயத்தில் குலமங்கையரைக் குலைசெய்வோர்
நாசம்எய்திப் பழியோடும் நரகம்உறுவர் எனஉரைத்தான். 7

ஏகவீர இதுகிடக்க இயம்பக்கேண்முன் எய்தியதை
மேகநாதன் வேள்வியிலான் வீரனுய உர்பிதுயிற்
போகமேவி அவன்கிடந்தான் புனலின்மூழ்கி யான்கிடந்தேன்
ஆகமதுவாம் அடல்அரக்கன் அணிநீடிலங்கை அரண்புகுந்து. 8

உற்றகரிதேர் பரிகாலாள் உலையநூறி உயர்மவுலிக்
கொற்றவாநஞ் சிற்றவ்வை கும்பிநசியாங் குணவதியைப்
பற்றிக்கொண்டு தன்னுடைய பதியில்புக்கான் எனத்தம்பி
சொற்றவார்த்தை கேட்டழன்று துடிக்கும்நெஞ்சன் இவைசொல்வான். 9

பூனைச்செவியை எலிமோந்து புலியைப் புல்வாய் தொடர்ந்ததெனத்
தானைக்கடலைத் தான்கலக்கித்தாயார்க்கிளையாள் தனைக்கொண்டென்
மானக்குலத்தை வரம்பழித்தான் மதுவே கெட்டேன் வாழ்ந்தவா
சேனைக்கடல் அம் மதுபுரத்துச் செல்க என்றான் சினமிக்கோன். 10

நம்பிபுகழ்வீ டணன் தன்னை நகரங் காவல் பெறஇருத்தி
வெம்புபோருக் கொருப்படுக மேகநாதன் எனவிளம்பி
எம்பிஉறக்கம் தீர்த்தவனை ஈண்டக் கொணர்திர் எனஇயம்பப்
பம்பும்பேரி துடிமுரசம் பலவும் முழக்க அவன்உணர்ந்தான். 11

வையம்ஓரா யிரத்தேற்றி வந்தசோறு மதுவெள்ளம்
பெய்தகுடங்கள் ஆயிரமும் மொருங்கை வேழப் பெருந்தசையும்
வெய்யகோபன் இவைஎல்லாம் விழுங்கப் பசிபோய் மிக்கதாய்
நெய்யை மிகவே சொரிந்தக்கால் நெருப்பை அவிக்க ஒண்ணுமோ.

பின்னும்ஓரா யிரஞ்சகடம் பெய்தசோற்றுப் பெருங்குவைய
தன்னைஉண்ணச் சிறிதுபசி தணிந்து மகிழ்ந்து வாய்பூசி
மன்னன் அழைத்த காரியத்தைக் கேட்டுமறுகு மனத்தினனாய்ப்
பொன்னின்மணித்தேர்ப்போர்க்கோலம்பொலியஏறிப்புறப்பட்டான்

கும்பகன்னன் உணர்ந்தெழுந்து கொடிவீதியிலான் எனக்கேட்ட
கொம்புபோலு நுண்ணிடையார் கோதைசோரக் குழல்சரியச்
செம்பொன்மாடத் தரமியத்தின் சீரார் மணிப்பூண் கோபுரத்தின்
உம்பர் மடவார்இரைத்தீண்டிஒருவர்க்கொருவர் இவைஉரைத்தார்

கண்ணால் அவனை அண்ணாந்து கணைக்கால் மேற்காண் பரிதென்பார்
விண்ணோர் தங்கட் கிவன்மேனி விளங்கக் காண லாம்என்பார்
பெண்ணா னாள்தான் ஒருத்திபெறும் பின்னை யேயிங் கிவன்என்பார்
எண்ணா மதுவந் தெதிர்ப்படுமேல் இவன்கையாலே படும்என்பார்.

மண்ணைத் தாழ வரும்இதுஓர் மலைஎன் பார்ஆண் வடிவென்பார்
திண்கை ஒன்றால் எடுக்கும்அரன் சிலைஎன் பார்அச் சினமுகத்துக்
கண்கள் என்பார் அல்லவெறுங் கனலே என்பார் கண்டமடம்
பெண்க ளானார் இவ்வண்ணம் பேசப்பெருவீ திகள் கடந்தான். 16

கண்ணார் நுதலான் அருளியதிண் கவசம்இட்டுக் கழல்கட்டித்
திண்ணார் அமரர் புரந்துரக்கும் செம்பொற் றேரின் மிசையேறி
மண்ணோர் குலையத் தானவர்கள் மறுகிஓட மனங்கலங்கி
விண்ணோர் ஓடச் சிலைஏந்தி மேகநாதன் புறப்பட்டான். 17

இலங்கைவேந்தன் இலங்கயில்வாள் இறுகவீக்கி ஏதிகளால்
கலங்ககில்லாத் திண்கவசம் கட்டிவீரக் கழல் ஆர்த்து
விலங்கல் மேல்மின் பரந்ததென வீரபட்ட நுதல் விசித்துச்
சலங்கொள் நெஞ்சன் தரைநெளிய ஏறினான்பொற் றடந்திண்தேர்.

தேருமாவும் கனக்களிறும் செறித்து செல்ல வழிகாணுர்
வீரர்மிடைந்து பின்நின்ருர் முன்நின் ருேரை மிகநெருக்கிப்
பேரும்பேரும் என உரைப்பப் பேரார்பேரும் இடம்இல்லா
தூரும்தெருவும் வகுத்தவன்தான் ஒன்றும்அறியான் எனஉரைத்தார்

உமையாள் பங்கன் வரைஎடுத்த உயர்தோளரக்கன்படைஎழுச்சி
சமையா துலகெங் கணும் நிறையத் தரணியேழுந்தடந்தூளி
அமையா தோங்கிக் கண்மறைப்ப வந்தராய அமரர்கள்கண்
இமையா நொழிய எமைப் படைத்தான் இடும்பைசெய்தான் எமக்கென்ருர். 20

மேகநாதன் முன்செல்ல வெய்ய தம்பி பின்செல்ல
நாகம் அனைய புயத்திலங்கை நாதன் மதுவின் புரம்நண்ணச்
சோகமேவும் மனத்தினளாய்த் துணைக்கண் அருவிசோரவிட
வேகமதுவின் தேவியவன் விளங்குங் கழற்கால் மிசைவிழுந்தாள். 21

தாளில் வீழ்ந்த தாய்தன்னைத் தாங்கி எடுத்துத் தசக்கிரிவன்
கேளி தென்சொல் உன்மனத்திற் கேதமதனை விடுதிமேல்
கோளை உலகில் யார்கடப்பார் என்றுகூறக் கொடியிடையாள்
மீளவவன்தன் அடிவீழ்ந்து விம்மிவிம்மி இவைவிளம்பும். 22

மக்கள் இழந்து மனமயங்கி வருத்தமுற்ற இடும்பையினும்
மிக்க இடும்பை ஒவ்வாத விதவை இடும்பை எனவிளம்பத்
தக்கதாலுல் என்கழுத்தில் தாலிநீதந் தருள்என்று
தொக்க மணிப்பூண் கழலானைத் தொழுது பின்னும்இவைசொல்லும்.

விட்டுவிளங்கு மணிமுடியாய் வேதம் சொன்ன பிரமாதி
எட்டு மணத்தில் ஒருமணமாம் இராக்கதத்தின் இயல்பறிதி
கட்டுமரிய காவலையும் கலக்கிப்புக்கும் கன்னியரை
முட்டிய வரைக்கொடு போதல் வேட்கை முறையாம் எனமொழிந்தான். 24

என்றுதாயர் இவைகூற எல்லாப்பிழையும் உனக்காக
இன்றுபொறுத்தேன்உன்கணவன் இமையோர்உலகங்கைக்கொள்ள
ஒன்றுமனத்தோன் ஆய்என்னே டொக்கநடக்க உரைத்திஎன
நன்றிதென்று துயின்மதுவை நல்லாள்சென்று நண்ணுற்ருள். 25

உறக்க நீக்கி இராவணனின் உறவுவேண்டி உன் நகரின்
புறத்து நின்ருன் அவனேடும் பொருந்தி இனிய புகன்றவர்க்குத்
துறக்கம் வெல்லத் துணைப்படுதி என்றுசொல்லத் தூய்மொழிசொல்
பறுக்க கில்லான் மதில்இலங்கை மன்னன்தன்னை வந்துற்ருன். 26

கொற்ற அரக்கன் மதுவந்து கொண்டாடப்போய் அவன் இல்லம்
உற்ற அமுதாம் பூசனைகொண் டுவந்தங் கொருநாள் இனிதிருந்து
பிற்றைவைகல் பெருஞ்சேனை சூழஏகிப் பெருவினைகள்
அற்றதவத்தோர் பயில் இமையத் தளகாபுரியின் அயல் இறுத்தான்.

13-வது மதுவின் மேற்செல் படலம் முற்றும்.

---

## 15 அரம்பை படலம்

அரவம் பெருஞ்சேனை அரக்கர் கோமான் கைதைவனங்
குரவம் செருந்தி சுரபுன்னை கோலத் தமாலம் குளிர்சந்தம்
மரவம் குருகு பாடலஞ்சீர் மௌவ லாதி மரன்நெருங்கி
இரவும் பகலும் தெரியாத இருட்பூம் பொழிலை எய்தினன். 1

வஞ்சம்இல்லா யோகியர்தம் மனம்போல்தெளிந்து மயங்காத
நெஞ்சுபோலே மிகவளர்ந்து நிலைப்படாத நெடுநீரில்
கஞ்சமலர்ப்பா சடைப்பள்ளிக் காதற்சேவல் அன்னம்தன
தஞ்சமான பெடையோடுந் நழுவித்துயிலுந் தடத்தினதை. 2

ஆடல்தெய்வ மடந்தையரும் அமரர்களும்வந் தவ்விடத்தில்
கூடிக்கலவி அமுதுண்டு குளிர்பூம்புன்னைக் குளிர்நிழலின்
வாடைக்கன்று வந்தசைப்ப மயில்கள்ஆட வண்டினங்கள்
பாடக்கண்டாங் கினிதிருக்கும் படிகத்தலப்பூம் பள்ளியதை. 3

அந்தஅரக்கன் அப்பொழிலின் அழகைநோக்கி அங்கிருக்க
இந்தமாயப் படை யெழுச்சி யாவர்மேல்என் றறியாது
சிந்தைகலங்கிச் செஞ்சுடரோன் இவன்முன்நிற்கை தீதாம்என்
றுந்துதிரைநீர்ப் பெருங்கடலின் ஒளிப்பான்போலக் குளித்தனனால்.

மாலைஅடைய மடவார்கள் மனம்போல்செறிந்த இருளினதாய்
மாலைஅடைய மடவார்கள் மனமுங்கண்ணும் வரிவண்டும்
மாலைஅடையும் வளர்புயத்து வயவாள்அரக்கன் வன்னெஞ்சம்
மாலைஅடைய வாடையொடும் வந்ததாழி வளர்திங்கள். ౽

வெய்யமரீசி அருள்மன்னன் வீழக்கண்ட இருட்குறும்பன்
வையம்புரக்க அக்குறும்பை மாய்ப்பான்தோன்ற மதிமன்னன்
மைகொள் ஆழிகிளர்ந்தார்ப்ப மண்ணில்வாழும் சராசரங்கள்
உய்யநிலவாம் படைபரப்பி உதையகிரிவா ரணமேறி 6

நாயஞானச் சுடர்விளக்குத் தோன்றநில்லா திருவினையாம்
மாயைஎனவு மறத்தின்எதிர் வல்தீவினைமண் டலம்எனவும்
நீஇவ்உலகம் காத்தளிப்பான் நெறியில்புரிய நின்முகத்தில்
தீயஅரக்க ராம்எனவும் தீர்ந்ததந்தச் செறியிருளே. 7

ஆயகாலை இளந்தென்றல் அசைப்பஇசைந்த அனங்கசரம்
பாயநெஞ்சு பதைபதைப்பப் பணைத்தோள்அரக்கர் பதிஅளகை
நாயகன்தன் மகனைய நளகூபரனை நண்ணுவாள்
மேயகாதன் மின்கொடிபோல் விளங்கும்அரம்பை தனைக்கண்டான்.

ஓடிப்போமின் ஆடவர்கள் உயிரைஇழவா தன்றிஅரண்
தேடிக் கொண்மின் எனப்பைம்பொற் சிலம்புபுலம்பும் பதத்தாளை
ஆடற்கதலி இளந்தண்டின் அழகைஅழிக்குங் குறங்காளை
வீடுற்றவரும் விரும்பும்எழில் விளங்கும்அல்குல் தடத்தாளை 9

வனவாசச்சீர் மாதவரும் வானுளோரும் மற்றெவரும்
மனமாலுற்று விழுந்தழுந்தும் வலஞ்சேர்உந்திச் சுழியாளைத்
தனபாரத்தைத் தாங்குவதொன் றில்லையாகி னில்லாதென்
றனுமானத்தால் உண்டாக அடுக்கும்என்னும் இடையாளை. 10

பூணிற்பொலிந்து புடைபரந்து பொங்கிஎழுந்த முலைஉலகை
காணில்கொல்லும் என்றவற்றின் கண்ணைமறைத்த துகிலாளைச்
சேணில்சுடாசீர் ஆபரணம் திகழத்திகழுங் கழுத்தாலை
வாணித்திலத்தின் நிரைபதித்து வைத்தபவள வாயாளை. 11

நீண்டுபரந்து குழையோடு நெருங்கிமதர்த்த கண்ணாளைப்
பூண்டுகொலையில் புரிசாபப் புருவத்தாளைப் பூரித்து
மாண்டமதிபோல் நுதலாளை மலர்த்தாமரைபோல் முகத்தாளை
ஈண்டுமலரும் நறும்புகையும் இன்றிக் கமழ்பூங்குழலாளை. 12

*கண்டுமனங் கலங்கிக் காதற்கடல் பெருக
எண்திசையும் வென்ற இராவணன் தான்நிற்ப
ஒண்திறல் மாரன் உரத்தோர் கணைஉய்ப்பத்
திண்திற லோய்ந்தாங் கவன்இனைய சிந்தித்தான். 13

புண்டரிக மாதோ புனமயிலோ பொற்கொடியோ
அண்டர்கடைந்த அமுதோ அதன் சுவையோ
தண்டதரன் இந்தச் சகத்தினையே தான்அழிப்பான்
கொண்டதொரு கோலமோ கோலத்தின் கொள்கலமோ. 14

விண்ணோர் உலகெல்லாம் மெய்யினால் வென்றிந்த
மண்ணோரில் என்னை வழியடிமை கொள்ளவரும்
பெண்ணோ நான்செய்த பெருந்தவத்தின் பேறோஎன்
கண்ணோ களைகண்ணோ காமத்தின் தீங்கனியோ. 15

ஆரோ அறிகிலேன் என்றவளை வந்தடைந்து
கார்ஓதி பேரழகைக் கண்இருப தால்கவர்ந்துன்
ஊரே துனக்கீங் குறவேவர் உன்னுடைய
பேரேது பெண்ணமுதே பேசென் றவன்பேச. 16

ஆயவள் என்பேர் அரம்பை அளகைக்கு
நாயகன் மைந்தன் நளகூ பரன்என்னும்
தூயவன் என்பதி என்றுங் கவள்சொல்லத்
தீய அரக்கன் சிரித்தினைய செப்பினன். 17

தேவரே யாதி திரிபுவனத் துள்ளோர்கள்
யாவரே ஏனும் எதிர்ந்து வசீகரித்துப்
போவதே அல்லால் பொதுமகளி ராம்தெய்வப்
பாவையர்க்கும் உண்டோ பதிஎன் றவன்பகர. 18

போரார் வேற்கையாய் பொதுமகளிர் ஆகியஅக்
காரார் குழலியரைக் காதலித்துக் கைக்கொண்டார்
ஆரே னும்ஆக அவர்அளவு தாம்ஒன்றும்
பாரார்அப் பாவையர்கள் தம்பதியாய்க் கொள்வாரால். 19

மெய்க்கொண்ட உள்ளத்து மேலோரே ஆயிடினும்
பொய்க்கொண்ட சிந்தை யாரேனும் பொதுவாய
மைக்கொண்ட கண்ணார் மனைவியர்ஆ கத்தம்மைக்
கைக்கொண் டிருந்தார்க்குத் தப்பல் கடன்அன்றால். 20

என்றரம்பை கூற இராவணன் மேல்விழுந்து
சென்றவளைப் புல்லப் புகும்அளவில் சேயிழையாள்
நின்று நடுங்கி நெறிஅல் லவைசெய்யேல்
குன்றனைய தோளாய் எனத்தொழுது கூறுவாள். 21

சன்மங் கடந்த புலத்தியனும் தாபதன்தன்
நன்மைந்தன் மைந்தன் நனிவயிற்று வயிற்றுதித்த
நன்மைந்தன் எங்கோன் நளகூப ரன்முறையால்
நின்மைந்தன் ஆதலின் நீஎன் குருஎன்றாள். 22

அரிவைஇவை விளம்ப ஆற்றா தனங்கன்
தெரிகணைகள் பாயத்தன் சிந்தை தடுமாறி
ஒருதலையால் இன்றது காமம்என் றுன்றதப்
புரிகுழலை மெய்பற்றிப் போகவிடம் தான்உண்டான் 23

மின்னனையாள் சால வெருவி விரைந்தேகித்
தன்னுடைய காதலர்க்குத் தான்புகுந்த வாறுரைப்ப
அன்னவனும் யோகத்தின் ஆயிழையைத் தன்வலியால்
தென்இலங்கை மன்னவன்தான் செய்ததெல்லாம் உட்டெளிந்தான்.

நல்லார் புகழும் நளகூ பரன்ஒருவன்
இல்லாளைத் தேராது தீண்டும் இராவணனும்
பொல்லா ஒழுக்கத்தான் பொன்முடிக ளோடுதலை
எல்லாம் எழுபிளவாய் வீழ்க எனச்சபித்தான். 25

கோகனக மாதனைய கொம்பு தனைப்பிரிந்து
போகநெடும் பொழுது போனவழி பார்த்திருந்து
சோகம்உறு மனத்தான் தூயஅணை மேலேறி
வேகம்அடங் குகளி றனையான் வெய்துயிர்த்தான். 26

நீடுமதிய நிலா வலையை வீசிடலும்
ஓடும்இடங் காணா தொளிப்பிடம் ஒன்றின்றியே
வாடிய சிந்தை மதிள்இலங்கை மன்னவனைக்
கோடிய வின்மதனன் கொல்லத் துடங்கினனே. 27

வென்றி மதனன் விடுசரம்பாய் வெம்புண்ணில்
சென்று நுழைந்துபுகுந் தென்றற் கனலாவி
நின்ற இடந்தேடி நிலைகலங்கி நீடுயிர்த்தே
ஒன்றும் அறியாது உழந்நிங் கிவைஉரைத்தாள். 28

மின்இடையி ஞர்தம்மை வெல்லஅரி தென்றெண்ணி
உன்னுடைய காந்தி அழித்த ஒளிமுகத்தாள்
தன்னிடை நீ சீருய் தழல்சொரிந்த தண்மதியே
என்னிடைநீ சீறஉனக் கென்னபிழை செய்தேன்யான், 29

தாழ்ந்தாரைக் கொல்லார் தயாவுடையார் தாங்கேடு
சூழ்ந்தாரே ஆயிடினும் தோலா வலிமதனன்
காந்தார மென்மொழியார் கண்ணம்பா லேயுண்டு
வீழ்ந்தார் தமைக்கொன்ருல் வீரற் கிழிவாமால். 30

நின்றலைக்கும் ஆழிக்கும் நீளும் இரவுக்கும்
அன்றிலுக்கும் தன்னை அடக்குவார் இல்லாத
தன்தலைக்கன் ருய்இத் தமியேன் உயிர்கொள்ளும்
தென்றலுக்கும் என்னோடு செற்றம்எது தேர்ந்திடிலே. 31

செம்பஞ்சுச் சீறடியும் சீர்க்குறங்கும் அல்குலுமென்
கொம்பஞ் சிடையும் குவிமுலையும் என்மனத்தைக்
கம்பஞ்செய் தோளும் கழுத்துங் கவின்முகமும்
அம்பஞ்சு கண்ணும்என் ஆவிக் கடைக்கலமே. 32

உம்பர் வளநாட்டும் ஒப்பிலா உத்தமிகள்
அம்பளக நீலமணி தரள முண்ணிரைத்த
செம்பவளஞ் செவ்வாய் கரும்பவள்தன் செஞ்சொல்மதன்
வெம்பவளர்ந் தாள்புருவம் வில்லோ விளம்பிடிலே. 33

விண்ணோர் பெருமான்தன் வெற்பெடுத்த வென்வீரத்
துண்ணோவு செய்தென் உயிர்உலைப்பாள் கேவலமும்
பெண்ணோ அவள்அல்லள் பெண்உருவம் கொண்டிந்த
மண்ணோர் களைஎல்லாம் மாய்க்கவருங் கூற்றே. 34

மதியால் வருந்தநான் மைவண்ண ஓதியால்
உதியாமை.யோர்இரா வோர்ஊழி யாயதெனக்
கொதியா அரக்கன்நமை கோள்இழைக் கும்என்று
கதிரோன் நடுங்குவான்போல் உதையம் கண்ணுற்ருன். 35

அரம்பைப் படலம் முற்றும்.

---

## 16. தேவர்கள் மேல் செல்படலம்

துன்னிருள் துரந்து வெய்யோன் தோன்றிடத் துயரம்நீங்கித்
தன்னெதிர் இலாத வென்றித் தசமுகன் தானைசூழப்
பொன்னுல கதனை நோக்கிப் புறப்படப் புரைதீர் வானோர்
மன்னவன் அதனைக் கேட்டு மாயனை வந்து சேர்ந்தான். 1

மருங்கிய மனத்தி னோர்கள் உள்ளெழும் ஒளியை உம்பர்
அருந்திடும் அமுதை அன்பர்க் கன்பனை அகன்றுநீண்டு
திருந்திய கைகால் கண்கள் சிவந்தொளி திகழ்தலாலோர்
கருங்கடல் கமலம் பூத்த தெனத்திகழ் காட்சியானை.

உண்டிலை என்று தம்முள் உணர்விலோர் பிணங்கநின்ற
புண்டரீ கக்க ணனைப் போக்கொடு வரவிலானைக்
கண்டனம் என்றோர்க் கென்றும் காண்பரி யானைஎன்றும்
கண்டிலம் என்றோர் கண்ட கண்ணனைக் கண்ணிற்கண்டான். 3

கண்டடி வணங்கிநின்ற கடவுளர் தம்மை நோக்கிக்
கொண்டலும் கடலும் மாமை குன்றிடுங் கோலமேனி
வண்டுசேர் துளபமாலை மாயனும் மனத்தில் பீடை
உண்டதை உரைத்தீர் என்ன உம்பர்க்கோன் உரைக்கல்உற்றான் 4

முன்பெமக் கிடரைச் செய்த முரணுடை அசுரரோடும்
வன்படை அரக்கர் வர்க்கம் வழிவழி அறுத்து மாற்றிப்
பின்பெமக் கிதமே செய்து பெற்றதாய் என்னப் பேணும்
அன்பளர் அலக்கண் வந்தால் ஆருளர் நீயே அல்லால். 5

சிரத்தொகை அறுத்துத் தீய்க்குத் திருத்திசெய் தயன்பால்பெற்ற
கரத்தினன் வலியின் மிக்கோன் மண்ணுல கழித்தின்றெம்மை
நெருக்குவான் சேனை யோடு நிருதர்கோன் வந்துநின்றான்
திருக்கிளர் மார்ப நாங்கள் செய்வதென் என்னச்சொன்னான். 6

உரைத்தவா சகங்கள் கேட்ட உத்தமன் உலகைக் காயும்
அரக்கரை அவிய நூறி இராவணன் அயன்பால் பெற்ற
வரத்தையோர் வழியி னாலே மாற்றிமற் றவன்ஈ ரைந்து
சிரத்தினை அறுத்து வீழ்த்திச் சிந்தைநோய் தீப்பன் என்றான். 7

என்றவன் இயம்பக் கேட்ட இந்திரன் இமையோ ரோடும்
தன்திரு நகரம் சென்று சார்தலும் தருக்கின் மிக்க
வன்திறல் அரக்கர் கோமான் வளர்பெருஞ் சேனை சூழத்
சென்றுவிண் அதிர ஆர்த்துத் தேவரை இடுக்கண் கண்டான். 8

சேனையோ டரக்கன் நம்மேல் செருச்செய்வான் வந்தான் என்ன
வானவர் சேனை வெள்ளம் மறிகடல் என்னப் பொங்கி
ஆனைதேர் பரிமா உந்தி அரக்கரோ டமர்செய் வேலை
ஆனவர் பூசல் காண்பான் ஆதரித் தயன்வந் துற்றான். 9

கொற்றவா னவர்கள் விட்ட கொடும்படை அரக்கர் சேனை
உற்றன ஊழித் தீயின் உடன்றன தொடர்ந்து செல்ல
இற்றன கைகால் பொங்கி எழுந்தன குருதி வெள்ளம்
அற்றன தலைகள் பாடி ஆடின அலகைக் கூட்டம். 10

மின்படை அநேக கோடி விடுத்துவிண் ணோர்கள் கொல்லத்
தன்படை மாயக் கண்ட தசமுகன் சலித்துத் தன்மேல்
அன்புடை நெஞ்சராய் இவ் அவனியை அழிக்கும் ஆற்றல்
வன்படைத் தலைவர் வானோர் மேற்செல வகுத்து விட்டான். 11

சூரியன் பகைவன் கோபத் துன்முகன் தூமகேதுக்
காரியம் அறியா வென்றிக் கரன்திரி சிரத் தான் பொய்யில்
கூறிய தூடணன்தீக் கொடும் சுகன் சாரன் என்போர்
பாரியல் பேதும் இல்லாப் பசாசன்வெம் பாசக் கையான். 12

மங்கிய புகழ் மாரீசன் மகோதரன் யாக கோபன்
பொங்கிய விரூபாக்கன்வன் புகைக்கண்ணன் றூமிராக்கன்
தங்கிய அகம்பன் கும்பன் நிகும்பன்கா விராக்கன்வெஞ் சம்பு மாலி
துங்கநீண் மொய்ம்பர் இன்னோர் சூழ்தரச் சுமாலிநேர்ந்தான். 13

விட்டெறி சூலம்தண்டு விறல்மழு உலக்கை கூர்வாள்
கட்டுநீள் பாசம் தோட்டி கப்பணம் கலப்பை ஈட்டி
வட்டவேல் முதல உந்தி மழைஇடிப் பென்ன ஆர்ப்பக்
கெட்டனர் விண்ணோர் ஓகை கிளர்ந்தனர் அரக்கர் எல்லாம். 14

பொருப்புறு களிறும் தேரும் புரவியும் போகத் தூண்டி
முரிப்புறழ் தண்டும் வாளும் முதல்நெடும் படைகள் உந்திச்
செருப்புரி வானோர் ரானோர் திரண்டனர் செறுத்துத் தம்மில்
ஒருப்புரிந் துந்தநில்லா துடைந்ததவ் அரக்கர் சேனை. 15

இருபடை வீரர் உள்ளோர் யாவரும் எடுத்துச் சாய்த்துப்
பொருவழிச் சுமாலி பொங்கிப் பொருகணை மாரி தூவி
வருபடை மாயக் கண்டு வசுக்களில் எண்மர் ஆவோன்
செருவலி மிகுபொற் றுரான் சென்றவ னோடு நேர்ந்தான். 16

ஒண்திற லோர்கள் தம்மில் உற்றமர் செய்யுங் காலை
கண்டவர் வியப்பச் சாரிந் திரன்மனம் கனன்று பொங்கித்
திண்திறல் சுமாலி தேரைச் சின்னஞ்செய் தவன்தன் சென்னித்
தண்டினை வாங்கி ஆற்றல் தடக்கையால் சுழற்றி விட்டான். 17

காலன் வெந் தண்டிதென்னக் கடவுளோர் சீற்றம்என்ன
ஆலம்வந் தென்னஊழி அயில்என்ன அரஞர்விட்ட
சூலம தென்ன மாயோன் சுடர்விடு நேமி என்னச்
சீலம்ஒன் றில்லான் தன்மேல் சென்றது தேவர் வாழ்த்த. 18

குன்றின்வீழ் அசனி என்ன அமரர்கோன் குலிசம் என்ன
வென்றிசேர் சுமாலி சென்னி வீழ்த்தவன் வெற்புமேனி
ஒன்றிய வங்கம் எல்லாம் உருத்தெரி யாதவண்ணம்
கன்றிய குருதி நீரால் அனைத்தது கதையாங் கூற்றம். 19

பல்லணை குளிப்பப் பண்டு படிக்கொரு வீரன் என்னும்
சொல்லணை யுறப்போர் வென்ற துறுகழல் சுமாலி என்னும்
வல்லணை முறிய லோடும் வளர்படை வெள்ளந் தன்கை
வில்லணை கட்டிப் போர்க்கு விலக்கினன் மேகநாதன். 20

பரியின்மேல் பாகன்தன்மேல் பாய்மத அருவி வேழக்
கரியின்மேல் வாசியின்மேல் கிளர்பதா தியின்மேல்பாயச்
சொரியுமா மேகம்என்னச் சுடர்க்கணை துறந்தான் சூழ்ந்து
புரியுமேல் புவன மூன்றும் பொடிசெய வல்லவீரன் 21

ஓட்டிய பரிதேர் காலாள் உலைந்திடக் கண்டுநின்ற
வட்டவெண் குடையான்மௌலி வாசவன் மைந்தன் சீறி
விட்டிலங் கெயிற்றுப்பேழ்வாய் மேகநா தன்றன் னேடு
முட்டினன் அவனும்சென்று முடுகினன் போரின் மூண்டான். 22

இருவரும் மேகநாதன் இவன் இவன் சயந்தன் என்று
தெரிவரும் கடுமை ஓரார் திரிபுவனத்துள் ளோர்கள்
வெருவர இருவர் சேனை வியந்துபோர் கண்டு நிற்ப
ஒருவரை ஒருவர் வெல்ல உற்றமர் புரியுங்காலை. 23

ஏழுகம் அறிய வல்ல இராவணி எதிர்ந்தோர் சீறி
மாமுகம் அறிந்து தூண்டு மாதலி மைந்தன் ஆய
கோமுகன் என்னும் பாகன் குலைந்திட அவன்தன் மெய்யில்
தீமுக வயிர வாளி செறித்திடச் சயந்தன் சீறி. 24

ஏகவீ ரியனும்உள்ள இராவணி ஏறுதிண்தேர்
பாகன்மேல் பகழிமாரி தூவிடப் பாயுர்சோரி
யோகமா நெய்யிற்பொங்கி ஓங்கிய வெகுளித்தீயின்
மேகநா தன்தீவாளி விடுத்தனன் சயந்தன்தன்மேல். 25

இயங்கிய வடவைத்தீயின் எரிகணை நிறத்தில்தைக்க
மயங்கினன் சயந்தன்பாகன் மகன்வலிப் புலோமன்வந்து
முயங்கியங் கவனைக் கொண்டு முனைக்களம் கடந்துபோகப்
பயங்கிளர் வானோர் எல்லாம் பாறினர் பரந்தார் எங்கும். 26

சன்மகன்மந் தீர்செய்யாள் தலைமகன் தந்தஅந்தத்
தொன்மகன் மைந்தன்தன்பால் தோன்றிய தூயமைந்தன்
புன்மகன் பயந்தஅந்தப் புலைமகன் சயமுப்போரில்
தன்மகன் தளர்வுங்கேட்ட சதமகன் சலத்தின்மிக்கான். 27

வருகதேர் என்ன ஒல்லை மாதலி கொணர்ந்து நிற்பக்
குரைகழல் அணிந்து கோதை விசித்துத்தன் கோல மார்பில்
எரிமணிக் கவசம் வீக்கி எழில் நுதல் பட்டஞ் சேர்த்துத்
தெரிவையர் திரண்டு வாழ்த்த ஏறினன் செம்பொற் றிண்தேர். 28

ஆனகம் முரசம் பேரி ஆகிய கலனை எல்லாம்
வானகம் அதிர நின்று முழங்கமா கதர்கள் ஏத்தத்
தேனகு கோதை மாதர் திரண்டனர் குனிப்பத் தெய்வக்
கானம்வந் தெழவந் தெங்கும் கலந்துகந் திருவர்பாட. 29

உருத்திரர் ஒருவரோடு பதின்மரும் ஒளிரும் ஈரா
றருக்கரும் எண்மராய வசுக்களு மாய்ந்த கேள்வி
மருத்துவர் இருவர்தாமும் முதலினர் வானோர் வாழ்த்தச்
செருக்களம் அதனைநோக்கிச் சென்றனன் தேவர்கோமான்.

*இந்துசே கரன்பொருப் பெடுத்ததோள் இராவணன்
அந்தஇந் திரன்றன்மேல் அழன்றுபோர் அமர்ந்திட
விந்தைதங்கு திண்புயத்து மேகநாத னில்எனத்
தந்தையைத் தவிர்த்துவந்து தானையோடு சீறினன். 31

வாரிமொண்டு கொண்டெழுந்து மாகமேறு வார்சிலைக்
கார் அதிர்ந்து கொண்டு தூவு காலமாரி யாம்என
வீர வெஞ்சிலைத்தடக்கை மேகநாதன் விண்ணகம்
தூர உம்பர் சேனைஅம்பு துன்றவாளி தூவினன். 32

கால் துணித்த கைதுணித்த கந்தரம் துணித்தநீள்
வால் துணித்த மத்தகம் துணித்தவெண் மருப்பொடும்
தோல் துணித்த தன்மையாவர் சொல்லுவார் துணித்தவாள்
வேல் துணித்த வில்துணித்த வெம்மழுத் துணித்தவே. 33

உரம் துணிந்த கால்துணிந்த வால்துணிந்த உற்றமாச்
சிரம் துணிந்த தார் துணிந்த வார்துணிந்த திண்பதக்
குரம் துணிந்த கூளிஉற்ற குக்கிவாதை தீரஊன்
பரந்த திந்திரன்பதாதி பட்டதேவர் பட்டுளார். 34

ஆழி அற்ற ஆணி அற்ற அச்சும் அற்ற உற்றதேர்
ஊழி உற்ற வாடையால் உலைந்த குன்றை ஒத்தகால்
வேழ்வி உற்ற வீரவிற்கை மேகநாதன் வெங்களத்
தாழிஉற்ற தேவராம் தயிர்க்குமத்த தாயினன். 35

எண்ணகத்த தும்பை வீரன் ஏகரூபி ஆயினும்
விண்ணகத்தும் விண்ணைமூடு வெற்பகத்தும் வேலைசூழ்
மண்ணகத்தும் மாதிரப் புறத்தகத்தும் வானுளோர்
கண்ணகத்தும் உள்ளுவோர் கருத்தகத்தும் ஆயினன். 36

சந்தவில்லி முப்புரந் தழற்படச் சரந்தொடும்
அந்தவில்லி யுஞ்சினத் தழன்று போர் நிசாசரர்
சிந்தவல்லி யைந்தெடுத்த செங்கண்மாலு மேயலால்
இந்தவில்லி ஒக்கும்வில்லி இல்லைஇல்லை இல்லையே. 37

என்று கூறி நான்முகாதி தேவரும் இயாவரும்
வென்றி வில்லி மேகநாதன் வீரமே விளம்பியுட்
கன்று தேவ ரோடுபோர்செய் தாய்சினத் தரக்கர்போர்
இன்றுடே முடிந்ததென் றெடுத்துரைக்கும் எல்லையில். 38

*அம்பரமும் எண்திசையும் நின்றதிர அங்கரவ மும்பெருகிடத்
தம்பமது கொண்டொரு தடங்கிரி நடந்துவரு கின்றதெனவும்
கும்பகரு ணன்குருதி கண்கள்வழி பொங்கியஓர் குன்றெனவும்வந்
தும்பர்படை யோடஒரு தண்டுகொ டறைந்தனன்உ லைந்துவிழவே,

அடல்பொரு களிற்றொடு களிற்றினைஅ டித்துவசை யற்றமணிதேர்
தடக்கையின் எடுத்தொர்இர தத்தினைஅ டித்துவலி தக்ககொடியோன்
மிடல்பரியி னைப்பரியின் எற்றியுர்மி கைத்தசுர ரைச்சுரரொடும்
கடல்கடையும் மத்தின்மிசை யிற்பொரு படைக்கடல் கலக்கினன்அரோ. 40

கடித்தெயிறு றத்திருகி இட்டும்வலி மிக்ககர முட்டிகையினல்
இடித்தென உரத்தின்மிசை குத்தியும் எதிர்த்தசுர ரைக்கரம்எடுத்
தடித்தும் அடியிற்பட மிதித்தும் அவலப்பட உதைத்துமணியார்
முடித்தலை களைப்புரள வெற்றியும் முரட்படை முறித்துதறினன் 41

முறிந்தன தகர்ந்தன பிளந்தன நெரிந்தன முயங்குநளைபண்
பறிந்தன நுகங்களும் ஒடிந்தன விரிந்துபரி பாலகனொடுபோய்
மறிந்தன கவிழ்ந்தகல மாமென விழுந்தன வலிந்துகடவும்
செறிந்ததுளை ஆணிகள் கழன்றன சிறந்தபொறி தேர்நிரைகளே.

முரண்டரும் எலும்புகள்முறிந்தசில நீள்வயிரமொய்கொள்பணையில்
திரண்டகை நெரிந்தசில திண்பகம் ஒடிந்தசில விண்பதவியின்
இரண்டுபிறைகொண்டுவிழு மஞ்செனவிழுந்திரணம் ஒன்றுகளரிப்
புரண்டசில கொம்புகள் முறிந்தசில பொங்குமத கும்பிஇனமே. 43

பரிந்தவிசி வாரவை பரிந்தமணி தார்கள் பருமங்கள்உடனே
நெரிந்தமுது கானது முரிந்தகுர மானது நெடுந்துரகமாச்
சொரிந்ததலைமூளையினர்தொங்குகுடலோரமர்தொலைந்தவலியோர்
சரிந்தனர்கள்வானவர்கள்பேரணிகள் தண்டின்எதிர்மண்டினர்களே.

அருக்கரும் வசுக்களும் உருத்திரர் மருத்தரு மடர்ந்த சுரரை
வெருக்கொள நெருக்கிமடி யச்செய்துகுடச்செவி விறற் புயனெனும்
இரக்கமி லரக்கனொ டெதிர்த்தவர் உரத்தலம் இரத்தம் எழவே
முருக்கலர் பொருப்பினை நிகர்த்திட வடிக்கணை முடுக்கினர்களே.

முத்தலை அயிற்கணைய முற்கரம் இரட்டியொடு கற்படைமுரட்
சத்திமழு வச்சிரம் உலக்கைகதை சக்கர மிடற்கணைகளாம்
வித்தினை விதைத்துறு களச்செரு வினிற்படு பிணப்பயிர்விளைத்
தொத்தலகை மொத்தமொ டுணப்புதிய திட்டனர் கறுத்தமரரே.

பொழிந்தகணை மாரியுற வெங்களிறு ருண்டன புரண்டபரிமா
அழிந்தன நெருங்கிரதம் அம்பரமும் எண்திசையும் மாகிமலைபோல்
விழுந்தன பெரும்பிணம் எழுந்தன கவந்தம்வினை வெங்களரிவாய்
ஒழிந்தவர லாதுவகை யொன்றிட மலைந்தனர் உலந்தனர்அரோ. 47

இப்படி அரக்கர்கள் இமைப்பொழு தினில்பொரு களத்தவிதலும்
மைப்படி மனத்திரள் புயத்தசமுகத்தன் வடவைக் கொடியதீ
எப்படி கொதிக்குமனம் அப்படிகொதித் தெயி றதுக்கிஇடையா
வெப்படி மனச்சுரர் மிசைத்தனி ரதத்தினை விடுத்தனன்அரோ. 48

✽நீடு வார்சிலை நாண்எறிந்து நிசாசரேச இராவணன்
ஓடையானையின் மேலுமாகதி ஒய்விலாதுயர் தேரினும்
ஆடன்மாவினும் வீரராகிய அவனிகாவலர் மேலுமா
வாடைகூடிய கோடைமாரியின் வாளிமாமழை தூவினன் 49

வெஞ்சரங்கள் பரந்து சென்று நெருங்கு விண்ணவர் சேனையைப்
பஞ்சரங்கிய வங்கியாம் என நின்று பற்றி எரித்தலால்
பஞ்சரங்க மறிந்து வந்து செறிந்த கூளிகள் வார்மதக்
குஞ்சரங்கள் உருண்ட தேர்கள் குலைந்தவாசி உலைந்தவே. 50

அன்னவன் செயல் கண்டு சிந்தை அழன்று திண்திறல் இந்திரன்
நின்னில் என்றெதிர் தேர் கடாவி நெடுந்தலங்க ளதிர்ந்திடத்
தன்னெடுஞ் சிலை நாண்எறிந்து தசக்கிரீவன் உரத்தினும்
சென்னி மேலும் விடத்தி னூடுமிழ் தீயவாளிகள் தூவினன். 51

அந்த அம்பு நிறத்தழுந்தவும் ஆற்றல் ஏதும்அழிந்திலா
விந்தை தங்கிய தோளிராவணன் வெய்ய வாளிகள் தூவலும்
இந்திரன் கணை மாரி தூவ இரண்டு சேனையில் வீரரும்
தந்தமில் சர மாரி தூவிட எங்கணும் சரம் ஆனதே. 52

அரக்க சேனையை வானவன்தன் அனீக வீரர் அழன்றுபோர்
நெருக்கி வேழமு மாவுமாளு நெடுங்க ளத்தினில் வீழ்த்தலும்
தரிக்கலாது தசக்கிரீவன் வெகுண்டு சாரதி தற்குறித்
துரைக்கும்என்னுரை கோடியாம்என உள்ளவுள்ள முணர்த்துவான்.

தேவர் சேனையி னுட்புகத்திகழ் தேர்கடாவுதி யாகில்யான்
யாவரும்பட நூறிஇந்திர னைப்படுத்தி வரார்பர
மூவராருயிர் உண்டெனெண்ண முடித்து மூவுலகங்களும்
காவல்என்வழி யாகநீடர சாள்வன்நீஇது காண்டியால். 54

என்று புன்மொழி லோன்இயம்ப இயைந்து சாரதி மேருவாம்
குன்று போல்உயர் தேரை வானவர் கூடுசேனையின் உள்விடச்
சென்ற தேர்விசை கண்டுதீய அரக்கன் எண்ணிய சிந்தையை
வென்றி மேவிய இந்திரன் இவை விண்ணவர்க்கு விளம்பினன். 55

என்னைவஞ்சனை செய்து வென்றிட எண்ணும் இந்த இராவணன்
தன்னை நாலு புயங்களுந் தளரப் பிணிக்குவன் என்றவன்
முன்னிலாது விலங்கியோட முழங்கு தேரை முடுக்கியத்
தென்னி லங்கை அரக்கர் கோன்மிகு சேனை பாழ்பட நூறினன். 56

அன்ன சேனையி னூறுயோசனை யுள்புகுந்தணி கெட்டிடத்
தன்னெ டும்படை சாயநூறு தசக்கிரீவனை வானுளோர்
மன்ன வன்படை யோடுவந்து வளைப்பவந்த அரக்கர்தந்
தென்னிலங்கைமன் வீடினன்என நொந்து சிந்தை கலங்கினர். 57

அந்த வேலையில் மேகநாதன் அழன்று பொங்கி அமர்த்துறைத்
தந்தைதன்னை வளைந்துவந்து தருக்குதானையை நூறிஅவ்
இந்திரன்தன் உரத்தும் அங்கவன் ஏறுதேரினும் ஏயமா
உந்து மாதலி மேலும்வாளிகள் ஓய்விலாவகை தூவினன். 58

அண்டருக் கரசன் எதிர்த்த அரக்கர் செய்த அமர்களால்
பண்டு பட்டறி யாதபாடு படக்கரிக்கில னுய்அவன்
கொண்டல் ஒத்த முழக்குடைப்பொரு குன்றைஒப்பதை வென்றிசேர்
எண்திசைக்கிரி அன்னமாகரி ஏறினன் பகை நூறினன். 59

ஏறினன்அயி ராபதத்தை யினிப்பிழைப்பரி தின்றெனப்
பாறினர்அவ் அரக்கர் அவ்வழி பாகசாதனன் அங்கியில்
கீறினனுறு மையை யாளிசெ ருக்களத்தெதிர் நிற்கிலன்
வேறுதானிவன் நின்றிடந்தெரி கிற்கிலன் எனும் வேலையில் 60

வன்னி கொன்றை எருக்கு நொச்சி தரித்த வீர வரத்தினல்
அந்நெ டுந்திறல் மேகநாதன் அரூபியாயகல் வானகம்
துன்னுபேர் இருள் மூடமாயை வகுப்பநெஞ்சு துளங்கிடா
மன்னு தேவர்கள் ஆயினர்கள் மயங்கி ஒன்றும் உணர்ந்திலார். 61

செய்வ தொன்றறி யாதுசிந்தை கலங்கி இந்திரன் நின்றிடக்
கையு மெய்யும் அகப்படத் தெறு காலபாசமி தாமெனும்
வெய்ய பாசம் உறப்பிணித்தனன் மேகநாதன் விளங்குசீர்
ஐய வெய்ய அரக்கர் ஆனவர் ஆடினர் சுரர் வாடினர். 62

*வெந்திறல் அரக்கர் சேனை மேகநா தன்கைப் பாசத்
திந்திரன் கட்டுண் டான்என் றெறிகடல் ஒலியின் ஆர்ப்பத்
தந்தையை வந்து சார்ந்து தரிப்பரும் உவகைபொங்க
எந்தைநீ கேட்டி என்ன இராவணி இனைய சொன்னன். 63

என்எதிர் நிற்கல் ஆற்று திந்திரன் என்கைப்பட்டான்
உன்எதிர் ஒருவர் இல்லை உருப்பசி முதலாய் உள்ள
அன்னமென் நடையி னாருன் அடியிணை வருட ஐயா
முன்னைவா னவர் சேவிப்ப மூவுல காள்தி என்றான். 64

என்றவன் இயம்பக் கேட்ட இராவணன் இருபதாய
தன்திரள் தோள்கள் ஆரத் தன்மகற் றழுவிநின்று
பொன்திகழ் மணிமா மோலிப் புரந்தரன் தனையேயன்று
வென்றதெவ் வுலகும் அன்றே வின்றுநீ வீரஎன்றான். 65

இன்னன பலவும் பன்னி இந்திர னோடு தங்கள்
பொன்னகர் எழுந்து பொங்கி எதிர்கொளப் புகுந்து தேவர்
மன்னவன் தன்னைக் கட்டி வான்சிறை வைத்த காலை
அன்னவா கனனை முன்கொண் டமரர்கள் அடங்க வந்தார். 66

வந்திலங் கேசற்கண்டு மலர் அயன் புகல்வான் வைவேல்
வெந்திறல் உடையவீர வெற்றிநிற் கெதிரார் உன்தன்
மைந்தன்இந் திரனைவென்று வான்சிறை வைத்தலாலே
இந்திர சித்தென் றெல்லா வுலகமும் இயம்பப் பெற்றான். 67

சந்திரமௌலி ஈசன் தடவரை எடுத்த திண்தோள்
வெந்திறல் அரக்கர் கோவே விண்ணவர் எனைமுன் கொண்டு
வந்தகா ரியம்ஈ தாகும் வலிஉனக் கேறிற் றேங்கும்
இந்திரன்தன்னை இந்த இருஞ்சிறை விடுதி என்றான். 68

என்றவன் இயம்பக் கேட்ட இராவணி கூறுவான் இங்
கின்றவன் தன்னை விட்டால் யான்பெறும் பேறு வேண்டும்
பொன்திகழ் மேனியாய்இப் புவனம்உள் ளளவும்பொன்றா
தென்று நான் இருப்பதாக இவ்வரம் அருள்இங் கென்றான். 69

இராவணி இனையகூற இதையத்தில் எண்ணிப் பார்த்துப்
பராவரும் உலகம் எல்லாம் படைத்தவன் பகரும் பாரில்
சராசர மாய யோனி சார்ந்தபல் உயிர்கட் கெல்லாம்
நிராமய மான நித்த தத்துவம் அரிதிங் கென்றான். 70

ஆயவை விரிஞ்சன்கூற அரக்கர்கோன் மைந்தன் சொல்லும்
தீயிடைப் பிறத்த தெய்வத் தேரின் நின்றி யான்போர் செய்ய
ஆயுவுக் கிறுதிவாரா வகைஎனக் கருள்நீ என்ன
நீஅவை பெற்றாய் என்ன நிருதன்மற் றினைய சொல்லும் 71

திடந்திகழ் நாவினாய் யான் செருனரை வெல்வான் எண்ணித்
துடங்கிய வேழ்வி முற்றப் பெற்றிடில் துன்னலார்கள்
அடங்கலும் தோற்க வேண்டும் எனஅவன் பெற்றாய் என்னத்
தடம்புயத் தரக்கன் மைந்தன் தான்மகிழ்ந் தினைய செய்தான். 72

*சிறையினில் இருந்த அந்தத் தேவர்கோன் தன்னை விட்டு*
*மறைவலான் தனக்குக் காட்ட மானவேல் மருமத் தூன்ற*
*உறுதுயர் பொறுக்கமாட் டா தொருவரை எடுத்து நோக்கான்.*
*கறைகெழு வேற்கைவானோர் காவலன் கவிழ்ந்து நின்றான்.* 73

*அன்னதன் மையனாய் நின்ற அமரர்கோன் தன்னை நோக்கிக்*
*கன்னிகர் தோளாய் முன்பு கவுதமன் இட்டசாபம்*
*உன்னைவந் துறுகையாலே உனக்கிது வந்த துன்தன்*
*பொன்னகர் புகுதி என்ன விட்டயன் போயினனால்,* 74

16-வது தேவர்கள் மேற் செல் படலம் முற்றும்

---

## 17-வது கார்த்த வீரியார்ச்சுனப் படலம்

அரக்கர் கோன்விசயம் அடங்கலுங் கேட்ட ஆழியான் அதிசயப் பெய்தித்
திரைக்கடல்உலகம்வெருக்கொளஅரக்கன்நெருக்குநாள்தேர்மன்னரெதிர்ந்தோர்
ஒருத்தருண்டாக உரைத்திலை உடைந்த உறுவலி உடையராதலினோ
உரைத்தியென் றிராம னுரைத்திடத் தவத்தால் ஓங்கிய குறுமுனி உரைக்கும் 1

மாயிருஞாலம் அடிப்படுத் தெதிர்க்கும் மருவலர் இன்றிமண் ஆண்ட
ஆயிரந்திண்டோள் அருச்சுனன் தனக்கும் வலிக்கும் அமர்அழிந்தன்ன
தீயவாள்அரக்கன் எனமுனி செப்பச் செறிகழல் இராகவன் மனத்தில்
தாயமாமுனியோ அக்கதைவிரித்துச் சொல்எனக் குறுமுனி சொல்லும். 2

உந்துநீர் வேலை உலகினை வாட்டும் எதிர்முடி மன்னரை ஒட்டி
அந்தவாள் அரக்கன் ஆயிரந் திண்டோள் அருச்சுனன் அணிநகர் அடைந்தே
இந்தமா நகரத் திறைவன்எவ் விடத்தான் இராவணன் இகல்செயச் சமைந்து
வந்தனன் எனவாங் குணர்த்துமின் என்ன மந்திரித் தலைவர்கள் மொழிவார் 3

தெரிவையரோடும் நிருமதைஎன்னும் திருநதி நீர்விளையாட்டில்
பரிவுநெஞ் சினனாய்ப் போயினன் அரசன் என்றவர்புகன்றிடக் கேட்டுப்
பொருகழல் அரக்கன் அவ்விடம் நோக்கிப் போகுவான் பூம்பொழில்சாரல்
விரிபெருஞ்சிகரம் ஆயிரம் ஓங்கி விளங்குசீர் விந்தத்தை அடைந்தான். 4

மழைமதில் முழக்கங் கேட்டதுபொருவலு வாளரி யேறெதிர் முழங்கும்
மழைபுடை யதனை முனிவர் தானவர்கள் முகிழ்நகை அரம்பையரோடும்
கழிபெருங் காத லொடுவிளை யாடக் காமபோகக் களிநுகரும்
இழிபுனல் அருவி தழுவிள வாடை இடைதவழ் சாரல் மேவியதை. 5

இன்னமா மலையின் எழிலினை நோக்கி இராவணன் எழில்நுரையாடை
மன்னிய காஞ்சி திகழ்அரை அல்குல் வஞ்சிநேர் இடைசுழி உந்தி
பொன்னணி ஆரம் புளினமென் கொங்கை பொருகயல் கண்ணறல் கூந்தல்
அன்னமென் நடைசேர் நிருமதை என்னும் அரிவையைத் தெரிவுறக் கண்டான்.

அத்திருநதியில் அமைச்சர்களோடும் அரக்கர்கோன் அகமகிழ்ந்தாடி
மைத்திகழ்மிடற்று வளர்சடையோனை மணல்குவித் தருச்சனைசெய்ய
நெய்த்திருங் குழலார் தம்மொடார்ச் சுனனந் நீர்விளை யாடுவான் நிமிர்ந்த
கைத்திரள்களினால் கடுவிசைநீரைக் கட்டினன் தேங்கிநின்றெதிர்ப்ப 7

தேங்கியபெருநீர் இருகரைபுரளச் சென்றுதன் றிருப்பதில் திகழ்தோள்
தீங்குடை அரக்கன் செய்யும்அப்பூசை சிதைத்திடத் திகைத்தனன்சீறி
ஈங்கிதுவிளைந்த காரணம்எல்லாம் இருவிரும் அறிமின்என் றியம்ப
பூங்கழல் வானோர் புறங்கொடுத் தோடப் பொருசுக சாரணர் போனார். 8

போயவர் செறிதோட் பூமிமன்னவற்கும் புரிகுழல் பூண்முலையார்க்கும்
நேயமதொன்றி நீர்விளையாட்டு நிகழ்வழி நெடுநில மன்னன்
ஆயிரங்கையால் ஆற்றுநீர் அடைப்ப அப்புனல் எதிர்த்தமை அறிந்த
தீயவர்வந்து தென்னிலங் கேசற் கச்செயல் தெரிவுறச்செப்ப. 9

ஆங்கவர் உரைப்ப அமைச்சரும்தானும் அருச்சனன் நின்றிடம் அணுகிப்
பூங்கழல்அரக்கன் பொருதுவெய் துயிர்த்துப் புரவலன்அமைச்சரைநோக்கி
ஈங்கமர்புரிவான் இராவணன்வந்தான் என்றுகூன்றுயிரம் என்ன
ஓங்கரும்தோளாற் குணர்த்துமி னென்ன உறுவலி அமைச்சர் ஈதுரைத்தார்

தன்தெரி வையர்பால் தாழ்ந்தநெஞ் சினனாய்த் தாழ்குழ லார்களுந் தானும்
நின்றுபேர் ஆற்றின்நீர் விளையாட்டின் நிகழ்வழி நீஅமர்புரிதல்
நன்றிதுவன்று நாளைநீர் பொருமின் எனஅவர் நவின்றிட அரக்கன்
சென்றுமேல்வீழச் செறுவலி அமைச்சர் அவன்எதிர் தாம்பொரமூண்டார். 11

தருக்கினன்மிக்க தராபதிஅமைச்சர் தம்மொடு தசமுகன் அமைச்சர்
நெருக்கிவந் தெதிர்ப்ப நிகழ்த்தது பெரும்போர் நெடுஞ்சரம் நெருங்கின நிருபன்
செருக்கிளர் சேனை நிருதர்மேல் அழன்று சென்றுதாக் கியதுசெந்நீரால்
முருக்கலர் வனத்திற் சிவந்தது படையான் மூண்டமர் புரிமுனைக்களமே. 12

வக்கிரமனத்து மாபெரும்பக்கன் மகோதரன் வஞ்சமாரீசன்
செக்கரை நிகர்க்கும் செம்மயிர் செறிகோள் தீப்புகைக் கண்ணனே முதலோர்
சக்கரம் உலக்கை தண்டுவேல் குலிசம் தடமழு வாகியசமரத்
தக்கரம் உடையார் ஆயுதம் வழங்க அவிந்ததால் அருச்சுன னனிகம். 13

தன்படை சாய்ந்து தன்னிடைவீழத் தராபதி சலவிளையாட்டில்
அன்புடைமாதர் அஞ்சிமெய் நடுங்க அஞ்சலீர் என்றுகையமைத்து
மின்படைவேந்தன் விரிபுனல்விட்டு வெவ்வழல் எனக்கொதித் திலங்கை
மன்படை துரப்ப வயப்பிரகத்தன் மற்றவ னோடெதிர் மலைந்தான். 14

கோடியமனத்துக் கொடுந்திறல் அரக்கன் கொற்றவன் மிசைக்கொலை வலியால்
நீடியஉலக்கை நெருப்பெழத்துரப்ப நீறுபட் டனஅது தண்டால்
சாடிமற்றவனைத் தரைப்பட அடிப்ப தடம்புய மகோதரன் முதலோர்
ஓடிய ஓட்டுக் கண்டிலங்கேசன் ஊழிவெந்தீஎன உடன்றான் 15

தண்டது வாங்கித் தடக்கைஆ யிரத்தோன் தன்னொடு தசமுகனேர்
மண்டிஒன் றென்றில் கறுவுகொண் டிரண்டு மழவிடை மலேவன எனவும்
கொண்டலின் இடித்துக் கொதித்தடர்த் திரண்டு குன்றுபோர் கூடிய எனவும்
எண்திசைக் களிற்றி னிரண்டெதிர் மலேவ என்னவும் இருவரும் பொருதார். 16

கூற்றுவன் என்னக் கொடுங்கனல் என்னக் கொதித்திரு தண்டினுல் எற்றி
ஏற்றபோர் முகத்தில் இராவணுர்ச் சுனர்க ளிருவரும் பொருவுழி அரக்கன்
காற்றென முடுகிக் காவலன் உரத்துக் கதையினுல் அடித்திடக் கலங்கா
தாற்றினவ நின்ருங் கருச்சுனன் அடிப்பஅரககர்கோன்ஆற்றல்போய்அழிந்தான்,

அன்னவன் தளர்ச்சிஅறிந்தஆயிரந்தோள்அருச்சுன்ன்ஆற்றல்போய்அயர்த்தான்
பொன்னெடுந் தோள்கள் அயர்ப்புறப் பிணித்துப் போகலுற் ருனேவெம் போரில்
மன்னவன் கைப்பட் டான்எனமறுகி மகோதரன் ஆதிவாள் அரக்கர்
நின்னில் என்றவன்மேல் நெடும்படை துரப்ப நிருபதி நெருப்பெனக்கொதித்தான்.

தண்டுவாள் முசலம் சக்கரம் சூலம் தடமழுத் தோமரம் நாஞ்சில்
பிண்டிபா லங்கோல் முதலஆ யுதங்கள் பெருங்கைஆ யுதங்களால் வாங்கிக்
கொண்டுமேல்வீழும் கொடுந்திறல்அரக்கர் குழாங்கள்கெட் டோடிடத்துரந்து
திண்திறல் நிருபன் திருநகர்புகுந்து தீயவன் தனேச்சிறை வைத்தான். 19

கெட்டவாள் அரக்கர் கினர்பெரும் பயத்தால் கேடில்சீர் இராவணன்அமரில்
பட்டபா டெல்லாம் வீடணற் குரைப்பப் பரிவுறு மனத்தினன் அவன்போய்ச்
சிட்டனு யுள்ள பிதாமகற் குரைப்பச் சிந்தைநொந் தச்சிறை விடுப்பான்
வட்டவான் மதில்சூழ் அருச்சுனன் வாழும் வடநகர் மாமுனி வந்தான். 20

அந்தமா முனிவன் அடியினே வணங்கி அருச்சுனன் அருச்சனே செய்திங்
கெந்தைநீ வந்த காரணம் என்கொல் இயம்புதி எனமுனி இயம்பும்
இந்திரா தியரை வென்றுதான் நெடுநாள் ஈட்டிய செயம்எலாம் உனக்குத்
தந்திரா வணனின் தலேக்கடைச் சிறையோன் தராபதி யார்உனேத் தடுப்பார் 21

ஏறியவலியின் இனிஉனக்கமையும் இறைவகேள் இராவணன்தன்மேல்
சீறியசீற்றந் தவிர்த்துநீஅவனேச் சிறைவிடு கெனமுனிசெப்ப
ஆறியமனத்த னுயவன்விடுப்ப அரக்கனே இலங்கையில் விடுத்துத்
தேறியசிந்தைச் செழுமறைமுளரித் திசைமுகன் தன்உலகடைந்தான். 22

17–வது கார்த்தவீரியார்ச்சுனப் படலம் முற்றும்

## 18. வாலிவாலால் கட்டுண்ட படலம்

*சீலமா முனியால் சிறை பேர்ந்தவன்*
*காலன் என்னக் கனல்என்னக் காலென*
*ஆலம் என்ன அவனி அழித்துமா*
*வாலி மன்னும் வளநகர் எய்திஞன்.* 1

*இங்கு வாலி இருந்தில னேஅவன்*
*எங்கு ளான்என் றிராவணன் கூறிடத்*
*தங்கு சீருடைத் தாரை பிசாசரிற்*
*கங்குல் வாய்வந்த காரணம் என்னென்ருள்* 2

வாலி தன்னொடும் வாளமர் செய்திடக்
கோலி வந்தனம் என்றவன் கூறிடக்
கால னோடு கனன்று பிழைத்தியோ
சால நன்றெனத் தாரை இயம்புவாள். 3

துந்து மிப்பெய ரோன்முதல் துன்னலார்
வந்து வாலியு டன்மலைந் தாருடற்
பந்தி மேவிய பல்எலும் பின்குவை
இந்த மாமலை என்றுகொள் ஏழைநீ 4

ஆத லால்அடல் வாலியொ டும்பரில்
சாதல் திண்ணம்நீ சாகர நான்கிலும்
தீதி லாச்சிவ பூசனை செய்திடப்
பாய்தல் செய்யும்அவ் வாலி பதறல்நீ, 5

தரிக்கிலாய் எனில் தென்திசைச் சாகரத்
தரக்க ஏகுதி யால்எனத் தாரையும்
உரைக்க ஏகி உயர்சிவ பூசையின்
இருக்கும் வாலியை எய்தினன் நோக்கினான். 6

* மேருவை ஒக்கும் மேனியன்விராங்கும் விரிகதிர் பரப்பிவந் துதிக்கும்
சூரியன் ஒக்கும் முகத்தினன்கடலைச் சுராசுரர் அமுதெழக் கடைந்த
வீரியன் தியான பரவசன்ஆகி விழிமுகிழ்த் திருந்திட இதுவே
காரியம் இவனைக் கட்டுவன்என்று கருதினன் கருமனத் தரக்கன் 7

அவ்விடை வாலி கண்விழித்தந்த அரக்கனை அறிந்தறி யான்போல்
தெவ்விடை வெம்போர்த் திறலின்மற் றிவன்தான் திரியவுங் கண்முகிழ்த் திருப்ப
இவ்விடை இவனைக் கட்டுவன்என்னு இராவணன் இழைபுலி எனவும்
வெவ்விடை ஒதுங்கி வருகின்றதெனவும் மெள்ளவந் தவனைமெய் பற்றி 8

வெய்யவாள் அரக்கன் கைஇருபதினால் வீக்கவும் விறல்மிகு வாலி
கையினால் அவனை நெருக்கென இறுக்கி வாலினால் கடிதுறக் கட்டி
மையணி கண்டன் பூசனைமுடித்து வாலிடை இராவணன் தூங்கப்
பையரா அதனைக் கௌவிவிண்பறக்குங் கருடனின் மேல்கடல் பாய்ந்தான். 9

வன்பெல வாலி வல்விசைப்பாய மற்றவன் மெய்விசைக் காற்றால்
முன்புள மலையும் கற்களும்மரனு முறிந்துமுன் சென்றன முரண்சேர்
பின்புள அவையும் பரிந்துபின்சென்ற பெருவலி மகோதரன் முதலோர்
அன்புடை அமைச்சர் அரசனைமீட்பான் அடல்மிகு வாலிபின் தொடர்ந்தார். 10

தாழ்வில்போர் ஆற்றல் தடவரைப்புயத்தோன் தரியலர் மயங்கிட அமரில்
சூழுமாமாயை அரக்கர்தம் வலியால் தொடரஒண் திறல்வலி தொலையாப்
பாழிமாவாலி பாய்ந்திட அவன்தன் பருவரை மெய்விசைப் பின்செல்
ஊழிமாருதமே கொண்டுபோய் உலைப்ப உரமலைந் தவனியில் வீழ்ந்தார். 11

பாரத வருடம் பரந்தயோ சனைகள் ஒன்பதி னுயிரம் பாய்ந்து
நீரத முயங்கு நெடுந்தட இமைய நிலைஇரண் டாயிரம் நீங்கித்
சீரத னுடைய சிறந்தகிம் புருடம் ஒன்பதி னுயிரந் தீர்ந்தாங்
கேரணி ஏம கூடமோர் இரண்டா யிரநிலை இமைப்பினில் பாய்ந்து 12

பொன்னரி வருடம் பெருந்துமோ சனைகள் ஒன்பதி னுயிரம் போக்கித்
தன்னிலை இரண்டா யிரமுடை நீடதம் தாவிமே லைக்கடல் சார்ந்து
பின்ஞுகன் பூசை விதிமுறை முடித்து பெருகுசீர் இரமிய வருடம்
ஒன்னலர் காலன் வாலியோ சனைகள் ஒன்பதி னுயிரம் ஒழிந்து 13

நீலமால் வரையீ ராயிர நீங்கி நின்றெளிர் பொன்மய வருடம்
மேல்உயர் சுவேதம் ஓசனை பதின்ரு ராயிரம் விரைவினிவ் பாய்ந்து
கோலநீள் குருவம் சுருக்கிமுன் சொன்ன அளவுபோய் வடகடல் குறுகி
ஆலமா மிடற்றேன் அடியிணை பேணி அங்கிருந் தருச்சனை முடித்து. 14

மேற்கட லோடு வடகடல் உள்ள யோசனை விரைந்துபோய்க் கீழை
மாக்கடல் எய்தி வளர்சடை யோனை மகிழ்ந்தவண் இருந்துபூ சித்துப்
தேக்குமேற் கடற்கும் தென்கட லுக்கும் செப்பிய ஓசனை சென்று
போர்க்கடல் வாலி புனைமணி மாடப் பொன்னகர் கிட்கிந்தை புகுந்தான், 15

ஆங்கவன் வரக்கண் டகமகிழ் தாரை அவன்நெடு வாலிடைக் கிடந்து
தாங்கிய அரக்கன் தன்துயர் கண்டு துறுகழல் வாலியை நோக்கி
ஈங்கிவன் யாவன் இவனைநீ ஐயோ இனிவிடு கென மனம் இரங்கித்
தேங்கமழ் குழலி செப்பிட விடுத்துத் தீயவற் கவன்இவை செப்பும் 16

பிஞ்ஞகன் பூசை பேணுதல் வேண்டிப் பெருங்கடல் தொறும்செலப் பாயும்
என்னிடை வந்து வாதைசெய் தமைத்தாய் ஈங்குநீ வந்ததென் னரக்க
இஞ்ஞனம் வந்த காரணம் அதனை இயம்பென இராவணன் இயம்பும்
உன்னொடும் பொருவான் வந்தகப் பட்டேன் உண்மைஈ தெனஅவன் உரைக்கும்

மின்னெளி முடியாய் வென்றவர் தோற்பர் தோற்றவர் வெல்வர்வெஞ் செருவில்
என்னொடும் பொருவான் இச்சைஉண் டாகின் இராவணு பொருதிஈங் கென்னக்
கன்னெடுந் தோளாய் கலங்கநின் வாலால் கட்டுண்டு பட்டது கிடக்க
இன்னமுப் பொரவோ இனிச்செரு அமையும் இன்றுநின் தோழன்நான் என்றன்.

என்றிலங் கேசன் இயம்பிட வாலி எழுந்தபேர் உவகையின்இறுக
தன்திரள்தோளால்தழுவி ஆங்கவனைத்தன்னெடுநகரிடைக்கொண்டு
சென்றினி தாட்டிச் சிறந்தன செப்பித் திங்கள்ஒன் றினிதுகொண் டிருந்தான்
இன்றைநாள்துடங்கி என்றும்என் தோழன் என்றிலங் கேசனை விடுத்தான். 19

அலைதழுவுததி அரவணைத்துயில்நீத் தயோத்திவந் தடைந்தடல்வீர
சிலைதழுவியநின் செஞ்சரம்ஒன்று நெஞ்சகம் பிளப்பதில் திறலோன்
நிலைதழு வியபூண் இந்திரன் குலிசத் தேறுபட் டிருஞ்சிற கற்ற
மலைவிழு வதுபோல் விழுந்தனன் வீர மற்றுனை ஒப்பவர் யாரே.

18-வது வாலிவாலால் கட்டுண்ட படலம் முற்றும்

# 19 அனுமார் பிறப்புப் படலம்

புனைவாள் அரக்கன் இருநால் இரட்டி ஒருநாலு பெற்ற புயமும்
தலையான பத்தும் உறவால் விசித்த சயவாலி கொற்ற முழுதும்
மலையாச னத்து மறையோன்உரைத்தன எலாமனத்துள் உலரும்
சிலையால்அரக்கர் குலம்வேரறுத்த திறலோன்உரைக்கும் இவையே·

மறவாலிகொற்றம் அதுவோகிடக்க மருவார்வெருக்கொள்வலியால்
நிறைவால்மிசைப்பொன்வரையீடழித்து*நெகிழாதுநிற்கும்வலியால்
குறையாத விச்சை அதனால் அளப்பில் குணநீதி கொற்ற மொடுகூ
டறிவாலி வற்றில் அனுமானை ஒக்கும் அவரார் சகத்தில் இனியே. 2

அங்கார தாரை குடர்மாலை சூடி அலைவேலை தாவி அடையார்
தங்கா ரணங்கள் பொடியாக நூறி வருசம்பு மாலி முதலோர்
பொங்கார வார முடனே பொருந்த அவர்சேனை யானை பரிதேர்
சங்கார மாகும் அனுமானை ஒக்கும் அவரார் சகத்தில் இனியே. 3

வரையோடு·ருத்தி ரனைமீ தெடுத்த வயவாள் அரக்கன் மகனைத்
தரையோ டரைத்து நகர்தீ மடுத்து வருசே னையைச் சலதியில்
திரையோ டமுக்கி ஒருதாவு*தத்தி வடதீர முற்ற திசைமேல்
உரையோடும்வெற்றிஅனுமானைஒக்கும் உரவோர்சகத்தில்உளரோ

அருமா தவத்தில் முனிவோர்மிடுக்கின் அனுமானை ஒக்கும் அவர்ஆர்
செருவார் சிலைக்கை இளையோனுமிக்க திறல்வா னரப்படையோடும்
மருவார் மயக்க மகமேருவுக்கு வடபால் மருத்து மலைகொண்
டொருநாழிகைக்குள் வருவாரொருத்தர் உளரோசகத்தில் இனியே

இவனால் அருக்கன் மகனோ டமக்கும் இனிதாய நட்பும் அழகும்
இவனால் அளப்பில் பெருநீர்அடைத்த திளையா வயத் தனுமனும்
இவனால் அரக்கர் பெருமாயையிற்செய் இடையூ றகற்றியதெலாம்
இவனால் அரக்கர் குலம்வே ரறுத்த தினியாம் உரைப்ப தெவனோ. 6

பிறியா அறத்தின் அனுமான் வளர்ச்சி மகமேரு விற்பெரியனும்
சிறிதாய் ஒடுக்கும் எனின்மேனி வெற்பை அணுவாம் எனச்சிறியனும்
உறுகாரியத்தின் அளவாம் உருக்கொள் உயர்வீரன் மிக்கவலிதான்
அறியா திருப்ப தெதுகாரணத்தின் அதுநீஉ ரைத்திஎனவே. 7

மறவோர் குலத்தை அறவேர் அறுத்து மனுநீதி பற்றி அரசன்
திறலோன் உரைத்த அமுதூறுசொற்கள் செவிவாய்மடுத்து நுகரும்
குறியோன்உரைக்கு நெடியோய்குறிக்கொள் எனமேதினிக்குலவுசீர்
அறிவோரின் மிக்க அனுமான் உதிப்பும் அதிகத்த வச்செயலுமே. 8

*சூரியன்தரு வரத்தினன் சுவண மேருஎனும்
பேரினன்செறி பொருவரைத் தோளினன் பேணும்
பாரில் அஞ்சனை வயிற்றினில் பவனனுக் குதித்தோன்
யாரினும்பெரு வலியுடை எழில்மணிப் புதல்வன். 9

பிறந்த போதினிற் பிள்ளைதன் பெருவலி அறிந்து
சிறந்த தாயரும் தந்தையும் சிந்தையுள் மகிழ்ந்தார்
மறங்கொள் நெஞ்சுடை வாள்எயிற் றரக்கர்தம் வாழ்நாள்
குறைந்து ளோர்எனக் குறித்தது வானவர் கூட்டம். 10

செழு மலர்த்திரு அனையதாய் செழுங்கனி நாடிப்
பழுவ முற்றிடப் பசியினால் பதைபதைத் திரங்கி
அழுத ரற்றிய பாலகன் அன்னைமுன் சொன்ன
பழநமக்கிது வாம்எனப் பருதிமேல் பாய்ந்தான். 11

பாய நோக்கிய வானவர் தானவர் பழிப்பில்
தூய மாதவர் முதலினோர் தோன்றிய வியப்பால்
வாயு வேகமும் வயினதே யன்தன் மாக்கதியும்
ஓயும் இங்கிவன் ஒய்விலாக் கதிக்கென உரைத்தார். 12

பின்னும் கூறுவார் பிறந்தபோ தேயிவன் பிதாவின்
அன்னவேகத்தின் ஆற்றலால் அருக்கன்மேல் பாய்ந்தான்
மன்னு மாருதி வளர்ந்தபின் மருவல ராேனார்
என்ன தாகிஎன் படுவரோ இவன்கையால் என்றார். 13

ஈது வானவர்தானவர் முதலினோர் இயம்ப
வாத ராயன்ஈ தியம்பினன் வாவும்என் மைந்தன்
மீது வெய்யவன் வெங்கதிர் வெண்நிலா என்னச்
சீத சந்தனச் சீதளம் ஆகுக என்றான். 14

ஏய்ந்த தாதையீ தியம்பிட இரவிமேல் ஏறப்
பாய்ந்து மண்டலம் பற்றினன் கவ்வலும் அதனுக்
கேய்ந்து வெய்யவன் இவன்சிசு எனமனம் இரங்கிக்
காய்ந்தி லன்பெருங் கருணையால் காவல என்றான். 15

அற்றை நாளில்அவ் வலர்கதிர் மண்டலம் தன்னைப்
பற்றுவான் சென்று பாய்தலும் பற்றிமுன் நின்ற
கொற்ற மாருதி தனைக்கண்டு குலைந்துபோய் இராகு
வெற்றி விண்ணவர் வேந்தனைக் கண்டிவை விளம்பும். 16

மன்னு சந்திர சூரிய மண்டலம் விழுங்க
முன்ன மேஎமை விதித்தனை முறைகெட வேறோர்
அன்னி யன்புகுந் தலர்கதிர் மண்டலங் கவ்வி
இன்ன மும்விடான் இவைஎன்ன நியாயங்கள் என்றான். 17

என்று கூறிட எரிவிழித் திந்திரன் வெள்ளிக்
குன்று போல்அயி ராபதக் களிற்றைமேல் கொண்டான்
சென்றி ராகுவைத் தினகரற் பற்றெனக் செப்ப
நன்றி தென்றவன் நாயிறு தனைச்சென்று நண்ணி. 18

இரவி மண்டலம் பற்றுவான் எண்ணிய இராகு
வரவு கண்டனன் மாருதி மண்டலம் விட்டெவ்
அரவின் மேல்உறப் பாய்தலும் ஆங்கவன் கதறி
வெருவி ஓடினன் விண்ணவர் கோன்அடி வீழ்ந்தான். 19

வெருவி ஓடிட வெவ்வர வினைத்தொடர் வேக
அரியின் மேல்அரி அழன்றயி ராபத முந்தப்
பெரிய தோர்கனி பெற்றனன் எனப்பெரி துவந்து
கரியின் மேல்எழப் பாய்ந்தனன் காற்றினுங் கொடியோன்.

இன்ன காலையில் இந்திரன் எதிர்வருங் கூற்றம்
அன்ன மாருதி மேல்வெகுண் டாலகா லம்போல்
கொன்னு னைப்பெருங் குலிசம்விட் டெறிதலுங் கண்ட
தன்னி னைப்பினை மறந்துபோய்த் தரணியின் வீழ்ந்தான்.

*மைந்தனை வீழக்கண்ட வாயுவா சவன்மேல் சீறி
இந்தமூ வுலகந்தன்னை இமைப்பினில் கெடுப்பன் என்று
சிந்தையின் எண்ணிஅந்தச் சேயினை எடுத்துக் கொண்டாங்
கந்தரத் தியக்கம்இன்றி அடங்கினன் இருந்த வேலை.

உறுவலி இல்லா மாய உடம்பினை உள்ளே நின்று
பிறிவிலா தியக்கு கின்ற பிராணவா யுக்கோ விப்ப
அறுகயிற் றூசல் போன்றும் அங்கொடிங் குண்ணின் ருட்டும்
பொறியறு பாவை போன்றும் விழுந்தனர் புவனத் துள்ளோர். 23

மாத்திரைப் பொழுது மேனி நிற்குமோ வாயு இன்றி
மூத்திரப் புடை வாயி லடைத்தலான் மூடு தோற்பைக்
காத்திரம் பெருக வீங்கிக் கண்செவி மூக்கு நாத்தோல்
சூத்திரம் சுற்றுச் சிந்தும் தொகுபணிக் கோவை போன்ற

காமபோ கத்தை நீத்துக் கற்சுவர் உலர்ந்த காட்டம்
ஆமென இருத்த லாலும் ஐம்புலன் அடங்க லாலும்
வாமமும் வலமும் வாயு வழங்குதல் இன்மை யாலும்
ஏமநீ டுலகில் உள்ளோர் யோகியர் என்ன லானார். 25

ஆயவை நிகழுங் காலை அமரர்தா னவர்கள் ஆய்ந்த
தூயமா தவர்கள் சித்தர் விஞ்சையர் துறக்கத் துள்ளோர்
வாயுகோ பத்தி னாலே மகோதரர் ஆகி உள்ளோர்
நாயகன் ஆகிநின்ற நான்முகன் தன்னை நண்ணி. 26

ஆதிநா யகனே கேட்டி அமரர்கோன் குலிசத் தாலே
காதலன் ஆய மைந்தன் காலன்வாய் வீழக் கண்டு
வாதரா சன்கோ விப்ப வயிறுகள் பெருஞ்சால் என்னப்
பூதமதென்ன வீங்கிப் புரண்டனர் புவனத் துள்ளோர். 27

இறைவர்கள் காப்போர் இன்றி இடும்பையால் பெரிது நொந்து
கறைகெழு வேற்க ணாரைக் காமுறு வார்கள் இன்றி
மறைஒலி இன்றிச் சந்தி வந்தனை இன்றி வேள்வித்
துறைகளும் இன்றி வையம் சூனியம் ஆயிற் றென்றார். 28

என்றவர் இயம்பக் கேட்ட இரணிய கெர்ப்பன் இன்னே
சென்றுநோய் தீர்ப்பன்என்னும் சிந்தையன் தேவர் சூழ
வன்திறல் மாண்ட சேயை மடியிலே வைத்து நோயால்
கன்றிய மனத்தன் ஆய காற்றினுக் கரசைக் கண்டான். 29

இநதிரன் முதலாய் உள்ள இமையவர் சூழ வந்த
அந்தணன் தன்னை நோக்கி அகத்தெழுந் துன்பத் தோடும்
வந்தடி பணிந்தோன் தன்னை மலர்க்கையால் எடுத்து வாயுத்
தந்தபா லனைத்தன் கையால் தடவினன் தயாவின் மிக்கோன்.

நீடிய மலரின் மேலோன் நெடுங்கையால் தடவ லோடும்
வாடிமண் மடிந்த பைங்கூழ் மழைவிழத் தளிர்க்கு மாபோல்
வீடிய மைந்தன் சீவன் பெற்றிட வெந்து கோடை
யோடிய நெஞ்சு தாதை குளிர்ந்தனன் உயிரின் மிக்கோய். 31

திண்திறல் மைந்தன் சீவன் பெற்றிடத் தெளிந்த வாயுப்
பண்டுபோல் உலகம் எங்கும் பரந்துதான் சரிப்பப் பார்த்துப்
புண்டரீ கத்து மேலோன் புரந்தரன் நகரி உள்ள
அண்டரை அடங்க நோக்கி அவர்க்கிதம் அறையல் உற்றான்.

இந்தமூ வுலகை யெல்லாம் இடர்கெடுத் திமையோர் ஆனோர்
சிந்தையிற் றுயரம் எல்லாம் தீர்க்கும்இத் திறலின் மிக்க
மைந்தனுக் கும்மா லாய வரங்கள்நீர் வழங்கும் என்ன
வெந்திறல் விண்ணோர் வேந்தன் இனையனவிளம்பல் உற்றான்

✤சீர்பெற் றொளிர்பூண் அஞ்சனைதன் சிறுவன்தன்னை முக நோக்கிக்
கூர்பற் றியஎன் குலிசத்தால் கூறு படுபுண் வடுத்தீர்க
ஆர்பெற்றார்நீ பெற்றதுநின் அனுவற்றிடலாய்அனுமன் எனும்
பேர்பெற் றுலகம் உள்ளளவும் பெறுதி பேராப் புகழ்என்ன.

பொல்லா இருளைக் கடிந்தோட்டும் புவன தீபன் புகல்வான்என்
வில்லார் கரத்தில் சதகூற்றில் ஒருகூ றுனக்கு மேவிடுக
எல்லா விஞ்சை களும்தரிக்க இசைந்த சத்தி உண்டாம்காண்
நல்லாய்கொள் நீதருகின்றேன் என்று நவின்றான் நலமிக்கோன்

இரணபூமி யிடை நேர்ந்தால் என்பா சத்தால் ஈர்த்தக்கால்
மரணம்இல்லை உனக்கென்று வருண ராசன் வரங்கொடுப்பத்
தரணி யோரை விதிவழியே தண்டிப் போம்என் தண்டினன்
முரணின்மிகுமா ருதிஆவி முடியாதொழிக எனமொழிந்தான்

காற்றின் சிறுவன் முகம்நோக்கிக் கருணையால்என் கதையால்நீ
கூற்றின் சூழல் உருய்என்று குபேரன்கூறக் குன்றனைய
ஏற்றின் பாகன் என்னுடைய ஏதி யாலும் என்னுலும்
ஆற்றன் மிகுமா ருதிஆவி அகலா தொழிக எனஅருள. 37

தாதா உரைக்கும் இவன்பிரம தண்டா னவற்ருற் சாவின்றி
மேதா வியுமாய் ஒருநாளும் விளியா நாளும் உறுகஎனத்
தீதா யினர்வேர் அறுக்கும்எழில் தேவர் படையால் செருக்களத்தில்
வாதா சுதன்சாஒழிகஎன வானேர் தச்சன் வரங்கொடுத்தான். 38

வானேர் பெருமான் முதலாக வந்து நின்ற வானவர்கள்
ஆனேர் எல்லாம் அனுமானுக் கருளிேைடும் வரம் அளிப்ப
நானு வாய சராசரமும் உலகும் படைத்த நான்முகத்தோன்
ஊனேர் உடலின் நின்றியக்கும் ஒருவன் தனக்கிங் குரைசெய்தான்

வன்னி சகாய நின்மைந்தன் வையத் தோர்க்கும் வானேர்க்கும்
இன்னல்செய்யும் இராவணன்தன் இலங்கை நகரை எரிஊட்டி
மன்னன் இராமன் மனம்உவப்ப வயவாள் அரக்கர் குலம்அறுத்துப்
பின்னை அவன்தன் பேரருளால் பிரமபதமும் பெறும்என்ருன். 40

என்று மலரோன் ஏகியபின் இமையோர்கொடுத்த வரச்செருக்கால்
நன்று தீதென் றுணராது நன்மா முனிவர் உறைவிடத்துச்
சென்று தயிர்பால் நெய்குடித்துச் சீரை சுருக்குச் சுருவமெலாம்
ஒன்றும் வலியோன் கொண்டொழுக ஊழித் தீயின் உடன்றவர்கள்

பொன்மை நிறத்த அயன்வரத்தால் புவனமூன்றும் பொடிபடுத்துந்
தன்மைப் பிரம தண்டதனுல் சாதிப்பரியோன் அவன் பொல்லாக்
கன்மத் தினைஎம் இடைசெய்யும் காற்றின் சிறுவன் கருத்தழிவுற்
றுன்மத் தன்போல் தன்வலிதான் உணராதொழிகஎன உரைத்தார்.

சாபம் உணர்ந்து வருக்கொழிந்து சாந்தன் ஆகி அனுமானும்
கோபம் ஒழிந்து மாதவர்க்கு கூசிக் குறிக்கொண் டொழுகுநாள்
தீபம் அனையான் உலகுக்குத் திறல் வானவர்கோன் அரிஇதையத்
தாப னிருத்த விரசதனும் தனிப்போர் வீரன் தன்மைந்தர். 43

துன்னுர் காலனும்வாலி சுக்கிரீவர் தோன்றிய பின்
மின்னுர் மருங்குற் றிருஎன்ன விளங்கும் உரிமை காரணமாய்
இன்னுர் ஆகி இருவரும்போர் எதிர்க்க இளையான் இளைத்தோடித்
தன்னுல்செய்யும் செயல்அற்றுத் தளர்ந்து மதங்க வனம்சார்ந்தான்

அந்த முனிவன் சாபத்துக் கஞ்சி வாலி அவ்வனத்தில்
வந்து புகுதா தொழிதலால் வாணுள் பெறுசுக் கிரீவனெடு
சிந்தை கலந்து சகிஆகிச் சேர்ந்துதன்னை உணராதே
அந்தணுளர் சாபத்தால் அநுமான் அடங்கி அங்கிருந்தான்.

*வேதமொரு நாலொடு விளங்கிய சடங்கமும் விரிந்தகலையும்
ஓதநில வீதிமுது கேமுகம தாகஎதிர் ஓடி விரைதேர்
மீதுசெலும் வெங்கதிர வன்தனோ டயிந்திர வியாகரணமும்
ஓதிஒரு நாளினின் உணர்ந்தனன் அம்மாருதி உயர்ந்த புகழோய்.

தண்அளியி னுன்மிகு தயாவுடைமை யால்வரு தருக்கறு தலால்
எண்ணுகரு மங்கள்அவை யாவும்இடை யூறற இயற்றும் இயல்பால்
நண்ணலரை விண்ணவர்கள் ஆயினும் நடுக்கிடு மிடுக்குடைமையால்
மணஉலகில் விண்உலகில் மாருதியை ஒக்கும்அவர் ஆரும்இலையே.

அறம்தலை எடுத்ததடல் லானவர்கள் ஆனவர்கள் ஆடினாகள்தீ
மறம்தலை இறக்கியது வாலிமுதல் ஆயினர்கள் வாமநயனம்
சிறந்ததிரள் தோள்புருவ மார்பிவை துடித்தன சிறந்தபுகழோய்
நிறைந்தபுகழ் மாருதி நினைத்திரு வடித்தொழுது நின்றபொழுதே. 48

தனக்குவமை அற்றவனை வெற்றிமிகு மாருதி தனைத் தடையிலாச்
சினக்கொடு மனத்திறல் அரக்கர்கள் செருப்புரி களத்தமலநீ
நினைத்தனமுடித்தொருகணத்தினில் நினைத்தொழுது நிற்பவனைநான்
உனக்கினி உரைப்பதெவன் உத்தம உனைப்பிரிவில் வித்தகனையே.

வாடைதரு சேய்பிறவி யுஞ்செயல்க ளும்பெருவ ரங்களும் இரிந்
தோடும்வினை மாதவர் சவிப்பவிடை தன்னைஉண ராதவகையும்
நீடுதவ மாமுனி உரைத்திட வியந்துநிரு தேசன்மடியக்
கோடுவில் இராகவன் மகிழ்ந்தவனு மாருதி குணம்புகழ்தலும். 50

தேடுதனம் ஆம்என மனந்தெளியும் மாமுனிவர் சேரலர்கள்கேட்
டோதுமது கண்டுசின மாறரச னுக்கிவை உரைப்பர்உணர்வால்
நீடுவர வெங்கள்நிய மங்கள்உள வாகினும் நினைப்பிரிதலில்
கூடுகில எங்கள்மனம் என்றலும் அகண்டபதி கூறும்இவையே 51

உங்கள்நிய மங்களவை குன்றுதலி லாதொழிய உங்கள்பரமாம்
எங்கள்அர சும்செயலும் இங்கிவை திருந்திடும் எனப்புகழ்தலும்
அங்கவனை ஆரருளொ டாசிகள் மொழிந்தினி திருத்திஎனவாழ்
துங்கமறை மாதவர்கள் ஆசிரம முன்னிநெறி துன்னுபொழுதில் 52

(சுவடிப்படி) 19–வது அனுமார் பிறப்புப் படலம் முற்றும்

---

## 20 விடைகொடுத்த படலம்

முடிச்சனகர் கோஉலகை மூடுபடை யோடுவகை யோடணுகிடத்
தடுப்பரிய பேருவகை யோடுபணி தாசரதி யைத்தழுவிமுன்
படைத்ததனம் ஆபரணம் ஆடைதிகழ் பாவையர்கள் ஆதிபலவும்
கொடுத்தபின் இராவண குலத்தினை அறுத்தகதை கூறிவிடலும். 1

ஆனைபரி ஆபரணம் ஆடைதனம் ஆதிஉப காரமொடுமாச்
சேனைமுடி மன்னவர்கள் சென்றடி பணிந்தயல் இருந்தபொழுதில்
மானகுல பூடணன் இராகவன் மகிழ்ந்துமுடி மன்னவர்களுக்
கானஉப சாரமொழி கூறியவ ரோடளவ ளாவியபினே. 2

*சனகன் வானுறத் தன்னக ரத்துவாழ்
சனக நீங்கிடத் தாபம் அடைந்தவன்
சனகன் மாமக ளோடு தவாதமஞ்
சனகன் அந்த அரசரை விட்டபின். 3

தாரணித் தனை யர்க்குந் தரியலர்
தாரணிப் பொருந் தாவர வேந்தர்க்கும்
தாரணிப் பரந் தீர்த்தவன் தந்தனன்
தாரணிப் புய மன்னர் தருந்தனம். 4

நூறு கோடி சுவணமு நுண்கலை
நூறு கோடி யும்பூணு முதவினான்
நூறு கோடி இரத மரசுக
நூறு கோடிய சாபநுண் ணூலற்கே. 5

கள மொழிந்திடச் சால கடங்கரைக்
கள மொழிந்தன ரில்வகை காதினோன்
கள மொழிந்தசீர்க் கம்பு வழிந்ததன்
கள மொழிந்தறி யாக்கதிர் ஆரமும். 6

அங்கதன் தனள வறியா அணி
அங்கதந் திகழ் மொய்ம்பன் அருமறை
அங்கதன் இவ்அகி லாண்ட நாயகன்
அங்கதன் தனக் கீய்ந்தான் அடியொடும். 7

பன்னகத்து மணிதனம் பண்டை நூல்
பன்னகப் பகவன் படர் வேலையைப்
பன்னகத் தணை செய்பரன் ஈய்ந்தனன்
பன்னகப் படைத் தானைப் பதிகட்கே. 8

அம்புயத் தயன் தாதை அணிதிகழ்
அம்புயத்தன் அரக்கன் பட அடல்
அம்புயத் தரை விட்டோன் அளித்தனன்
அம்புயத்தணை செய்தோற் கருந்தனம். 9

மானி லங்கைமன் மேல்தளர் வுற்றதீ
மானி லங்கை இருப்புமன் னாகளன்
மானி லங்கையில் வாளியில் அட்டகோ
மானி லங்கைமன் வாழ வழங்கினான். 10

அந்த வானர காரி அரக்கர்கோ
னந்த வானர கேசரி ஆயினோ
னந்த வானரர்க் கூணமைப் பித்தன
னந்த வானர மங்கைய னார்களால். 11

திங்கள் வெண்குடை யோன்அரிச் சேனைக்குத்
திங்க ளொன்றொரு நாள்போற் செலுத்தினன்
மங்கை பங்கன் வரைஎடுத் தான்சிர
மங்கை பங்கன் அறுசுவை உண்டியே. 12

கங்கை ஏந்திவெண் காரம் அணிந்தநற்
கங்கை தங்கிய வேணியன் கார்முகப்
பங்கன் அந்தப் பசுபதி தன்ஒரு
பங்கன் செய்வினை பார்த்திது செய்தனன். 13

*வெங்கதிரோன் மைந்தனைஅவ் விளங்குபுயக் காகுத்தன் விரும்பிநோக்கி
அங்கதன்நின் அடைக்கலம்என் றடல்வாலி அந்தத்தில் அறைந்தவார்த்தை
தங்கியஎன் சித்தத்தைத் தான்விட்டுப் போகாது தடந்தோள்வீர
இங்கிவனைக் குறிக்கொள்என இனிதுரைத்துப் பின்னும் இவை இயம்பும்வீரன்.

தன்னுடைய வலிஅறியாத் தடவரைத்தோள் மாருதியைக் குறிக்கொள்வானோர்.
மன்னுடைய அமர்பொருத வாளரக்கன் தன்னொடுநாம் மலைந்தநாளில்
என்னுடைய காரணமாய் இன்உயிரை விட்டஈங் கிவர்கள்எல்லாம்
உன்னுடைய காவல்என உரைத்தவனை உயிர்பொருந்தத் தழுவிக்கொண்டான்

இரக்கம் இல்லா வன்னெஞ்சத் திராவணன்தன் முன்பிறந்தோன் என்றுபாரா
தரக்கர் குலப் பிறப்பறுத்துத் தனக்கடிமைப் பட்டானை அண்ணல்நோக்கித்
தருக்கறு நீன் முன்னெனும் தனதனெடும் பகைகொளேல் தருமசீல
திரைக்கடல் சூழ் இலங்கை நகர்த் திருந்தரசு செய்தீஎனச் செப்புங்காலை. 16

சீர்மேவு குகன்தன்னைத் திருமார்பின் உறத்தழுவித் திருந்தநோக்கிக்
கார்மேவு கோடையாய்இந் நகர்உனது காவல்எனக் கழறிச்செம்பொன்
ஏர்மேவும் ஆபரணம் யானைதேர் இவுளிகளும் ஈய்ந்துநீங்கா
தார்மேவும் அன்பினெடும் இவண்இருத்தி எனஅவனுக் கருளுங்காலை. 17

முனைப்புரிந்த வாளரக்கன் முடித்தலைகள் அறுத்துருட்டி முனிவர்வாழ
வனைந்துலகுங் காத்தளிக்கும் அகிலாண்ட நாயகநா யடியேன்தோயம்
தனைப்பிரிந்த மீன்எனவும் தாய்இழந்த கன்றெனவும் தரிப்பொன்றின்றி
உனைப்பிரிந்து வாழகிலேன் உயிர்பிரிந்த உடல்எனவும் உரைக்கலாமால். 18

ஆதலாவ் நின்னுடைய அடிப்பிரியா திடவேண்டும் அடியனேன்என்
றோதுமா ருதிதனக்கும் உத்தமநீ இத்தலையில் இருக்கில் வெய்ய
சோதியான் மகன்ஆய சுக்கிரிவன் துணைஇழக்கும் அதனுல்தூயோய்
போதுநீ அவனேடும் எனஅவனை உரைபொருந்தப் புல்லிக்கொண்டான். 19

இவ்வண்ணம் இதம்உரைத்து விடைகொடுப்ப இரவிசேய் முதலோர்அந்த
மைவண்ணன் அடிவணங்கி வார்ந்தகண்ணீ ரினராகி வாடுநெஞ்சர்
எவ்வண்ணம் எம்பெருமான் உரைத்ததெமக் கிதம்அல்லால் அகிதமாமே
அவ்வண்ணம் செய்தும்என அணிபொழில்சூழ் கிட்கிந்தை அடைந்தார்அன்றே.

வீடணன்வீ டணேவோர்க்கும் தாள்திறக்கும் தாளானே வெய்யாள்ஏவக்
காடணந்த கருங்களிற்றைக் கழல்இணைத்தா மரைவணங்கக் கனகமேருக்
கோடணந்த தோளாரக் கொண்டல்நிலத் தவன்அவனைப் புல்லிச்செம்பொன்
நாடணந்த சுரர்போற்ற நல்லரசு செய்திஎன விடுத்தான் நாதன் 21

20-வது விடை கொடுத்த படலம் முற்றும்.

---

## 21. சீதை வனம்புகு படலம்

தீங்கறு குணத்தோர் ஏகச் சேடன்என் சிரத்திற் பாரம்
நீங்கிய தெனத்தான் போற்ற நெடுங்கடல் அவனி பாரம்
தாங்கிய சிகரத் தோளான் சந்தியில் நியமம் தான்செய்
தாங்குயிர்த் தம்பி மாரோ டமுதுசெய் திருந்த காலே. 1

கனகமிடை வானத் திந்தக் கட்டுரை எழுந்த தோங்கிப்
புனேமணிப் பூணி ஞய்யான் புட்பகம் எனக்குப் பண்டு
தனபதி உரைத்த கேட்டி தசரத ராமன் தன்னால்
கனேகழல் அரக்கர் கோமான் காலன்வாய்ப் படுகை திண்ணம். 2

ஆயவன்றன்பால் நின்னால் ஆவன செய்தி அந்தந்
தீயவன் பொன்ற வேஉன் சிந்தைநோய் தீரும் என்றத்
தூயவன் எனக்கு முன்பு சொன்னதே முடிந்த தின்று
போயவன் தன்னேக் கண்டு வருகின்றேன் புவனநாதா. 3

என்றிது கூறக் கேட்ட இராகவன் வியந்து சால
நன்றென இசைந்து கந்த நறுமலர் கொடு பூசித்துப்
பொன்திகழ் விமானம் தன்னேப் போஎன விடுதலோடும்
சென்றது தனக்கு வேணடும் திசையின்மேல் சிந்தை செல்ல. 4

அந்தஅற் புதத்தைக் கண்ட பரதன்ஆச் சரியம் எய்திச்
சுந்தர வில்லிதன்னேத் தொழுதிவை சொல்லும் தூயோய்
இந்தமா நிலத்தைக் காக்க இறைவநீ இயைந்த பின்பு
வந்தஅற் புதங்கள் எண்ணில் வரம்பிலே என்றுகூறும். 5

அத்திரா திகளால் சாக்கா டில்லே வாள்அரியால் யானே
சத்துரு வில்லே வேங்கை ஆவொடு மானேச் சார்ந்து
மித்திர மாகும் நீரால் நெருப்பினல் வீவார் இல்லே
புத்திர மரணங் காண்பார் இல்லேஇப் புவனத் தெங்கும். 6

•நோயுறு வார்கள் இல்லே நோய்உரு தறமுத் தோர்க்குக்
காயும்வெங் கூற்ற மில்லேக் கணவனே இழப்போர் இல்லே
வாயுவும் உடலுக் கின்ப மாகவந் தசையா நிற்கும்
ஆயிழை யார்கள் எல்லாம் ஆணேயே பெரு நின்ருர்கள். 7

† திங்கள்மும் மாரி பெய்யும் செகதல முழுதும் வாரி
பொங்கிமென் மேலும் ஓங்கிப் பொன்மழை நாளும் பெய்யும்
எங்கெங்கு நிதிகள் ஓங்கி ஏர்கொள்வை குந்தம் என்னத்
தங்கிய உயிர்கள் யாவும் தழைத்தின்பம் மேவும் என்றும். 8

மண்ணுல குள்ளமன்னர் மைந்தர்கள் மங்கைமார்கள்
எண்ணிடும் எண்ணமெல்லாம் இராமனே அரசுசெய்திக்
கண்ணகன் ஞாலங்காப்பான் என்றுகட் டுரைப்பர்என்ன
அண்ணலும் அதனைக்கேட்டங் ககமகிழ்ந் திருந்தவேலை, 9

சரிந்துவெங் கதிரோன்வீழத் தராபதி சந்திசெய்யப்
புரிந்தசிந் தையனுய்ப்போக பூங்குழல் மடவார்தம்மைப்
பிரிந்தவர்க் காலம்ஆகி பிரிவிலோர்க் கமுதம்ஆகி
விரிந்தவெண் ணிலவைவீசி வெண்மதி தோன்றிற்றன்றே. 10

*பிரிந்தகாளையரை மாதரைக் கொல்வான் பேரளர் வழியிலாவண்ணம்
விரிந்தவெண் ணிலவாம் வலையினைவீசி வெங்கதிர்த் திங்களை ஏவிப்
புரிந்தவெங் கொலைசெய்தென்றல் நாய்விட்டும்பூங்கணைவேடன்வாய்
தெரிந்தனனன்றில்பெடையினைஎட்டுத்திசைதொறுங்கூப்பிடச்செய்து

அங்கவை நிகழுங் காலையில்ஆழி அண்ணலும் அவனியில் பிறந்த
மங்கையு மாறிக் கண்வலைப்பட்டு மனங்களின் மாறினர் புகுந்து
கங்குலும் பகலும் பிரிவிலர்ஆகிக் காதல்வெள் ளத்திடை அழுந்தி
பங்கமில் பேர்கம் நுகருநாள்வந்து புகுந்தது பங்குனித்திங்கள் 12

கழிந்துவிழ் பழுத்த விலையினஆகிக் காண்தொறுங் கவின்உறத்தழைப்பப்
பழம்படாநீக்கிபுதுப்படாம்போர்த்தபான்மையபாதவம்எல்லாம்
பொழிந்ததேன்மலரால் பொன்னிறஆடைபோர்த்தனபோன்றனகோங்கம்
செழும்படாம்சிவந்த போர்த்தனஒப்பத் திகழ்ந்தனசெம்மலர்ப்பலாசம் 13

பொன்னரிமாலை தூக்கின கொன்றை புன்குகள் பொரிமலர் பூத்த
நன்னுதலாரைநெடும்பகல்பிரிந்து நாள்தொறும்நினைந்துநாயகர்தாம்
அன்னவரோடு கூடிஇன்கலவி அமுதினை அருந்துமா போலப்
பன்மலர்தோறுங் குடைந்துதேன்இனங்கள் பருகினபசுநறுந்தேறல்

அண்ணலுமமுதில் பிறந்தஆயிழையு மணிகொள்பூம் பொழிலினைஅடைந்தார்
தண்ணறும்புன்னை சண்பகம்செருந்தி சந்தனம்சாதிபூந் தாழை
எண்ணருங்குருகு பாடலம்ஆதி எழில்மரம் இடைநெருங் கியதை
விண்ணவர்கோமான்கற்பகச்சோலைமேதினிஇழிந்ததொத்துளதை

தாவுவெம்புரவித் தரணிதன்தாபம் சார்வருந் தண்ணிழலினதைக்
காவியுஞ் செய்ய கமலமுந் தங்கள் கண்களுக் கஞ்சிநீர் ஒளிப்பத்
தேவியும் தானும் சேயிழையாரும் செழுந்துறை படிந்துநீராடும்
வாவியும்வாவிக்கரைதொறும்விளங்கு மணியறைமண்டபத்தினதை

இன்னதன்மையதாம் இளமரக்காவின் எழில்எலாம்இரவிதன்குலத்து
மன்னவனிராமன்மலர்க்கணுல்நோக்கிமனமகிழ்ந்தனவனப்பெல்லாம்
அன்னமென்நடைநூல்மின்னிடைமருங்குல்அணிதிகழ்மேகலைஅல்குல்
கன்னலுந்தேனும் கலந்ததூய்மொழியாய்க் காண்எனக்காட்டினனன்றே 17

மென்னடைஅன்னம் நின்நடைக்கஞ்சி வெளியிடை நின்றிடவெள்கித்
துன்னடைமலர்ப்பூஞ்சூழலின்மறையத்தோகைநின்சாயலுக்கிடைந்து
தன்னடையேகெட்டினிஉயிர்தாங்கோம்எனத்தழல்மூழ்குவபோல
மின்னிடைபூணாய்விரிமலர்அசோகின் மேற்சென்றுவீழ்வனகாணாய் 18

உள்ளபோதுண்டில்லாதபோதவரோ டுறவுவிட்டுறுமிடம்தேடும்
மெள்ளஅம்மரம்பூ மாறிடவிட்டு வேறொருபூமரந்தேடிக்
ஒள்ளியரல்லார்உறவுபோல்நெடுநாள் உயர்தருமலர்மதுஉண்டு
கள்ளவிழ்கோதைகமழ்குழல்அணங்கே களிவண்டுபோவனகாணாய்

ஐங்கணையானைவிட்டதிவிருபன் அருநிதிஉடையனேல்உவக்கும்
மங்கையர்மனம்போல்வாழைதன்மருங்கு வந்துறமரகதம்ஆகிப்
பொங்கியசெருந்திப் பூவுறப்பொன்னாய் நீலமாய்ப் பூவைவீபொருந்தப்
பங்கயமடுப்பச்செம்மணியாகும் பளிக்கறைபைந்தொடிபாராய் 20

பொருகயல்நயனப்புரிகுழலாளே பொய்த்தவவேடத்துமறைந்து
விரிகடல்உலகில்வேண்டியவண்ணம் வெவ்வினைசெய்பவர்என்னத்
திரிதருமீனைத் தப்பறக்குத்தித் தின்றிடும் உபாயம்ஈதென்று
கருதியகொக்கு மெய்சலியாது கண்முகிழ்த் திருப்பனகாணாய் 21

அடிமலர்க்கதலிகுறங்ககல்அல்குல் அரவுமின்னேர்இடைஅமைதோள்
இடைநகைதரளம்பவளம்வாய்வேற்கண் எழில்நுதல்விரைகமழ்ஓதி
வடிவினில்செய்யமங்கைஅன்னாளே வண்டுகள்மொய்த்தசெங்கமலம்
கடுவினைக்கொல்லன்உலைக்கரிமூடுங் கனலினைநிகர்ப்பனகாணாய் 22

வெங்கதிர்நுழையா விரிபொழில்உள்ள வேறுவேறாகியவிசேடம்
செங்கயற்கண்ணாய் காண்எனக்காட்டிச் செறிகழற் சேவடிராமன்
பங்கயவாவிப் பளிக்குமண்டபத்துப் பசுநறுந் தென்றல்சேவிப்ப
மங்கையர்வாழ்த்த மாகதர்ஏத்த மடந்தையோடினிதுவீற்றிருந்தார்

பொன்னிறமேனிப் பூமகளோடு பொருதிரைப் பாற்கடல்நடுவுள்
பன்னகஅணைமேல்பண்டுதான்இருக்கும் படிஎனத்தோன்றிமாய்ந்திடாத
மின்னொடுகூடி மேதினிபடிந்து விளங்குகார் மேகமாம்என்னச்
சென்னிறமேனிச்சீதையைத்தனது செம்மலர்த்திருக்கையாலணைத்து

செய்வகைஅறியார்கண்டவர்திகைப்பத் திருந்தியதாளவாத்தியங்கள்
தைவரும்வண்ணம் மூவகைக்கதியும் தப்பறத் தனித்தனிகாட்டிக்
கைவழிகண்ணும் கண்வழிமனமும் கலந்திடக் கற்பகநாட்டுத்
தெய்வமங்கையர்கள் நாணினர்நிற்பச் சேயிழை யார்நடம்ஆட

எழுவகைஇசைக்காரணமுடைப்பண்ணுக் கிசைந்தகானத்திரள்கொள்ளத்
தழுவிடைவைத்துச்சராசரம்உருகத் தாளத்தின்வழிஉருவெடுத்து
விழிபுருவந்தோள்மிடறுகள்கலித்து வேறுபாடுறுவகைஇசைநூல்
வழுவுதல் இன்றி வயங்கியவீணை மயங்கிட மாகதர்பாட 26

அன்னசங்கீதம் இனிதுகொண்டாடி அருநிதி ஆடைஆபரணம்
மன்னவன்இராமன் மாகதர்க்களித்து மாதொடுங்கோயிலின்வைகிப்
பன்மலர்பறித்து நீர்விளையாட்டில் பரிந்துபின் அமுதினிதுண்டு
நன்னுதலாளும் தானும்அப்பொழிலின் நாள்தொறும் விளையாடுநாளில் 27

விழிபெரும்பசலை பூத்தனமேனி வெளுத்ததுமெ மல்லியல்முன்கை
தழுவியசரிகள் சரிந்தனகெற்பம் தரித்தது சான்றவர்க்கெல்லாம்
மொழிவதுபோலமுலைகள்பால்பாய அவைமுகங்கறுத்ததுபோல
எழுதருசீதைக் கிவ்வகையாய இலக்கணம் பலவும்உண்டான 28

அன்னவள்கெற்ப இலக்கணம்எல்லாம் அமைவுறநோக்கியஅவனி
மன்னவனிராமன்மங்கையைநோக்கிமனத்திடைவேண்டிநீஇருப்ப
தென்எனஇயம்ப நாணினள்சிரிப்ப இராகவன்பின்னையும்பலகால்
சொன்னபின்வேண்டி இருப்பதீதென்று தூமொழியாளிவைசொல்லும்

துங்கமாதவத்தோய்கங்கையாம்தெய்வத்துறையிடைக்குளித்தந்திதொழுவோர்
பொங்குநூல்புரளும்மார்பினர்புரிந்தசடையினர்புனைந்தவற்கலையர்
அங்கவர்வாழும்ஆச்சிரமத்தைஅடைந்தவர்ஏவல்செய்தொருநாள்
தங்குதல்வேண்டி இருப்பதென்றுரைப்பத் தசரதராம னீதுரைப்பான்.

நாளைநாம்உனக்குநற்றவத்தோர்கள் இருப்பிடம்காட்டுதுமென்று
நீள்குழலாளைக் கோயிலின்விடுத்து நீலமா முகில்புரைநிறத்தோன்
வாளஎரிவிசையன் பத்திரன்தந்த வக்கிரன் சுமாகதன் சுராஞ்சி
காளியர்முதலோர்சொற்பரிகாயக் கதைகள்கேட்டினிதுகொண்டாடி 31

இக்கதைகிடக்கஇறைவர்கள்என்றும்இடைவிடாதிராப்பகல்கேட்கத்
தக்கதைநாட்டின்நகரியில்செனங்கள்தம்மில்இப்பொழுதுதானுரைக்கும்
அக்கதைஉரைமின்என்றுவாள்சங்கம் ஆழிநல் சார்ங்கநல்அணிசேர்
மொய்க்கதைஒழித்து வந்துவில்தரித்தோன் மொழிந்திடஅவரிவைமொழிந்தார் 32

வந்தெறிகடலை மலைகளால் அடைத்து மதிளிலங் காபுரிஅழித்து
வெந்திறல்அரக்கர்குலத்தைவேர்அறுத்து விண்ணவர்கோன்தலைஎடுப்ப
இந்திரசித்தைக்கொன்றிராவணனை ஈரைந்துதலைஅறுத்துருட்டும்
சுந்தரவில்லிக்கெதிர்இலைஎன்று சொல்லுவர்தொல்உலகுள்ளோர்

ஆங்கவர்இவ்வாறுரைத்திடக்கேட்ட அரசர்கோனவர்களைநோக்கி
நாங்கள்நன்னகரிஞட்டினிற்பிறக்கு நன்மையும்தின்மையும்கேட்டுத்
தீங்கவைஅகற்றிச்சிறந்தனசெய்தும் செப்புமிவ்இரண்டுநீர்கேட்டு
நீங்கள்ஒன்றுக்கும் கூசிடல்என்ன நின்மல கேட்டிஎன்றுரைப்பார்

மன்னவனிராமன்மானபங்கத்தைமனத்தினனிளைக்கிலன்வானோர்க்
கின்னல்செய்தொழுகும்இராவணன்கொடுபோயிடைவிடாதீரறுதிங்கள்
தன்னெடுநகரில்தனிச்சிறைவைத்ததையலைத்தாரமாய்க்கொண்டு
பின்னையும்வாழ்க்கைபேரிழுக்கென்றுபேசுவர்பெருநிலத்துள்ளோர்

ஒத்தவறிவ்வாறுரைத்திடும்வெஞ்சொ லுள்ளுறநிறத்தினில்ஒளிர்வேல்
தைத்ததுபோல உளைந்துதன்சிந்தை தளர்ந்தபி மானபங்கத்தன்
வித்தகர்ஆய தம்பியர்க்கூவி வேறிடத் திருந்து தான்கேட்ட
சூத்திரம்எல்லாம்தெரிவுறஅவர்க்குக் கூறுவான்இவைஇவைகூறும்

என்உயிர்நீங்கள் என்வலிநீங்கள் என்உறு துணைவரும்நீங்கள்
என்நிதிநீங்கள் என்தவம்நீங்கள் என்பிரா தாக்களுநீங்கள்
என்அரசின்பம் நீங்களேஆனுல் என்பதி உம்பதி புகழும்
அன்னதேஆகும்ஆனபின்நீங்கள்அனைவரும்கேண்மின்என்றுரைக்கும் 37

தீயவாளரக்கன் சிறையிடை இருந்த சீதைசெந் தீயிடைமூழ்கி
ஏயுமாதவர்க்குமிமையவர்ஆனோர் எவர்க்கும்என்மனத்துக்கும்ஏற்ற
தூயளாயிருந்தாள்ஆயினும்உலகோர் சொல்லிடும்பெரும் பழிதனைக்கேட்
டோயுமோஎன்உள்ளம்உண்மையால்பயன்என் உலகுளோர்க்கொத்திடாதொழியில்

ஓதநீர்வேலை உலகுளோர் இலாத துளதெனின் உள்ளதாம் உளதி
யாதொருபொருளை இல்லைஎன்றுரைக்கில் இல்லையாம் இதுஉலகியற்கை
ஆதலால்அவளை அருந்தவத் தோர்கள் ஆச்சிரமத் தயல்விடுத்தும்
ஈதுநாம்துணிந்த காரியம்இனிவே றெண்ணுவ தொருபொருள்இல்லை

இவ்வகை இராமன் இயம்பிடக் கேட்ட இன்உயிர்த் தம்பியர்ஒன்றும்
செய்வகைஅறியார் தீயகைகேசி சீதையும்இராமனும் வனம்போம்
அவ்வகை நோற்றஅன்றையிற் கலங்கி அகத்தெழுந் துயரினர்ஆகி
இவ்வகை யாரும் இதுவிலக்கரிதென் றிருந்தனர் இடிவிழுந்தென்ன 40

கலக்குவன்உலக மூன்றையும்என்று கருதுமேல் கணத்தினில்முடிக்கும்
இலக்குவன்தன்னை இராகவன்நோக்கி இங்கியான் துணிந்தகாரியத்தை
விலக்குவன்என்னும் சிந்தையைவிட்டு வெவ்வினை வேரொடும்பறிப்ப
மலக்குவன்தவத்து முனிவர்வாழ்வனத்து மடந்தையை விடுதிகேளின்னும் 41

கல்வியாய்முனிவர் தவவனமவட்குக் காட்டுவான் இசைந்தனனவளும்
சொல்லியவண்ணம் செய்தனன்என்றே உவந்திடும் சுமந்திரற்குணர்த்திச்
சில்லுளைப் புரவித் தேர்மிசை ஏற்றிச் சீதையைச் செறிபுகழ்ஐயர்
நல்உயிர்ஆய தோழன்வான்மீகி நற்றவம் செய்வனத்துய்த்தி 42

என்றடலிராமன் இயம்பிடக்கேட்ட இலக்குவன் எழுந்தவெந்துயரான்
தன்துணைஇல்லாச் சுமந்திரற்குணர்த்தித் தடமணித்தேர்பணதியற்றிப்
பொன்திகழ்மணிப்பூண்சீதைமாளிகையிற் புனைமணித்தேர்கொண்டுநிற்ப
இன்றொருப்பாடேன் எனஅவள்இயம்ப இலக்குவன் இனிதியம்பினனுல்

மன்னவன்உனக்கு மாதவத்தோர்கள் வாழ்விடங் காட்டிடவுரைத்தான்
என்னலும் உவந்த உவகையள்ஆகி இன்னுயிர்த் தோழியர்க்கியைந்த
மின்ஒளி ஆரம் முதலஆ பரணம் விளங்குசீர் நவமணியாடை
இன்னவை பிறவும் தெரிந்துகொண் டினையோன்இயம்பிட ஏறினுளிரதம் 44

*சலக்கடல்கிழியச்சென்றிடும்கலம்போல் தடமணித்தேர்செலத்தையல்
வலக்கணும்துடித்து வயிறெரிவுற்று மனமுந்தன் மேனியும்நடுங்க
இலக்குவஎன்க்குத்துர்க்குறிஅதனால் என்விளைவென்றுநான்அறியேன்
விலக்கரிதாய விதியதுவிளைக்கும் விளைவையார் மேல்இனிஅறிவார் 45

தாமுறுதுயரம் தையலார்அறியார் சார்ந்தது துற்குறி அதனால்
தூய்மனம்உடையஎன் சுவாமிக்கும் துணியில்என் கொழுந்தன்மாருக்கும்
மாமியருக்கும்வான்கிளைதனக்கும் வளநகரத்தில்வாழ் வோர்க்கும்
தீமைஒன்றின்றிநன்மையாயிடுகதெய்வமே என்றுகைதொழுதாள். 46

அன்னதுற்குறிகள் ஆயிழைகூற அகத்தெழு துயரனாய்இளையோன்
சொன்னஇக்குறியால் நங்கிளையானோர் துயர்இன்றி சுகத்தினிதிருப்பர்
என்னலும்எழுந்த உவகையள்ஆகி இருந்துயர்ஒழிந்தவள்இருப்பப்
பொன்மணிநெடுந்தேர்தென்திசைநோக்கிப்போயதுதூயவட்பொறுத்து. 47

மாமதிமுகத்து மறுவறு கற்பின் மங்கையும் வருவன எண்ணும்
தூமதிஅமைச்சன்சுமந்திரன்தானும் துயர்உறுமனத்திளையோனும்
கோமதிஎன்னும்நதியினைக்குருகிக் கொடுங்கடல் மேல்கதிர்குறுகத்
தாமதில்வைகிப்பிற்றைநாள்உச்சிதடம்புனல்கங்கையைச்சார்ந்தார் 48

கங்கையைச்சென்று காண்டலும்இளையோன் கண்ணினீர்ததும்பிடக்காந்திப்
பொங்கியதுயரம்புறப்படாவண்ணம்அடக்கிடஉள்நின்றுபொரும
இங்கு நீஇந்த இடர்உறுவானென் இலக்குவ இயம்புதி என்று
மங்கைஈதுரைப்பமறுமொழிகொடாது வாய்விட்டுக்கதறிடுங்காலை. 49

தூயஇந்நதியைக் கண்டவர்எல்லாம் தொழுதுவந் தாடுவர்தூயோய்
நீஇடர்உறுவ தென்உலகத்து நினைஇடர் செய்பவர்இல்லை
நாயகன்தன்னைப்பிரிந்தறியாதே நாளிரண்டுண்டுநான்பிரிந்தேன்
ஆயவன்தன்னைநினைந்தனைகொல்என் றாயிழைஅமலனுக்குரைக்கும்

நன்றிவித்தாகும் நல்ஒழுக்குடைய நற்றவ முனிவரையெல்லாம்
சென்றடிபணிந்து தீவினைஅகற்றித் திகழ்ஒளி ஆடைஆபரணம்
என்துணைத்தோழி மாருக்கும்அவரை ஈன்றெடுத் தோருக்குமுதவி
இன்றொருநாளும் இருந்துநாம்மீள்தும் இலக்குவ இடர்உறல்என்றாள்

இன்னவாசகங்கள் ஏந்திழைஇயம்ப இலக்குவன்இடரைஉள்அடக்கி
நன்னதிதன்னை நாவிதன்கடத்தக் கடந்துபோய்த்தென்கரைநண்ணி
மன்னவன்இராமன் தேவியைமுறையால் வலஞ்செய்துமலரடிவணங்கி
என்னுரைகேட்டி ஏழுலகுடையாய் எனஅவள் இயம்பெனஇயம்பும்

*கடுந்துயர் மேற்கொண் டேறக் கண்ணினீர் வெள்ளம் சோர
ஒடுங்கிய வலியன் நீர்அற் றுலர்ந்திடு முகத்தன் அஞ்சி
நடுங்கிய மனத்தி னிரில் நாத்தழு தழுத்து மெள்ளப்
பிடுங்கிய மொழியன் மங்கைக் கிவையிவை பேசலுற்றான். 53

உத்தம குணத்தோய் கேட்டி உலகமா தாவே கேட்டி
சுத்தனும் சனகன் வேள்வித் தோன்றிய தூயோய் கேட்டி
வித்தகன் இராமன் ஏவி விட்டகா ரியங்கள் எல்லாம்
தத்துவ மான வண்ணம் சாற்றுவன் என்று சாற்றும். 54

வாடிய முகத்தன் வெப்ப மானவேல் மருமத் தூன்ற
நீடிய உயிர்ப்பன் தான்முன் நினைந்தகா ரியத்தின் மேலே
ஓடிய மனக்கா குத்தன் ஒல்லையின் அழைப்ப வந்து
கூடிய தம்பி மாரில் எனைக்குறித் தினைய கூறும் 55

உலகத்தார் உள்ளதென் றுள்ளதாம் ஒலிநீர்வேலை
உலகத்தார் இல்லைஎன்ற தில்லையாம் உணருங்காலை
உலகத்தார் உள்ள தென்ற தில்லைஎன் றுரைக்கும்ஆகில்
உலகத்துக் கவன்பேயாகும் உண்மையாற் பயன்ஒன்றில்லை 56

சீதையைக்கொடுபோய் வெய்யோன் சிறையிடை வைப்பமீண்டும்
காதலால் அவளைக்கொண்டு காகுத்தன் வாழும்வாழ்வில்
சாதலே அழகிதென்று சாற்றுவர் தரணிஉள்ளோர்
ஆதலால் சுத்தைஎன்றே அறிந்துவைத் தவளைநீத்தோம் 57

என்றவன் இயம்பவெல்லோம் எதிர்மொழி கொடுக்கஅஞ்சி
நின்றவன் நடுங்க அந்த நெடுந்தகை என்னைநோக்கித்
துன்றிய மணித்தேர்தன்னைச் சுமந்திரற் பண்ணச்சொல்லி
இன்றிவ ளோடும்போயவ் ஏந்திழை தனைத்தேர்ஏற்றி 58

நன்னெறி நகரும்நாடும் கடந்துபோய் அடவிநண்ணித்
தன்னுயிர் தன்னைவிட்டுத் தடம்புகழ் கொண்டஐயர்
இன்னுயிர்த் தோழன்ஆய எழில்கொள்வான் மீகிவைகும்
பன்னக சாலையின்பாற் பாவையை விடுதிஎன்றான் 59

என்றவன் இயம்பஅண்ணல் ஏவலை மறுக்கஅஞ்சி
இன்றுனைக் கொண்டுபோந்தோம் என்றவட் கிளையோன்சொல்லக்
கன்றிய கனலின்ஊடு காய்ந்தநா ராசஞ்சீதை
தன்துணைச் செவியுள்ஏறத் தரணியில் தளர்ந்துவீழ்ந்தாள் 60

விழுந்தனள் புரளும்அந்த வெந்துயர் பொறுக்கமாட்டா
தெழுந்தனள் திரியவீழும் இருகையால் வயிற்றைஎற்றும்
அழுந்திடும் துயரவெள்ளத் தினையவள் ஆவிகாணார்
கழிந்தனள் சீதைஎன்று கலங்கினர் கடவுளோர்கள் 61

அன்னவள் அவத்தைகண்டாங் கிளையவன் அலறிவீழ்ந்தான்
பின்னையும் பாடுசாலப் பெருகஉண் டாகையாலே
இன்னுயிர் அரிதில்பெற்றாங் கிருகண்ணும் விழித்துமன்னர்
மன்னவன் இராமன்தேவி வாய்விட்டுப் புலம்பலுற்றாள். 62

* அன்னையோ ஐயாவோ ஆருயிர்த் தோழிகாளோ
தன்னேரி லாதவென்றித் தாசரதி யார்செய்த
இன்னுதை இச்செயலைக் கேட்டபோ தென்படுதிர்
என்னேஇவ் உலகத்தில் யானேஅங் கிதுபடுவேன் 63

பையார்வெம் பணத்துலகில் பழியாலே பழிமறைந்து
நெய்யாலே நெருப்பவிக்கை நீள்நிலத்தில் கண்டறியேன்
கையார்வெஞ் சிலைதரித்த காகுத்தன் இடைக்கண்டேன்
உய்யார்என் மாமிமார் இவ்வுரைதம் செவியுறவே 64

கன்னெஞ்ச ராய்என்னைக் காட்டில்விடச் சொன்னவரோ
வன்னெஞ்ச ராய்அதனுக் கிசைந்துவிட வந்தவரோ
நன்னெஞ்ச முடைநகரில் நங்கைமார் நகைசெய்ய
இன்னஞ்சா காதிருந்த யானேநெஞ் சார்வலியார் 65

*பண்பிறந்த சொல்மடவார் பழித்தெனையே சிரிப்பார்களோ
எண்பிறவா வன்னெஞ்சன் இராகவன்என் றியம்புவரோ
மண்பிறந்து பின்பிறந்த மறிகடல்சூழ் வையத்தும்
பெண்பிறந்தார் யான்பட்ட பெருந்துயரம் பட்டார்யார். 66

கைகேசி மனந்திரியக் கற்பித்த கூனியைப்போல்
மையார்கண் மடவாரோ மைந்தரோ மண்ணுலகில்
ஐயோஎன் காதலனை ஆரோஇக் காரியத்தைச்
செய்வாய்என் றெப்பொழுதுஞ் சிந்தைஉறக் கற்பித்தார். 67

கனிமனத்துக் காகுத்தன் கடல்உலகில் பழிக்கஞ்சித்
தனிஒருத்தி யான்கதறத் தனிக்காட்டில் விடுவித்தான்
பனிஅகற்றும் ஆதித்தன் பயந்தெடுத்த பழிப்பற்ற
மனுகுலத்தில் பிறந்தார்கட் கிவையோதான் மனுநெறியே. 68

என்றினைய பலபன்னி இருகண்ணீர் நதிபெருகக்
குன்றுகளும் மரங்களும்அக் கொடுமிருகங் களுங்குலைந்து
நின்றுருக வனதெய்வம் நெஞ்சழிந்து கண்பனிப்பக்
கன்றியநெஞ் சுடைச்சீதை கதறுகின்ற அக்காலை. 69

இளையவனும் ஒருவண்ணம் இடர்க்கடலைக் கடந்தேறி
உளைவுறுசிந் தையினுளுக் குத்தமைகேள் என்றுரைக்கும்
விளைவுறுவெவ் வினைப்பயனை விண்ணவர்க்கும் விலக்கரிதால்
வளைபயில்சூழ் கடல்உலகின் மானிடர்ஆர் விலக்குமவர். 70

உலகுக்கு நாயகனுய் ஓராழி தனைநடத்தி
மலைஒத்த மதகளிற்றின் மதிக்குடைக்கீழ் வந்தநளன்
நிலைகெட்டு நேரிழையை நெடுங்கானத் திடைவிட்டு
மலைஒத்த வினைப்பயனுல் மடையனுய் வருந்தினனே. 71

தன்னேர் இலாதஅரிச் சந்திரன்தன் மைந்தனையும்
மின்னேர் இலாதஇடை மெல்லியலை யும்விற்று
முன்னே விதியான் முடைப்பறையற் காளாகி
என்னே சுடுகாடு காத்தங் கிருந்தனனே. 72

இன்பத்தில் இறுமாந்து தோள்துளக்கி இன்பமறத்
துன்பத்தில் அழுந்துவார் தொல்லுலகில் அறியாதார்
இன்பத்துன் பங்கள்அவை எய்தியபோ திவைஎல்லாம்
முன்பற்றி விடாதவினைப் பயன்என்பர் மூதுணர்ந்தோர். 73

முன்செய்த நல்வினையால் முகில்வண்ணன் தனைப்பெற்றுப்
பின்செய்த தீவினையால் அவனைநீ பிரிவுற்றாய்
என்செய்தாய் இருவினைகள் இவைஇடர்நீ உறுவண்ணம்
நின்செய்யும் செயல்எல்லாம் நெடுந்தவமே செய்என்றான் 74

மாதவர்கள் அடிபேணி மற்றவர்கள் விதிமுறையே
ஓதியநல் வழிவழுவா துபவசித்து நின்னுடைய
காதலனை எப்போதும் கருத்திடைவைத் துயர்தவஞ்செய்
ஈதுனக்குக் கருமம்என இளையோனுக்கவள்உரைப்பாள் 75

நின்னுடைய தமையனைநான் நிழற்போலப் பிரியாதே
அன்னவனும் நானும்சென் றடிபணிந்த அருந்தவர்கள்
உன்னுடைய காதலன்இன் றுனைப்பிரிந்த காரணந்தான்
என்னுரைநீ என்றபொழு தியான்அவருக் கென்உரைப்பேன் 76

பின்னும்அவள் கூறுவாள் பேருலகம் முழுதுடையான்
தன்னுடைய பிழைஅல்ல தாரணியோர் தவறல்ல
என்னுடைய வினையால்இச் செயல்விளைந்த தென்றாள்என்
றுன்னுடைய தமையனுக்கிங் கிளையோனே உணர்த்துதியால் 77

நிறைந்தகடல் உலகுரைக்கும் நெடும்பழிக்குத் தான்அஞ்சித்
துறந்தனன்வெங் கனற்கேறத் தூயேனாய் இருந்தேனைப்
பிறந்தபழி எனத்துறக்கப் பெருமாயை ஈதெனக்குச்
சிறந்ததுதற் பிரிவென்று செப்பினாள் எனஉரைப்பாய். 78

இளையோய்யான் இருதுவாய் ஈரிரண்டு திங்கள்உள
வளையாழி உலகத்தை வாய் புதைக்கஒண்ணாது
விளைவேதாய் முடியும்என் றறியேன் என் மேனியினை
உளையாத சிந்தையினாய் உற்றுநோக் கெனஉரைத்தாள். 79

என்றினைய அவள்கூற இருகண்கள் நதிசொரிய
வன்திறலோன் மனங்கலங்கி வாய்விட்டுக் கிடந்தலறி
இன்றிவுரை கேட்கநான் என்னவினை செய்தேன்என்
றொன்றிய வெந்துயர்இளையோன் உறுதுயராட்கிவைஉரைத்தான். 80

கன்றியசிந் தையனுய்நின் கணவன்உனேக் கைப்பிடித்த
அன்றுமுதல் இன்றளவும் உன்னுடைய அடிபணிந்து
நின்றபொழு தினுந்தூயோய் நின்மேனி கண்டறியேன்
இன்றினிநான் உனேநோக்க வல்லனே எனஉரைத்தான். 81

வருதுயரம் தனேஅடக்கி மங்கைமலர் அடிபணிந்து
கருதிவினே அறஉலகோர் சென்ருடுங் கங்கைஎனும்
பெருநதியைக் கடந்தவளேப் பின்பார்த்துப் பின்பார்த்துப்
பொருமியவெந் துயர்இளேயோன் போயினுன் நகர்நோக்கி. 82

இன்னம்இவர் வருவரோ போவரோ எனநினேந்து
தன்னுடைய கண்பறியாச் சானகிதான் பார்த்திருந்து
பொன்னின்மணித் தேர்காணேன் போய்மறைந்தான்இளேயோனும்
என்னேஅறக் கைவிட்டான் எனக்கதறத் துடங்கினுள். 83

இலங்கையிலே நெடுங்காலம் இருஞ்சிறையில் யான்இருந்து
புலம்பிஅழுதி யான்பட்ட புல்லன்பு போதாமல்
தலங்குலவு பழிபூட்டித் தனிக்காட்டில் விடுவித்து
விலங்கரிய துயர்விளேத்த விதியேயோ விதியேயோ. 84

ஏதமுறு பழிபூட்டி இப்பிறப்பில் உனேஒழிய
மாதரையென் மனத்தாலும் தொடேன்என்று வரந்தந்த
காதலனே மனங்கலக்கிக் காட்டிலே விடுவித்து
வேதனேநோய் செய்வித்த விதியேயோ விதியேயோ. 85

கண்ணறைக்கா குத்தன்எனேக் காட்டில்விடக் கண்டிருந்தும்
மண்ணகத்தார் வன்கொடுமை வாய்திறவா மானமிலாப்
பண்ணறைச்சி என்றென்னேப் பழிதூற்றப் பண்ணுவித்த
விண்ணவர்க்கும் வெலற்கரிய விதியேயோ விதியேயோ. 86

தாளார்செந் தாமரைத்தாள் தாசரதி யார்மனத்தைக்
கேளானுர் உரைஎன்றுங் கேளாத வகைகலக்கித்
கோளான திடையருக் கொடுவினேயே னுக்கொருநாள்
மீளாத வனம்தந்த விதியேயோ விதியேயோ. 87

தக்ககண வன்சீறித் தன்னேக்கை விடக்கண்ட
புக்கத்தார் கைவிடுவர் பிறந்தகத்தார் போற்ருர்கள்
அக்கணமே பழிஇடுவர் அன்னியர்கள் அருவினேயேன்
மிக்கொர்இடங் காணகிலேன் விதியேயோ விதியேயோ. 88

இன்னபல வும்பன்னி இடர்உறுவாள் இடர்தீர
என்உயிர்தான் போகாதோ எனக்கதறும் அக்காலே
வன்னியினும் தூயனும் வான்மீகி மைந்தர்கள்தாம்
நன்னுதலாள் அழும்ஓசை வழிவந்து நண்ணலுற்ருர். 89

அழும்அவளைக் கண்டிரங்கி அருந்தவனைக் கடிதணுகித்
தொழுதவர்கள் சொல்லுவார் சுரர்உலகு தனினின்றும்
வழுவியவள் விழுந்தாளோ மண்ணுலகின் உள்ளாளோ
எழுதரிய மேனியாள் யாவளோ என்றறியோம். 90

ஒருவர்இல்லாக் காட்டிலே உள்ளுறுசோ கத்தாள்ஓர்
தெரிவையோர் துணைஇன்றித் தெய்வமே துணையாகி
இருகண்ணீர் நதிபெருக விழுந்தழுகின் றுளவளுக்
கருள்புரிய உனக்கடுக்கும் அருந்தவத்தோய் எனஉரைத்தார். 91

*அங்கவ ரோடும்போய்ச்சென் றழுகைஓ யாதுநெஞ்சில்
தங்கிய சோகமாறச் சானகி தன்னைத்தேற்றி
இங்குநீ இருந்துசோகித் தென்பயன் இடரைவிட்டு
மங்கைநீ கேட்டியென்ன மாதவன் உரைப்பதானுன். 92

அனகனும் இராமன்தேவி என்றும்நீ அமலைஎன்றும்
சனகன்மா மகள்நீஎன்றும் சமாதியில் உணர்ந்தேன்தக்க
உனைஅவன் காட்டில்விட்டான் அல்லன்என் உழையேவிட்டான்
எனநினை யாங்கள்வைகும் இடத்தில்எம் மோடும்போதி. 93

எங்கள்ஆச் சிரமத்தெல்லை இவிடத்தி லெல்லையில்லா
மங்கையர் தவவேடத்தைத் தாங்கிமா தவம்செய்வோர்கள்
அங்கவர் உன்னைக்கண்டால் அகமகிழ்ந் துடனேகொண்டு
தங்களாச் சிரமத்தேபோய்ப் போற்றுவர் தளரேல்என்றான். 94

துங்கமா தவன்இவ்வாறு சொல்லிடத் தூயள்ஆகி
அங்கவன் அல்லல்தீர்க்கும் அடியிணை வணங்கிநிற்ப
மங்கையை உடனேகொண்டம் மாதவன் ஓமதூபம்
தங்கிய முகட்டுப்பன்ன சாலையை வந்துசார்ந்தான். 95

சீதையைக் கண்டமாதர் தெரித்திரர் ஆகிஉள்ளோர்
மாதனம் பெற்றாற்போல மகிழ்ந்தவள் வடிவைக்கண்டு
தீதறு மனத்தின்மிக்க திருமகள் இவளோஎன்பார்
வேதனைஉள்ளே உண்டிம் மெல்லிய லாளுக்கென்பார். 96

தாங்கருஞ் சினத்தால்விண்ணோர் சவிப்பவீழ்ந் தாளோஎன்பார்
ஆங்கவர் இந்தவண்ணம் ஐயுறு கின்றகாலை
ஈங்கிவள் பிறப்பும்பேரும் இவள்கண வன்தன்பேரும்
நீங்கள்கேண் மின்கள்என்னு நெடுந்தவ முனிவன்கூறும். 97

மனுகுலம் விளங்கத்தோன்றி மறிகடல் மலையால்கட்டித்
தனுவினுல் இலங்கைசெற்ற தசரத ராமன்தேவி
துனிஅறு சனகன்பெற்ற தூயவள் சீதைஎன்பாள்
இனையவள் கணவன்ஆணேன் துறந்திட இங்குவந்தாள். 98

*மாதவத்தோனங் கிவ்வுரைஉரைப்ப மங்கையர்அனைவரும்மகிழ்ந்து
சீதையைப்போற்றச் சுமந்திரனோடும் இளையவன் திருநகர்புகுந்து
நாதனைப்பணிந்து செய்ததைஉரைப்ப நாட்டுளோர் சொல்வழிகேட்டு
வேதனைஉற்ற அன்றினும்மிக்க வேதனை உற்றனன்வீரன். 99

துதிபழிஇரண்டும் கேட்டதுசொல்லும் உலகையும் தீவழிஒழுகும்
மதியையும்நோவ அடாதுமாச்சனகன் மகளையும் நோவவங்கடாது
அதிகுணவதியாய் அழலினும்தூய அவளையும் உன்னையும்பிரித்த
விதியினைநோவ அடுக்கும்என்றிளையோன் விளம்பிடத் தேறினன்வீரன். 100

21. சீதை வனம் புகுபடலம் முற்றும்.

---

## 22. இராசநீதிப்படலம்

நிறைகடல் அவனிபாரம் நீக்கிய நெடும்பொற் றிண்தோள்
இறையவன் இராமன்அன்போ டிளவலை இனிதின்நோக்கி
நறைகமழ் தாரோய் கேட்டி நடப்புநாள் தோறும்நாடி
முறைசெய்கை இராசதன்மம் அதனைநாம் முயல்தும் என்றான் 1

சீறிய மனத்தன்ஆகிச் சிறந்தசெங் கோலைவிட்டுக்
கூறுவெம் பழியினோடு குலைந்திடக் கொடுங்கோலோச்சி
ஆறில்ஒன் றிறைகொள் ளாதே அல்லவை அகற்றிடாதே
ஏறிறை கொள்வோர் நாட்டில் இருப்பவர் மூர்க்கர்என்றாள் 2

தண்டிக்கப் படுவோர் தம்மைத் தண்டியா தொழித்துவிட்டுத்
தண்டிக்கப் படாதார் தம்மைத் தண்டிக்கும் தரணி வேந்தன்
எண்டிக்கும் பரந்து மூடும் இரும்பழி யெய்தித்தீயோர்த்
தண்டிக்கும் தருமனாலே தண்டிக்கப் படும் பின்என்றான். 3

அடல்பெருங் களிறுதிண்தேர் அடுபரி காலாள் துன்றும்
கடல்படை யோரின்மிக்க கருணையோன் கர்த லோடும்
இடர்க்கடல் வறியோர்ஏற இருநிதி ஈவோன் நாட்டில்
நடப்பறி யாதுகெட்ட நரபதி உளன்கொல் என்றான். 4

கொற்றவ னிருகன் கோடி கோடியாக் கொடுங்குங்காலை
நற்றவ மறையோ னுக்கு நல்லதோர் பசுவைநல்க
மற்றது தப்பி மன்னன் மாநிரை வந்துகூட
உற்றதை அறியான் மற்றோர் உயர்மறை யோனுக்கீந்தான். 5

முன்பது தானம்பெற்ற முப்புரி நூலன் கெட்ட
தன்பசுத் தன்னைக் காணான் தரணியில் எங்கும் தேடிப்
பின்பது தானம்பெற்ற பெருந்தவன் மனையில் கண்ட
தென்பசு என்னலோடும் இருவரும் விரோதம் பண்ணி. 6

மன்னவன் கோயில்வாயில் மறையவர் விரைந்து வந்து
பன்னெடு நாள்ஓயாது முறையிடப் பார்த்து வேந்தன்
என்னகா ரணம்நீர் வந்து முறையிட்ட தெனக்கேளாதால்
அன்னவர் அவனைக்கோம்பி ஆகெனச் சபித்தார் அன்றே 7

தாங்கருந் துயரமிக்கோர் கூபத்தில் தலைகீ ழாகத்
தூங்கியீ ருகங்கள்சென்று துவாபர யுகத்தில் தோன்றும்
சார்ங்கபா ணியன்தன்செய்ய தாமரைக் கண்ணுல் பார்க்க
நீங்கிடுஞ் சாபமென்ன றெடுந்தவ முனிவர் போனுர். 8

பேரியிரு வரும்மக்கோவைப் புரையறு தவத்தால் மிக்க
தூயமா முனிவர்க்கீய்ந்து தொன்றுகா ரியத்தில் போனுர்
ஆயமன் னவனுங்கோம்பி ஆகிஆழ் கிணற்றில் வீழ்ந்தான்
தேயநாள் தோறும்நாடாத் திறன்மன்னன் கேடி தென்ருன் 9

தன்னெதிர் இலாதவென்றித் தசரத ராமன் நாட்டில்
சொன்னஅக் கதையைஉன்னும் தோறும்ஆச் சரியம் எய்தி
என்னஅற் புதமோஎன்ருங் கிளையவன் இயம்பத் தூயோய்
இன்னம்அற் புதமாய்உள்ள ஒருகதை இயம்பக் கேள்நீ. 10

மன்னவன் நிமிஎன்பான்சீர் மனுகுலம் விளங்கத் தோன்றிப்
பன்னெடுங் காலம்இந்தப் பார்முழு தாண்டு பாரைப்
பின்னவன் துறந்துசென்று பெருவனம் குறுகித் தன்ம
மன்னவன் வினைகள்மாற வருந்தவஞ் செய்யுங் காலை. 11

சத்துரு காலனும்இத் தரணியைக் காத்தோன் தீர்க்க
சத்திர யாகம் செய்யச் சமைந்துமா தவத்தின் மிக்க
அத்திரி பிருகுதூய அங்கிரா வசிட்டன் என்னும்
மித்திர முனிவர்தம்மை விளித்திட வசிட்டன் சொல்வான். 12

என்னைமன் னவனேவானோர் இறைமகம் செய்ய எண்ணி
முன்னமே வரித்தான்அந்த வேள்வியை முடித்து நின்பால்
பின்னையான் வருகின்றேன்என் றம்முனி பேசப் பேணி
மன்னுகோ தமனைக்கொண்டு மகத்தினை நடத்துங் காலை. 13

மாறிலா வானோர்மன்னன் மகத்தினை முடித்து ஞானம்
தேறுகோ தமனைக்கொண்டெ சய்கின்ற வேள்வி கண்டு
சீறிய வசிட்டன்அந்தத் [1] தீக்கிதற் காண்பான் செல்ல
மாறிலாத் துயிலன்ஆக மாமுனி சீற்ற மிக்கான். 14

என்னைமுன் வரித்துப்பேர்ன யான்வரு தற்கு முன்போர்
அன்னியன் தன்னைக்கொண்டிங் கருமகம் நடத்து கின்ற
மன்னவன் தனைநான்காண வந்திடப் புறப்ப டாதோன்
தன்னுடல் விடுகஆவி எனமுனி சபித்தான் அன்றே. 15

அன்னவன் சபிப்பக்கேட்ட அரசர்கோன் அழலில் பொங்கித்
தன்வர வறியேன்பாயல் சார்ந்துநித் திரைநான் பண்ண
என்னைஅந் நியாயத்தாலே சபித்தஇச் சாபம் அன்னுன்
தன்னையும் சார்கஎன்று சபித்தனன் தவத்தின் மிக்கான் 16

[1] தீக்கிதற் = தீக்ஷிதன்

இருவரும் விரோதராகி இயங்குநாள் வசிட்ட ஞவி
தெரிவரும் பெருமைமிக்க திசைமுகன் தன்னை நண்ணி
ஒருவரும் தன்னைஒவ்வா உயர்தவன் நிமிசா பத்தால்
பிரிவரும் உடலம்விட்டேன் பெறும்படி அருள்நீ என்றான். 17

ஒத்தவர் தம்மைஇல்லா உருப்பசி நிமித்த மாய
மித்திரன் வருணன்விட்ட வீரியம் தன்னை எய்திக்
குத்திர யோனியல்லாக் கும்பமாம் தெய்வ யோனிப்
புத்திரன் ஆகிவந்து தோன்றுதி போநீ என்றான். 18

*மலர்அயன் விடுப்ப மாமுனிஆவி மறிகடல்எய்திட வருணன்
நிலையிடைநின்ற மித்திரன்செலுத்த நீள்குழல் அரம்பையரோடு
சலவிளையாட்டில் தாழ்ந்தநெஞ்சினளாம் உருப்பசி தடநெடுங்கண்ணும்
வலையிடைப்பட்டு மயங்கியமனத்தன் வருணன்மற் றவட்கிவைஉரைப்பான்.

உன்னையான்வரித்தேன் என்றவன்உரைப்ப உருப்பசிகூறுவாள் உயர்ந்தோய்
முன்னமேஎன்னை மித்திரன்கண்டு வரித்தனன் முறைகெடவந்து
பின்னைநீவரிக்கை பிழைஎனஉரைப்பப் பெருகியகாமவெங்கனலால்
தன்னுடல்உருகி வீரியம்வீழத் தையலுக் கவனிவை உரைக்கும்20

மின்னிடைமடவாய்என்னுடல்உருகி வீழ்ந்தவீரியத்தினைக்கும்பம்
தன்னிடைஇடுகின் றேன்எனமகிழ்ந்து வருணன்மேல் தாழ்ந்தசிந்தையளாய்
அன்னமென்நடையாள்மித்திரன்தன்னை அணுகிடஆலமதென்ன
வன்னியாம்என்னக் கனன்றசீற்றத்தன் மற்றவ ளுக்கிவைஉரைத்தான்

முன்னமேகண்டு நின்னையான்வரிக்க முறைமைஈதன்றெனஉணராய்
அன்னியன்தனைக்கண் டன்புபட்டனைநீ ஆதலால் அறிவிலாதாளே
பொன்னுலகிழிந்து புவியிடை நீபோய்ப் புதன்மகன் புரூரவாஎன்னும்
மன்னவன்தனக்கு மனைவியாய்நெடுநாள் வைகுதி என்றவன்சபித்தான்.

அன்னவீரியத்தை அமரர்கள்வகுத்த குடத்திடை வருணன்ஆங்கிடலும்
மின்னிடையாளைக்கண்டுமெய்உருகி மித்திரன்வீழ்த்தவீரியத்தை
முன்னமேகும்பத்திடுகையால்முன்பு முழுதுணர்அகத்தியன் பிறந்தான்.
பின்னைவாருணத்தைஇடுகையால்பின்பு வந்தனன்பெருந்தவவசிட்டன்.

என்றுலகேழும்உடையவன்எதிர்த்த இராக்கதர்குலத்தைவேர்அறுத்து
வென்றிகொள்வீரன்விளம்பியகதையை கேட்டலும்மிகவியப்பெய்தி
அன்றுடல்பிரிந்த அன்னிமிஆவி செய்ததும் வேள்வியின்அளவும்
ஒன்றொழியாமல் உணர்த்திஎன்றினையோன் உரைத்திட உத்தமன்உரைக்கும்.

தீயசாபத்தாற் சேதனம்பிரிந்த நிமியுடல் சிறந்தநல் அடியார்
ஆயவராலே ஆடைஆபரண முதலகொண் டலங்கரிப்பித்துச்
சேயவராயை யாயிரத்தாண்டு செய்தியிற் குறைபடாவண்ணம்
தூய்மாமுனிவர் அந்நிமிமுன்னுட் டுடங்கிய வேள்வியை முடித்தார். 25

அந்தவேலையில்வந் தமரர்கள்கூடி அன்னிமி ஆவியை அழைத்துச்
சிந்தையாம்உவந்தோம் ஒருவரம்வேண்டிக் கொள்ளனத் தேவர்கள்செப்ப
இந்தமாநிலத்தோர் கண்களினின்றியான் இயங்கிட இவ்வரம்எனக்குத்
தந்திடவேண்டும் எனஅவர்தந்தோம் என்றுதாம் உறைவிடஞ்சார்ந்தார்.

முனித்தலைவர்களந் நிமிஉடல்தன்னை முரணுடை அரணியால்கடையச்
சனித்தவன்தன்னைச் சனிக்கையினாலே சனகன்என் றவர்பெயர்கூறி
இனித்தரணியைக்கா என்றனர்என்று கூறுநல் லேதிகள்ஒழித்து
தனிச்சிலைதரித்தோன் உரைசெய்தபின்னும் தம்பியைக் குறித்திவைசாற்றும்.

ஒள்ளிய தவத்தால் கல்வியால் உணர்வால் உண்மையால் உயர்ந்தவர்உயர்ந்தோர்
எள்ளியகுற்றம் இல்லவர் எய்தும் வெகுளியால் இப்படிப்பட்டார்
தெள்ளியவீரச் சிலையினாய்புறத்து திறற்பகை வெல்லலாம்சினமாம்
உள்ளூறுபகையை வென்றவர்இந்த உலகத்தில் ஒருவரும்இல்லை.

மூங்கிலில்பிறந்த முழங்குதீமூங்கில் முதலினை முருக்குமாபோலத்
தாங்கருஞ்சினத்தீத்தன்னுளேபிறந்துதன்னுறுகிளையெலாந்தீக்கும்
ஆங்கதன்வெம்மை அறிந்தவர்கமையால் அதனைஉள் அடக்கவும்அடங்கா
தோங்கியகோபத் தீயினைஒக்கும் உட்பகை உலகில்வேறுண்டோ.

*மனத்தினால் வாக்கால்வாய்ந்த செய்கையால் மாசிலாதோர்
சினத்தினால் மிக்கோர்பண்டு செய்தஅக் கதையைஎல்லாம்
உனக்குநான் உரைப்பன்யாவும் உணர்ந்துகேள் என்றுவாசப்
புனத்துழாய் மாலைமார்பன் அக்கதை புகலலுற்றான். 30

மன்னவன் நகுடன்என்போன் வாசவன் மகமும் செய்தோன்
அன்னவன் புதல்வன்தாதை அனையவன் தவத்தின் மிக்கோன்
பன்னெடுங் காலந்தன்னைப் பார்மன்னர் முறை சேவிப்ப
இந்நகர்க் கிறைவனாய்வீற் றிருந்தவன் யயாதி என்போன். 31

பார்க்கவன் கண்ணாய் உள்ளோன் பகையறக் களைந்துகாத்துப்
பார்க்கவன் றவத்தைஎன்றும் பண்ணுவோன் விண்ணோர்தன்கை
பார்க்கவன் றந்தயாகம் பண்ணுவோன் சன்மிட் டைக்கும்
பார்க்கவன் பயந்ததெய்வ யானிக்கும் பதியாய் உள்ளோன். 32

தன்மிட்ட னையவந்த யாதிக்குத் தடமென் கொங்கைச்
சன்மிட்டை வயிற்றில் பூருச் சனித்தனன் தயித்தியர்க்குத்
கன்மிட்டன் ஆகிக்காக்கும் கவிமகள் வயிற்றில் காசில்
பொன்விட்டு விளங்கும்பூணாய் யதுஎனும் புதல்வன் வந்தான்.

இருவரும் வளருங்காலை யதுஎனும் பெயரோன் வெள்ளம்
சொரிதரு கண்ணன்வெம்மை தோன்றிய கோபத் தீயன்
வருபெருந் துயராற்றாதே வல்விரைந் தெய்திஅந்தத்
தெரிவையர் திலதமான சேயிழைக் கின்ன செப்பும். 34

தன்மம்ஒன் றிலாதசிந்தைத் தயித்தியர் தலைவனானேன்
தன்மகள் தனைக்கொண்டாடி அவள்மகன் தனையேபோற்றி
உன்மகன் எனுங்கோபத்தா லேஎளனை உரப்பாநிற்கும்
துன்மதி மன்னன்தூயோய் கேள்எனப் பின்னும்சொல்லும். 35

போதமில் யயாதிக்கன்று புகுந்தஅப் பாவம்தீர்த்தாய்
ஆதிநீ யானும்இந்த அருந்துயர் தீர்ந்தேன்ஆவன்
மாய்தலே நமக்குநன்று மானத்தால் கவரிமாக்கள்
சாதலைக் கண்டுந்தேறாய் தளர்ந்தொரு மயிருக்காக. 36

ஆயவன் இனைய கூற ஆயிழை அழன்று பொங்கித்
தூயநற் பவளச் செவ்வாய் துடித்திடக் கண்ணீர் சோரச்
சேயினை உடனே கொண்டு செறிபுகழ்த் தந்தை தன்பால்
போயவன் அடியில் வீழ்ந்து பொருமிநின் றழுது சொல்லும். 37

சிந்தைசன் மிட்டைமேலே செல்கையால் மன்னன் அன்னாள்
மைந்தனைக் கண்டால் கையால் வரவணைத் திறுகப்புல்லி
எந்தைகேள் என்னைக் கண்டால் என்னஎன் மகனைக்காயும்
இந்தவெந் துயருக் காற்றேன் எரியிடை வீழ்த்தும் என்றாள். 38

குழன்ற பூங் குழலாள் நெஞ்சு கொதித்திவை கூறவெள்ளிக்
கழன்றது சிந்தை போதம் அழிந்தது சிவந்து கண்கள்
சுழன்றன புருவம் நின்று துடித்தன தூய நல்லோர்க்
கெழுந்தது கோபம் என்றால் யார்அது தடுக்க வல்லார். 39

அவ்வழி வெள்ளிகோபித் தந்தமாற் றாட்டிக் கன்பாய்ச்
செய்வகை அறியான் சிந்தை கலங்கிஇத் தெய்வயானிக்
கிவ்வகை இடரைச் செய்த யயாதிதன் இளமை நீங்கி
நைவள மொழியார் கண்டு நகைசெய்மூப் படைக என்றான், 40

தளர்ந்துதாள் பிணங்கி வெள்ளி சாபத்தாற் சாபம் போல
வளைந்துமெய் திரைந்து கேசம் பஞ்சுபோல் வெளுத்து நெஞ்சம்
உளைந்துளைந் திருமிக் கண்ணீர் ஒழுகிநாக் குழறிப் பற்கள்
துளங்கிடுங் கட்டமூப்புத் தோன்றிற்று யயாதிக்கன்றே 41

இந்தமூப் பால்யயாதி யதுவினை நோக்கி என்பால்
வந்தஇம் மூப்பைக்கொண்டென் வருத்தநீ தீர்த்தி யேல் ன்
சிந்தையில் எண்ணம்எல்லாம் தீர்ந்துநல் அறங்கள் செய்
மைந்தநீ கொண்ட மூப்பை மறித்துநான் கொள்வன் என்றான்.

நைந்தடி அற்றவால நடுங்கிவீழ் கின்ற தென்று
வந்தடிவீழ் ஊன்றிவீழா வகைநிலைப் பிக்குமா போல்
மைந்தனை உள்ளோன்வாதை வந்துமெய் வருந்துங் காலை
தந்தையைத் தளராவண்ணம் தாங்குதல் தவத்தின் நன்றால். 43

புத்திரன் ஆவோன் நீதி பொருந்தித்தன் குலத்தின் உள்ளோர்
அத்தனை வரையும் தீய அருநர குறுமல் காத்துச்
சுத்தமாங் கதியில் உய்ப்போன் என்றுசொல் லுவர்கள் தூயோய்
இத்தைநீ உணர்ந்துஎன் மூப்பாம் இடும்பை நோய் தீர்த்திஎன்முன்.

என்றவன் இயம்பக் கேட்ட யதுஇவை இயம்பும் எந்தாய்
உன்தனக் குரியமைந்தன் தன்னைநீ உடன் கொண் டுண்ணும்
அன்றெனக் குரிமை இல்லை யாகிய துடனே உண்ண
இன்றெனக் குரிமை உண்டோ இவ்விடர் தீர்க்க என்முன். 45

ஈதவன் இயம்பித் தன்சொல் மறுத்திட யயாதி போய்நற்
போதவன்ஆய மைந்தன் பூருவை அழைத்துக் கண்டு
கோதறு குணத்தோய் நீஎன் கொடியமூப் பதனைக் கொண்டென்
வாதையை மைந்த தீர்க்க வல்லையோ என்னச் சொன்னான். 46

இன்னவை இயம்பப் பூரு என்இடர் தீர்த்தி என்று
மன்னவன் கூறப்பெற்று வாழ்ந்தனன் அன்றோ மண்ணில்
என்னைஒப் பவர்யார்என்று யயாதிதன் மூப்பை கொள்ளத்
தன்இள மையினைப்பெற்ற தராபதி யதுவை நோக்கி. 47

நீசுர ரோடு விண்ணோர் நிகழுநின் மைந்த ரோடும்
ஆசுர பாவம் சார்வாய் ஆகெனச் சபித்து வேறோர்
கூசுரம் உடைய கோமான் கொடுவினை அறுப்பான் கோலி
மாசுரம் அடைந்தான் மற்றை மைந்தனை மகுடம் சூட்டி. 48

ஒன்றிய கோபத் தோர்கள் இவ்வகை கெடுதல் உண்மை
என்றுகார் வண்ணன் கூற இளையவன் வியந்து சால
நன்றிது எனக்கொண் டாட நாயிறு கடலின் மூழ்க
வென்றிகொள் வீரன் சந்தி விதிமுறை முடித்த பின்பு 49

22 இராசநீதிப் படலம் முற்றும்.

---

## 23. இலவணன் வதைப்படலம்

அவ்விர வமளி நண்ணி ஆசையும் மண்ணும் விண்ணும்
கைவிர வியமை வண்ணக் கார் இருள் கலங்கிஓட
வெவ்விர வியுமைவேலை மிசைவர வேதம் என்னப்
பொய்விர வியசொல் இல்லாப் புரவலன் பள்ளி நீங்கி. 1

சந்திகா ரியங்கள் எல்லாம் சமைத்தபின் அழைப்பச் சார்ந்த
அந்தணர்க் கம்பொன் பூமி ஆநிரை ஆதி யாய
இந்திரை கொழுனன் ஈந்தாண் டிருந்தபின் முனிவர் எல்லாம்
வந்தனர் என்னச் சொல்ல வாயிலோய் கொணர்தி என்றான். 2

புருத்திகன் வாயில் காப்போன் போயவன் விடுப்பப்புக்க
விருத்தராம் முனிவர் தம்மை விதிமுறை அருச்சித் துங்கள்
அருத்தமாந் தவங்கட் கிப்போ தழிவொன்றும் இலையே என்று
திருத்திகழ் மார்பன் கூறச் சிவவணன்இனைய செப்பும். 3

மன்னவர் மன்னுமுன்னுள் மதுஎனும் தானை வேந்தன்
தன்எதிர் இலாதவீரன் தருமமும் தயாவும் மிக்கோன்
பின்னரன் அருளால் பெற்ற பெருவலித் திரிசூலத்தன்
அன்னது கையதாக அழிவிலா ஆயுப் பெற்றோன். 4

ஆயவன் தனக்குக்கும்பி நசிவயிற் றவதா ரஞ்செய்
தீயவன் தேவராதி திரிபுவ னத்து ளோர்க்கும்
சாய்விலா வென்றிவீரன் தயாவொடும் தருமத் தோடும்
ஏய்விலா வஞ்சநெஞ்சன் இலவணன் என்னும் பேரான் 5

அன்னவன் கொடுமைகண்டு பெறுமுன்பு அரன்பால் பெற்ற
இந்நெடும் சூலம்நின்கை இருக்கவே இமையோ ரேனும்
உன்னொடும் பொருவான்மூளில் உலைவர் என் றுரைத்துப்போரில்
தன்னெதிர் இலாததந்தை கொடுத்திடத் தன்கைக் கொண்டான்.

அங்கது கைக்கொண்டந்த அவனியை அடங்க நூறித்
தங்குமா தவத்தோர் தம்மைத் தவம்செயா வண்ணங் காத்தோன்
இங்கெமக் கிடையூறுற்றால் இந்நகர் வருவ தன்றிப்
பொங்கர வணையாய்வேறு புகலிடம் உண்டோ என்றான் 7

ஆங்கவன் உரைத்தசொற்கேட் டருந்தவ முனிவர்க் கெல்லாம்
தீங்குசெய் தீயோன்தன்னைத் தென்புலத் துய்ப்பன் திண்ணம்
நீங்கள்போய் அஞ்சாதுங்கள் நிலைகளில் நின்மின் என்று
தேங்கமழ் தாரோன்தீயோன் தனைக்கொலும் திறம்சிந் திப்பான்.

இன் உயிர்த் தம்பிமாரை இருகணால் இனிது நோக்கி
மன்உயிர் அடங்கக்கொன்று மாதவர்க் கிடரைச் செய்தோன்
தன்உயிர் தன்னைவாங்கத் தகும்அவர் யாரோ என்ன
என்உரை கேட்டிஎன்னா இலக்குவன் இனைய சொன்னான். 9

மூவகை உலகின்உள்ள முனைவர்தா னவர்கள் ஆதி
யாவரும் அவனுக்காகி என்னொடும் பொருவ ரேனும்
ஏவினை ஆகில்என்னை இலவணன் என்னும் அந்தப்
பாவகா ரியைநான்கொல்வன் என்றலும் பரதன் கூறும் 10

துங்கமா முடியோய்நாயேன் சொல்லுவ துளது கேட்டி
வெங்கொடுங் கானத்தேபோய் மென்கனி சாக மூலம்
அங்கவை அமுதுசெய்தற் காய்ந்தனன் ஆண்டீ ரேழும்
கங்குலும் பகலும்உன்னைக் கண்ணுறங் காது காத்து 11

வந்தெதிர் பொருதமாய அரக்கரை மடிய நூறி
அந்தக புரத்தில்ஏற்றி அடல் அதிகாய னோடும்
இந்திர சித்தைக்கொன்றங் கிராவணற் கிடரைச் செய்து
நொந்தனன் இளையோன்அந்த நோவைநீ நோக்கவேண்டும் 12

பலபல உரைத்தென்வெய்ய பாதக அரக்கன் பத்துத்
தலைகளும் இரட்டிதோளும் சரத்தினில் தடிந்த வீரச்
சிலைவலோய் என்னைஏவில் தீவினை களையே செய்யும்
இலவணன் தன்னைநான்கொன் றிவ்விடர் தீர்ப்பன் என்றான் 13

இன்னவை பரதன்கூற இளையசத் துருக்கன் கூறும்
மன்னவர் மன்னநீபோய் வனம்புகு வார்த்தை கேட்டு
நின் ! வரசுசெய்யப் பணிந்துநீ மறுப்ப நின்றுன்
_ன்னடி நிலையைக்கொண்டு போந்தவை அரசில் வைத்து 14

அரசிலா அயோத்திஎய்தி அரசுநாம் செய்தோம் என்று
நரர்பழி இடுவர்என்று நந்திநல் கிராமம் நண்ணி
மரவுரி உடுத்துவார்ந்த சடையனாய்க் கண்ணீர் மாறாப்
பரதனை ஏவலாமோ படர்புகழ்ப் பைம்பொற் பூணாய் 15

எஞ்சலில் கீர்த்திபூண்ட இளையவன் இயம்பும் இன்னும்
அஞ்சன வரைபோல்மேனி அழகனே அருளி லாத
வஞ்சன்மேல் என்னைஏவில் வான்உல கவனை ஏற்றி
நெஞ்சிடர் முனிவர்நீங்க நிறுத்துவன் தவத்தை என்றான் 16

வளை தனுக் கையில்வாங்கி வானவ ரேனும் வெம்போர்
விளைகளத் தேற்பராகில் வென்றிகொள் வீரப் பொற்றோள்
இளையசத் துருக்கன்இவ்வா றுரைத்திட இராமன் கேட்டுக்
கிளர்ஒளிப் பவளச்செவ்வாய் திறந்திவை கிளத்தல் உற்றான் 17

முனைக்களத் தெதிர்ப்பின்இந்த மூவுல கத்தின் உள்ளோர்
உனக்கெதிர் நிற்கும்ஆற்றல் உடையரோ உயர்பொற் றோளாய்
சினத்திறல் அசுரன்தன்னைத் தென்புலத் தேற்றித் தூயோர்
மனத்திடர் தீர்த்திஎன்றான் மனுகுலத் துற்ற வள்ளல் 18

இன்னவை இராமன்கூற இலவணன் தன்னைக் கொல்ல
என்னைஏ விடப்பெற்றேன்என் றெழுந்தபே ருவகை யோடும்
மன்னவன் தன்னைமும்மை வலஞ்செய்து வணங்கி நிற்பத்
தன்இரு தோள்கள்ஆரத் தழுவினன் சகத்தின் நாதன் 19

அலகிலா மாவும்தேரும் அடுகளிற் றினமும் ஆற்றல்
தொலைவிலாப் பெரும்பதாதித் தொகுதியும் போக ஏவிப்
விலையிலா மணியும்முத்தும் மெல்நுரைத் துகிலும் பூணும்
மலைகுல வியதோளாற்கு வழங்கினான் கருணை வள்ளல் 20

பரதனைப் பதினாலாண்டு பரமனைக் காக்கப் பூண்ட
விரதனை விளங்குசோதி வெய்யவன் குலத்தோர்க் கென்றும்
வரதனும் வசிட்டன்தன்னை வணங்கியவ் வஞ்சன் தன்னைச்
சரதம்நான் கொல்வன்என்று சமைந்துசத் துருக்கன் போனான். 21

*எண்ணிலாக்கரிபரிதேரிடைநெருங்கும்பெரும்படையைமுன்னேஏவி
தண்ணிலாவிடுமுறுவற் றையலர்பலாண்டிசைப்பத் தனதுமேனி
வெண்ணிலா ஒளிவீச வெள்ளிமலை ஒருமலைமேல் மேயதென்ன
மண்ணுலா வியபுகழான் மாமணித்தேர் ஏறினன் வானோர்வாழ்த்த. 22

ஆனகதுந் துமிமுழவம் அணிமுரசம் முதல்அனைய அமலை ஓங்க
வானகமுமண்ணகமும் வளர்பெருந் தூளியின்மறைய மலர்ப்பூஞ்சோலை
தேனகுபங் கயப்பழனத் திருநாடு கடந்துபோய்த் தெய்வக்கங்கை
மாநதியை மகிழ்ந்தாடி வான்மீகி யருந்தவம்செய் வனத்தை உற்றான்.

அங்கமுனி யடிவணங்கி அவன்செய்த பூசனைகொண் டன்றுதங்க
மங்கைசன கன்பயந்த மடப்பாவை அவ்விரவு வயிறு வாய்ப்பச்
செங்கமல விழிச்செவ்வாய்ச் சிறுவர்பிறந் தார்இருவர் என்றுசெப்ப
பங்கமிலா முனிஎழுந்து பரிவோடும் பிள்ளைகளைப் பற்றிப்பார்த்தான்.

மைவண்ணத்தாமரைக்கண் மன்னன்இரா மன்தன்னை வந்துகண்டார்க்
கெவ்வண்ணம் அவன்இருக்கும் இலக்கணங்கள் அவைபலவும் இலங்கித்தோன்ற
அவ்வண்ணத் தவ்உருவாய் அவதரித்த பிள்ளைகளை அருளின் நோக்கிச்
செய்வண்ணம் அறியாது சிந்தைமகிழ் மாதவத்தோர் இனையசெய்தார்.

சீதைதன் திருவயிற்றில் திருஅவதா ரம்செய்த சிறுவர்தம்மைப்
பூதபசாசுகள்முதலானவைவந்து பொருந்தாமல்புரைதீர்காட்சிக்
கோதறுமந் திரங்கள்சொலிக் குசலவங்க ளால்துடைத்துக் குறிக்கொண்டார்கள்
ஆதலால் அம்மைந்தர் குசலவர்கள் என்றுபெய ராயினார்கள்.

பிள்ளைகள்சா னகிவயிற்றில் பிறந்தார்கள் எனமுனிவர் பேசக்கேட்டாங்
குள்ளமகிழ் சத்துருக்கன் உன்னுவான் உயர்மாட அயோத்திஎன்னும்
ஒள்ளியமா நகரியிடை உற்பவிக்கப் பெறுதுவகை ஒலிஒன்றின்றிப்
புள்ஒலியே மிகுகாட்டில் பிறந்தோர்ரப் பொன்னகரில் பிறந்தாராகில்.

பொய்யாத வேதியர்க்குப் பூதானம் கோதானம் முதலாம்உள்ள
கையார நிதிவீசிக் காகுத்தன் காளையர்கள் பிறந்தார்என்று
மையார்பூம் பொழில்நகரிமகிழ்வெய்தி மணிமுரசம்அறைவித்தின்று
நெய்யாட லால்சனங்கள் என்படுமோ என்றென்று நினைந்துநைந்தான். 28

ஏதமிலாக் குணத்திறேன் இவ்வண்ணம் சிந்திப்ப இருள்கைவாங்கிப்
போதுவிடிந்தறியாமல் புறப்பட்டான் குடதயத்தில்பொலிந்துதோன்றி
மாதவரை அடிபணிந்து மற்றவர்கள்தனைவாழ்த்த மணிப்பொற்றேரின்
மீதுவந்து மேற்றிசைமேற் குறித்துவழி மேற்கொண்டு மேவினானல். 29

ஏறுபுகழ்ச் சத்துருக்கன் ஏழுநாள் இடைத்தங்கி யமுனைஎன்னும்
ஆறுகடந் தக்கரையின்அருந்தவரை அடிவணங்கி அவர்கள்நெஞ்சம்
ஊறியநெஞ் சொடுசெய்தபூசனைகொண் டுள்ளமகிழ்ந் துடனேநல்லோர்
கூறியமாக் கதைஇரவு கொண்டாடி மாதவர்கள் கூடத்தங்கி. 30

சந்திவந் தனைசெய்து தபோதனரோ டினிதிருந்த சமையத்தந்த
அந்தணரை அடிவணங்கி அடல்அரக்கர் குலத்தைவேர் அறுத்துவந்த
சுந்தரவில்லிக்கிளையோன் சொல்லுவான் இலவணன் கைச் சூலம்செய்யும்
வெந்தொழிலும் அவன் வலியும் விரித்துரைமின் எனஅவரும் விளம்பலுற்றார்.

மனுகுலமாமுங்கள்குலம் வந்துதித்தோன் மாந்தாதா என்னும்மன்னன்
குனிசிலையைக்கைவாங்கிக் குரைகடல்சூழ்குவலயத்தில் கூடார்கொத்தின்
இனிஒருவர்பிழைத்தோர்கள்இல்லைஎனக் குலத்தோடுந்தொலைத்துப்பின்னும்
தனிஒருசக் கரநடத்தித் தரணிமுழு துங்காத்த தடந்தோள்வீரன் 32

செறிமணிமாமுடிமன்னர் திறைகொணர்ந்து சென்றுபுகப் பெருதுதூங்கும்
குறுகரிய பெருங்காவல் கோபுரவா யிலையுடைய குலவு செல்வன்
தறுகணுடை வன்னெஞ்சத் தாங்கரிய பேராற்றல் நன்னீர்த்தாகம்
உறுபுலியும் புல்வாயும் ஒருதுறையின் நீர்உண்ண உலகம்ஆண்டான்

இன்னபெரு வலிஉடையோன் இந்திரனைப் போர்வெல்வான்எடுத்துச்செல்ல
அன்னவன்தன்கருத்தறிந்து அமரர்கோன்அருள்செய்வான்அளவிலாற்றல்
மன்னவமண்உலகத்தின்வழியொழுகாவலியோன்மேல்செல்லமாட்டாய்
என்னைஅமர் வென்றுநீ என்உலகங் கோள்ளலுனக் கியல்போஎன்றான்.

தேவர்கோன்இவைசெப்பத் திரைக்கடல்சூழ்அவனிதனைத்திருத்திஆண்ட
மாவலித்தோள்மணிமவுலி மாந்தாதாஇவைஉரைக்கும்மண்ணில்வாழும்
யாவரும்என் வழிஒழுக எனக்கெதிரில் வாராத விகலிற் றியோன்
பூவலையத்தெவன்பெயர்என்புகல்திஎனப் புரந்தரனும்புகலலுற்றான்.

மண்ணுலகில்வலிமிக்கமதுஎன்னும் தானவர்கோன்பயந்தமைந்தன்
நண்ணரிய வரனுடைய மதுபுரமா நகருடையோன் நலமொன்றின்றிப்
பண்ணியபாதகத் தீயோன் பார்உலகில் பல்உயிர்கள்பதைப்பக்கொன்றான்
எண்ணுறுதிண்படையினேன் இலவணன்என் போன்உலகில் எதிரிலாதோன்.

ஈரார்தே வருக்கரசன் என்றினைய செப்பியசொல் செவியில் காய்ந்த
நாராசம் எனநுழைய நன்னிறத்து மானவேல் நடுங்கத்தைப்ப
பாராளும் மன்னன்மனம் பதைபதைப்பப்போக்கொழிந்து பாரின்மீண்டு
பேராது பொங்கிஎழும் பெருங்கோபன் தூதுவனுக் கினையபேசும். 37

இன்னுயிருக்கிடர்செய்யும்இலவணனுக்கிவ்வண்ணம்உரைத்திஎன்ன
உன்னுயிர்நீவேண்டுதியேல் உயர்தவத்தோர்க்கிடர்செய்யா தொழிதிஎன்றும்
மன்னுயிரைக் கொல்கைஇனித் தவிர்என்றும் மதுபுரம்புக் கிவனவ்வண்ணம்
சொன்னபொழு தவனைத்தன்சுடர்வாளி னல்எறிந்தான் துன்றுதோளான்.

தூதுவரக்காணுது தோன்றியவெங் கோபத்தால் துடிக்கும்நெஞ்சன்
மாதவருக்கிடர்செய்து மண்ணுலகில் உயிரைஎல்லாம் வாரிதின்னும்
பாதகன்கைக் சுடர்வாளால்பட்டானோ என்றுபல நினைத்துபார்த்து
நாதன்அடல் படைசூழ நன்மாட மதுபுரத்தை நண்ணுங்காலே.

ஆங்கவனும்நம்மிடத்தில் அஞ்சாதேவந்தடர்ந்தான் ஆரோஎன்று
தாங்கியகைச் சூலத்தன் தானையொடு தலைப்படலுந் தரைக்குமன்னன்
பூங்கணைமாமழைபொழியப் புன்முறுவல்செய்தவனும் பொருமைஎய்தித்
தேங்கமழ்தார் மன்னன்மேல் சிவனளித்த திருச்சூலம் திருப்பிவிட்டான்

ஏழிற்பேருலகமெல்லாம் இப்பொழுதே முடியும்என இமையோர்அஞ்ச
ஊழித்தீக் கிளர்ந்ததென உலகம்எலாம் எரிபரப்பி ஓடிச்சென்றவ்
ஆழித்தேர் மன்னவனை அவன்சேனையோடும்எரித் தளவில்ஆற்றல்
பாழித்தோள் இலவணன்தன் பாணியிலே பண்டுபோல் இருந்ததன்றே.

பொய்யிருக்குமனத்தவுணன் போர்வலியீதென்றுரைத்துப்புகல்வார்பின்னும்
மெய்யிருக்கும்சொல்முனிவர் விரிசடையோன்இடைப்பெற்றவெய்யசூலம்
கையிருக்கில் வெலற்கரியன் கையிலிராக் காலத்தைஅறிந்துகாதில்
நெய்யிருக்கும் சுடர்வேலோய் நிச்சயநின்கைப்படும்அந் நீசன்என்றார்.

என்றுமாமறைமுனிவர் இலவணன்தன் வலியெல்லாம்இயம்பக்கேட்டு
வன்திறல்போர்ச் சத்துருக்கன் மதுபுரமாமாநகரி வழிக்கொண்டந்தக்
குன்றனையோனுயிர்குலையப்புறப்பட்டான் எனச்சாரர்கூறக்கேட்டுச்
சென்றுநகர் தனைஎய்திச் செழுமணிவா யிலின்நின்றான் சேனைசூழ

மன்உயிர்க்குக்காலனாய் மண்உலகின்உயிர்எல்லாம் வளைந்துகொல்லும்
மின்உயிருக்கும்விரிசடையன் விடைஉடையோன்தருஞ்சூலமென்கைத்தாக
என்உயிர்க் கிலையமிலை எனநினையும் இலவணன்தன் நகரிஎய்தித்
தன்உயிர்க்குக்காலனாய் நின்றவிறல் சத்துருக்கன்தன்னைச்சார்ந்தான்.

தன்னுடையநகர்வாயில் தனுதரனாய்ப் போர்செய்யச்சமைந்துநின்ற
மன்னுடைய மகனின்ற வலிகண்டு வாய்மடித்து வஞ்சன்கூறும்
என்னுடைய காவல்அழித் தஞ்சாதேஎன்நகரில் வந்தோய்யாவன்
உன்னுடைய பேர்ஏது நீவந்த காரணம்என் உரைத்தி என்றான். 45

தயரதன்தன் தனையன்யான் சத்துருக்கன்எம்பெயர் சீராமன்தம்பி
புயலனையகருமனத்தோய் போர்வேண்டிவந்தனன்யான் போர்தாராது
பெயர்வரிதின்றுனக்கென்னப் பெருகியவெங்கோபத்தீப்பேராதோங்க
மயல்புரியுமனத்தவுணன் மற்றவனைக்குறித்தினைய வார்த்தைசொன்னான்.

என்னுடைய தமையனும் இராவணனை இருங்கிளையோடெய்துகொன்றான்
உன்னுடையதமையனும் இராகவன்என் றறிந்தவனைஉணர்ந்திலாதேன்
என்னுடையபழம்பகைவன் தம்பிநீ என்இடைவந்தகப்பட்டாயின்
றுன்னையுயிர்கொள்வன்என உரைத்துப்பின் னையுமிவைதான்உரைக்கலுற்றான்

தெவ்வழியில்சிலைதரித்த திறலுடையமாந்தாதாச்சேனையோடென்
கைவழிவந் தகப்பட்டுக் கனலாக விழுந்தமைநீ கழறக்கேட்டும்
உய்வழிஒன் றின்றியுன்தன் உயர்சேனை தன்னொடும்என் உறைவந்துற்றாய்
அவ்வழியில்பிறந்தோருக் கறியாமையேஉடைய தவலம்என்றான்

திண்ணசுரன்இவ்வண்ணம் செப்பியசொற் செவிநுழையச்சீற்றம்பொங்க
கண்ணெரிகான் றிடஊழிக் கனல்என்னக் கடல்ஆல காலம்என்ன
மண்ணதிர மண்சுமந்த மாநாகந் தலைஅதிர வஞ்ச னெஞ்சத்
தெண்ணதிரவிண்ணதிரஇருஞ்சிலையை நாண்எறிந்தான்இராமன்தம்பி.

இவ்வண்ணம் நாண்எறிய எயிறுகடித் திருகையோ டிருகைஎற்றி
மைவண்ண மனத்தவுணன் மலையனைய மராமரமண்குலுங்கவாங்கி
உய்வண்ணம்அரிதிவற்கென்றும்பர்நடுங் கிடவுரவோன்உரத்துவீசக்
கைவண்ணச்சிலைஇளையோன் கணைகளாலம்மரத்தைக்கண்டம்கண்டான் 50

உற்றபெருவெகுளித்தீஉடன்எழுந்த வாள்அவுணன் ஒங்கல்என்ன
மற்றொருமா மரம்பிடுங்கி மண்ணடுங்க விண்ணடுங்க வலியின்வீசிக்
கொற்றநெடுஞ்சிலைஇளையோன் கொடுங்கணைகளாற்கூறுகூறுசெய்து
செற்றமிகுமவன்உரத்துச்செழுங்கணைகள் பலசெறித்தான்தேவர்வாழ்த்த

குன்றனையவாளவுணன் குருதிநீர்உடல்சொரியக் கொதித்துமண்டி
ஒன்றின்மேல் ஒன்றோங்க உயர்மரங்கள் ஒவாது செல்லவீச
வன்திறலோன் இளையான்வில் வளைந்தபடி யேநிற்ப வயிரவாளி
துன்றுமழைபொழிந்தவுணன் துரந்தமரமுமடங்கத்துணித்துவிழ்ந்தான்.

அராவணைமேல் துயில்நீங்கி அயோத்திமா நகர்எய்தி அவனிகாத்த
இராகவன்தன் திருச்சரத்தால் இரவிமா மகன்தேற எய்தஏழில்
மராமரம்ஒன் றொப்பதனை மந்தரமாமன்னதனை வஞ்சன்வாங்கித்
தராதலஞ்சேருயிர்நடுங்கச்சத்துருக்கன்மேல்எறியத்தளர்ந்துவிழ்ந்தான் 53

இறந்தனன்ஈங் கிவன்என்று இலவணன்என் பகைஅறுத்தேன் என்றுநின்றான்
சிறந்தவலித் தன்சூலம் சென்றுவாங் கிடஏதும் சிந்தைசெய்வான்
அறங்கைகொடுத் தெடுத்தளிப்ப ஆதிநா யகன்தம்பி அமளிநீங்கி
உறங்கிஎழுந்தான்என்ன உணர்ந்தெழுந்தானுயர்வானத்தும்பர்வாழ்த்த

சினச்சீயம்எனஎழுந்து தீங்கிலாத்தேவர்படைதொடுப்பேன்என்னப்
புனற்செறிந்த மலர்கந்தம் புகைதீப முதலாய உபசாரங்கன்
மனத்தாலேவகுத்திந்த வஞ்சன்உயிர் கொண்டென்பால் வருதிஎன்று
வினைப்பாவிமேல்தெய்வவெங்கணையை வில்நாணில்தொடுத்துவிட்டான்

விட்டபடை சூலம்என வெவ்வூழித் தீஎன்ன விரிந்துபொங்கி
அட்டதிசை யும்பாரும் அருவரையும் அம்பரமும் தானேஆக
நட்டமுறும்உலகின்றே நாமினிப்போம் இடங்காணேம்என்றுவானோர்
கெட்டனர்கள்உள்நடுங்கிக் கேடில்நான் முகற்கினைய கிளத்தலுற்றார்

ஊழிக்காற் றொடுங்கூடி ஊழித்தீப் பரந்ததுல கெங்கும்என்ன
ஏழிற்பே ருலகெல்லாம் ஈன்றஇறை இவைவிளம்பும் எதிரிலாத
ஆழித்தே ரிலவணன்தன் ஆருயிர்கொள் வானுழி அண்ணல்தம்பி
பாழித்தோட்சத்துருக்கன் விடுதெய்வப்படைஇதுநீர் பதறல்என்றான் 57

பெண்உருவில்பாகன்பால்பெறுஞ்சூலம்பெருவலியால்தருமபாவம்
உண்ணிருமியாஅவுணன் உரம்உருவி உயர்வரைகள் உருவியோடி
மண்ணுருவி மண்ணரின்கீழ் மாநாகர் உலகுருவி மறித்துமீண்டு
திண்ணியதோட்சத்துருக்கன் செங்கையில்வந்நதந்திருந்ததெய்வ வாளி

விண்ணவர்பூ மழைபொழிய வேதியர்கள்ஆசிசொல வேலைசூழ்ந்த
மண்ணவர்கள்மகிழ்ந்தாட வள்ளல்இராமன்தம்பி மதுகைஎன்னும்
ஒண்ணகரி உட்புக்காங் கோவறுமா மணிச்சோதி ஒன்றாய்ஓங்கும்
திண்ணிலைப்பொன் மாடங்கள்கூடங்கள்கோபுரங்கள்தெரியக்கண்டான்

இலங்கும்ராமன்னகருமிந்திரன்தன்திருநகர்க்கும்எழில்கொள்சோதி
அலங்கல்மாமுடித்தனதன் அணிநகர்க்கும் இந்நகர்போல்அழகுண்டாமே
நலங்குலா வியஇந்த நகரியினை நாம்புகழ்வ தெங்கேயென்று.
தலங்குலவுபுகழுடையசத்துருக்கன் ஒளிமணிமண்டபத்தைச்சார்ந்தான்.

தையலர்பலாண்டிசைப்பச் சாமரங்கள்பணிமாறத் தாளம்ஓங்கத்
தெய்வஇன்னிசையினிமை செவிநுழைய மாகதர்கள்திரண்டுபோற்ற
மெய்யெல்லாம்ஆபரணம்விரிசோதியால்விளங்கவிண்ணோர்வாழ்த்தப்
பொய்யிலாஉள்ளத்தான்பொங்கணைமேல்வீற்றிருந்தான்பொலிந்துதோன்ற
23 இலவணன் வதைப்படலம் முற்றும்.

---

## 24. சம்புவதைப் படலம்

அன்னதன்மையனாய் ஆறிரண்டாண்டவ் அணிநகர் அரசுவீற்றிருந்து
தன்னெடும்படையையாங்குவைத்ததற்பின் தானையும்தலைவரும்தானும்
மன்னவன்இராமன் மலரடிபணிவான் வல்வினை எனும்விலங்கறுத்து
நன்னெறிகண்ட காட்சிவான்மீகி நலங்கொளாச் சிரமத்தைநண்ண.

வண்ணஒண்சிலைக்கைஇளையவன்தன்னைவரன்முறைபூசித்துநாங்கள்
எண்ணியஎண்ணம்முடித்தனைஎன்ன எழில்முனிஇயம்பஅவ்இரவில்
புண்ணியகதைகள்உரைத்தவைகேட்டுப் புலர்ந்தபின்பூம்பொழில்அயோத்தி
நண்ணியந்நகரிஎதிர்கொளப்புகுந்து நாயகன்திருவடிபணிந்தான்,

தன்திருவடிதாழ்தம்பியைஎடுத்துத்தடக்கையால்உயிர்உறத்தழுவி
வென்றிகொள்வீரன்விளம்புவான் உறங்கா வில்லிதன்வில்வலியாலே
அன்றிராவணற்கொன்றரும்பகைஅறுத்தோம்அலைகடல்சூழ்உலகுய்ய
இன்றிலவணற்கொன் றிப்பகைஅறுத்தாய் இனிஒருபகைஇலைஎமக்கே;

இன்னனபலவும் இளையவன்வலிமை இராப்பகல் இனிதுகொண்டாடி
தன்னருள்புரியும் தாமரைக்கண்ணால் தம்பிசத்துருக்கனை நோக்கி
நின்னெடும்படையும்அளவிலாநிதியும்அங்குவைத்திங்குநீஇருக்கை
நன்னெறி அல்லஎன் றுலகுக்கு நாயகன் போஎன நவின்றான். 4

தேனகுதுளபத்தார்திகழண்ணல் செப்பியசென்னிமேல்சேர்த்தே
மானபூடணனைவலஞ்செய்துபணிந்து மற்றைமுன்னோரையும்வணங்கி
ஆனகமுரசம் ஆதிகள்முழங்க அடல்பெருந் தானைதற்சூழ
வானவர்கோமான் மாநகர்ஒக்கும் மதுகைமா நகரியில்புக்கான்.

இளையவன்ஏக இராகவன்அயோத்தி இருந்தர சியல்புடன்ஆள
விளைபெருமுப்பன்வெள்நரைத்தலையான்வேதியன்தாரத்திஞேடும்
வளர்பெருந்துயரான் மரித்ததன்மகனை மடியிலேவைத்துயிர்க்கெல்லாம்
களைகணுய்உள்ள காவலன்கோயில் வாயிலில் கதறிடுங் காலை. 6

மைந்தனைஇழந்து மனமறுகுற்று மயங்கிய மறையவன் பார்ரி
இந்திரியங்கள் தன்னிலைகலங்கி இறந்தனள் இவள்என மடவார்
சிந்தைவெந்துயராய்நொந்துகைஅலைப்பச் சேயிழைஒருவணம்தெளிந்து
வெந்துயர்ஆற்ருள்விம்மிவெய்துயிர்த்துவேறுவேறின்னவைவிளம்பும்

*மணியே என்றன் மாசறு சோதி அழகுக்கோர்
அணியே என்றன் ஆருயி ரேஎன் அழகாஎன்
பணியே பன்ஞட் செய்த எனக்குப் பழிபாராய்
பிணியே தந்தாய் நீஇது வோநான் பெறுபேறே 8

முன்னைச் சென்மத் திட்டுடை யேனுய் முதல்வாநான்
உன்னைப் பெற்றுப் போற்றி வளர்த்தின் றுனைவிட்டேன்
என்னைப் போலப் பாவிகள் உண்டோ இணைஇல்லாப்
பொன்னைப் பெற்றுத் தப்ப முடிந்தேன் பொறிஅற்றேன் 6

பதங்களில் ஆர்க்கும் பன்மணி ஆர்க்கும் படிஇல்லாச்
சதங்கையும் ஒண்பொற் றண்டையும் அம்பொன் அரைநாணும்
விதம்பல வாகும் ஐம்படைட் யும்மெய் அழகெல்லாம்
பொதிந்த கழுத்தும் காரையும் எல்லாப் புனைபூணும் 10

பட்டமும் நெற்றிப் பன்மணி முத்தின் படர்சோதிச்
சுட்டியும் அம்பொற் ருேடும் இலங்கென் துணையேயோ
எட்டனை யும்சா வில்லவன் நாட்டுள் இடைவந்து
கட்டிசுழற்றிக் காப்பிடு வாரார் களிறேயோ, 11

மண்முறை சீரு மானமு மங்க வசைபூண்டோன்
கண்ணறை யன்கா குத்தன் எனுதிக் கடல்ஞாலம்
புண்ணுறை தீயில் புத்திர சோகந் தனையாற்றிப்
பண்ணறை நாய்தாய் செத்திலள் என்றே பழிசாற்றும். 12

என்னைக் கைவிட் டேகிய நீயோ எழில்மைந்தா
உன்னைக் கைவிட் டுன்னுடன் வாரா தழுக்நாஞே
தன்னைச் சொல்லிக் கூப்பிட ஏதும் தகவில்லா
மன்னர்க் கெல்லாம் மன்னவ ஞேஉள் வலியாரார். 13

ஒன்றுந் துன்பக் கொள்கலம் ஆனேன் உயிர்எல்லாம்
கொன்றுண் பாவிக் கூற்றுவன் என்னைக் கொடுபோகான்
வன்றிண் சிந்தை மன்னவன் என்ஞே வினைஉன்ஞன்
என்றென் றிவ்வா றேந்திழை யாளும் இடர்எய்த. 14

*வேதியனுந் தன்பாரி மேதினியில் விழுந்துகிடந் தலறும் அந்த
மாதுயர்கண் டாற்ருது மறுகியநெஞ் சினஞகி மாண்ட மைந்தன்
மீதுவிழுந் துரைமறந்து வெய்துயிர்ப்பொன் றில்லாது மயங்கிச் சாலப்
போதொடுங்கூ டத்தெளிந்து பொருமித்தன் வாய்விட்டுப் புலம்பல் உற்ருன்.

கன்னெஞ்ச ராயுள்ளோர் காளையரைத் தாம்இழந்து கதரு நிற்பர்
வென்னெஞ்சராயுள்ளோர் வெந்துயரம்பொறுக்கலார் விடுவார் ஆவி
என்னெஞ்சில் எரியூட்டி என்னை அறக் கைவிட்டாய் உன்னைப் போல
வன்னெஞ்ச ராருளரோ மைந்தனே உனைத்தொடர வருகின்றேனே.

தனக்குநோய் வேண்டாரி தான் சந்ததிபெற் றிடாதொழிக தளர்வுமிக்கு
மனத்துயரம் தான்பெருக மலடனுக்கின்றியான் படும்இம் மறுக்கம் இல்லை
எனக்குநீ செயஇருந்த இக்கடன் நான் உன்னிற்பின் இருந்து பிள்ளாய்
உனக்குநான் செய்யவே அஞ்சினேன் உனைத்தொடர வருகின் றேனே.

கண்ணிலான்பெற்றிழந்தான்எனஉன்னைப்பெற்றிழந்துகாந்திப்பொங்கும்
புண்ணில் நாராசத்தைப் புடைத்தனைய இத்துயரம்பொறுக்கலாற்றேம்
எண்ணிலாப் பெரும்பாவத் தெங்களுக்கு மகனுக என்னபாவம்
பண்ணினுய் நீமகனே பழிப்பற்ற பேரழகா பகர்ந்திடாயே. 18

தேசற்ற தீவினையேன் திருவுடையோர் பிள்ளைகளைப் பெற்று வாழ்வார்
ஆசைப்பட் டாவிதளர்ந் தருந்தவங்கள் செய்துநான் அனேகங்காலம்
ஏசற்றே னேசறவு கெடவந்தான் என்றிருந்தேன் எங்கே போனுய்
மாசற்ற மாமணியே மறுவற்ற வடிவுடையாய் மைந்தா என்றே.

தள்ளாடு மேனியனுய்த் தனையனைநான் இழந்தாவி தளர்கின்றேனைக்
கொள்ளாத கூற்றமே கொடுபோகாய் எனைஉனக்குத் தோழன்மார்கள்
உள்ளார்க ளொடுதெருவில் விளையாடி உடம்பலசி உறங்கினுயோ
பிள்ளாய்நீ எழுந்திராய் இதுஎன்ன பேருறக்கம் பேசிடாயோ. 20

கொஞ்சியஉன் சொற்கேட்டுக் குழற்குடுமியும் பின்னுங் கண்டுசால
நெஞ்சுகுளிர்ந்தினிதிருந்தேன் நெடுந்தவத்தோர்விதிமுறைநின் அரையிற்கட்டு
முஞ்சியும்அக் கோவணமும் முப்புரிநூலும்தோளும் இலங்கத்தோன்ற
வஞ்சனேன் மைந்தாநீ மறையோதிவரக்காணேன் வாழ்கிலேனே.

தராதலத்தின் இதற்குமுன்பு தந்தைக்குமுன் தனையர் மரித்தார்இல்லை
புராதனத்தில் இல்லாத புத்திர சோகத்தாலே புலம்பும் இந்தப்
பிராமணிக்கும் பிழைப்பரிது பெரும்பீடையால் யானும் பிழைக்கமாட்டேன்
இராமனுக்குப் பழியாகஇறக்கின்றேம் இருவோரும் என்னுங்காலை

விழுகண்ணீர்மெய்நனைப்ப வேதியன் தன்பாரியொடும் விம்மிவாய்விட்
டழுகின்றகாரணமும் அருமகனைஇழந்தரந்தை பொறுக்கலாற்ருர்
மொழிகின்றவாசகத்தின் கொடுமைகளும் இவையெல்லாம்முழுதுங்கேட்டுக்
கழிகின்ற நெஞ்சினனுய்க் கையறவு பட்டிருந்தான் கமலக்கண்ணன்.

மந்திரிகள்தமைக்கூவி மற்றவரும்தம்பியரும் தானும் வாயில்
வந்திருந்துபுலம்புகின்ற மறையவர்க்கு மறுமாற்றம் சொலமாட்டாது
நொந்திருந்தகாலை மறைநுண்பொருள்கொள் நாரதனேமுதலாயுள்ள
இந்திரிய சித்தாகும் இருடிகணம் எல்லாரும் இமைப்பில்வந்தார்.

வந்தவரைஅடிவணங்கி வரன்முறையால்பூசித்தங்கிருந்தமன்னன்
சிந்தையில்வெந் துயர்அறிந்து செழுமறைநாரதமுனிவன் இனையசெப்பும்
இந்தஊனதி ராச்சியத்தில் இதுக்குமுன்பில்லாத தின்றுண் டாயதிந்த
அந்தண புத்திரன்மரணம் அதுவந்த காரணம் நீ அறிவாய்என்று.

மாசிலாப்பெரும்புகழோய் தருமத்தின் வகைகேட்டி வருணதன்மம்
ஆசிரமதன்மம் வருந்தரும முதலானஎலாம் அமையச் சொல்லும்
காசில்குலத்தன்மமொடு பொதுதன்மம்ஆம்என்னக்கழறினோர்கள்
பேசியஇத் தன்மத்தின் முதல்வருண தன்மத்தைப் பேசக்கேட்டி.

புண்ணியஞ்செய்மனத்தராம் பூசுரர்தன்மஞ் சுருதிபுகன்ற யாகம்
பண்ணுதல்பண்ணுவித்தல் பழமறையோதல்ஓதுவித்தல் பரந்தநன்னூல்
கண்ணியதானங்கொள்ளல்கொடுத்தல்எனக் கட்டுரைத்தல்காவல்வேந்தர்க்
கெண்ணியதன்மங்கொடுத்தல் யாகம்பண்ணுதல்ஓதல்என்னச்சொன்னார்

கோத்திரத்துக்கிருஷிகோபாலனம்வாணிபம்கூறில்வணிகர்தன்மம்
சூத்திரர்க்குத்தன்ம மவர்சிச்சுருடை என்றுரைப்பர்அதுசெய்யாது
காத்திரத்தை அறஉலர்த்தித் தலைகீக்காய்க்கால்மேலாய்த் தனக்குவந்த
சாத்திரத்திரத்திற் சொல்லாத தவன்செயாநின்றனனஞ்சாதி தென்றான்.

அக்கிரமம் செய்தாரை விதிமுறையேதண்டியா அரசன் நாட்டில்
எக்கிரமங்களுங்கலங்கி மழைகுன்றும் இருந்தவத்துக்கருகனல்லோன்
உக்கிரமாம்தவம்செய்கைகாரணமாய் இம்மரணமுண்டாய்த்தென்ன
விக்கிரமவான்மனத்தில்வெந்துயரம் விட்டினையோற்கினையசொன்னான்

நெஞ்சிடைவெந்துயர்ஆற்றுப் பாரியொடும்மறையவனைநீபோய்தேற்றித்
துஞ்சியமைந்தனைத்தயிலத் தோணியிலேஇடுவித்தி என்னச்சொல்லிக்
கஞ்சநயனன் அக்கனிவாய்க் கார்வண்ணன் கதிரவன்தன் ஒளியில் காட்சி
விஞ்சியசீர்ப் புட்பகத்தின் மிசைஏறி மேல்திசையின் விசையில் போனான். 30

குடதிசையும் வடதிசையும்குணதிசையும்குறிக்கொண்டுநாடிப்பின்பு
திடமிசையும்காகுத்தன் தென்திசைமேல்மாதவனைத்தேடிச்செல்வான்
புடைபரந்து புண்டரிகப்பூவணைமேல் பேடையொடுமன்னம்வைகும்
தடமருங்கு கால்மேலாய்த்தலைகீழாய்த்தவம்செய்வோன் தன்னைக்கண்டான்

சிறைவாவல்தூங்குகின்ற தெனத்தூங்கு மவன்றன்னைச்சென்றுகண்டு
குறைவாத பேரழகுக் கொண்டல்நிறக் கருணைநெடுங் குரிசில்கூறும்
மறையோனோமன்னவனோ வைசியனோ சூத்திரனோ வாக்கால் பொய்மை
பறையாதிங் குள்ளபடி தான்எல்லாம் பகர்தியென அவனும் பன்னும்.

தும்பிமலர்த்தொடையலினாய் சூத்திரவர்யோனியினில் தோன்றிஉள்ளேன்
சம்புகன்என்னப்படுவேன் தவஞ்செய்யுங்காரணம் நான்சரீரத்தோடும்
உம்பர்உறை பொன்னுலகம் உறஎன்றான் உடைவாளை உருவிஓச்சி
கம்படியில் விழஎறிந்தான் கருமுகில்போல் திருமேனிக்கமலக் கண்ணன். 33

விண்ணவர்பூ மழை பொழிய வேதியர்ஆசிகள்கூறி வேலைசூழ்ந்த
மண்ணதனில் நிகழ்வருண தருமத்தை வரம்பழித்து நின்கை மாண்டோன்
புண்ணியம்செய்தோர்நண்ணும் பொன்உலகம்புக்கானப் புரைதீர்நின்னுட்
கண்ணியதோர்வரம்வேண்டிக் கொள்என்னக் கார்மேனி வண்ணன்கூறும்

மறுகுபெருந்துயருடைய மறையவன் சேயைத்தவத் தின்மாண்டோன்ஆவி
பெறும்வகை வேண்டுவன்என்னப் பெருந்தவத்தோன்படஆவி பெற்றான்
செறிவலிஇந் திரனாதி தேவர்களும் சீதரனும் தீய பாவம் (என்னக்
குறுகரிய மாதவரும் குறுமுனிவாழ் தவவனத்தைக் குறுகினரால் 35

மறமுனிநல்அறமுன்னுவாளவுணர் மழுஎறிந்துகொல்வோர் நாசம்
உறமுனி ஞாலம்பிழைப்ப ஒருகுடங்கையால் வேலைஏழும் உண்ட
அறமுனிவன்ஆச்சிரமம்அணுகினார் அடல்அரக்கன்தலைஈரைந்தும்
இறமுனிவெஞ்சிலையோனும் இந்திரனேமுதலாயஇமையோர்எல்லாம்.

வாசவனேமுதலானோர் மாதவத்தோன் விதிமுறையேமகிழ்ந்துசெய்த
பூசனைகொண்டாங்கவர்கள் பொன்னுலகில்போயதற்பின்புரைதீர்உள்ளக்
கோசலநாடன்குணங்கள் கொண்டாடிப்பூசித்துக் குசலவார்த்தை
பேசிஇனிதிருந்ததற்பின்பெருந்தவத்தோன்தான்இதுவேசொல்லும்
[பின்னும்.

*கொற்ற வில்லி தனது கொடுத்தலின்
மற்றொ ருத்தன் மகிழ்ந்து கொண்டாடிடப்
பெற்ற தீகை பெரும்பல பாத்திரம்
உற்ற போதென ஓதினர் வேதியர். 38

வான வர்க்கன்றி மண்ணுல கத்துவாழ்
மான வர்க்கும் வகுக்க ஒண்ணாதது
தான வப்பகை ஆகிய சார்ங்கநீ
ஆன தற்பின் உனக்கணி யாவது. 39

நீடு மாநிலத் தில்லது நீண்மறை
பாடு பங்கயத் தோன்உல குள்ளது
தேட ரும்சுடர்ச் செம்மணிப் பூணிது
கோடி என்று கொடுத்தனன் கோதிலான். 40

அந்த ஆபர ணங்கண்ட ஆழியான்
உந்து தீவினை யோய்முன் புனக்கிது
தந்து ளோன்றனைச் சாற்றெனத் தன்னிடை
வந்த வாறந்த மாமுனி கூறுவான். 41

விரிந்த தானை விறல்அரக் கன்தலை
பருந்தும் நாயும் கவர்ந்திடப் பண்டுபோர்
புரிந்து ளோய்முன் புகுந்தது கேட்டியான்
அருந்த வஞ்செய்ய ஆம்இடம் தேடுவேன். 42

சிங்கம் ஆதி திரியக்கி யோனிகள்
தங்கி டாததைச் சார்பு ளிலாததை
எங்கு மானிடம் இல்லாத தெய்தினேன்
அங்கு மானிட மில்லா அடவியை. 43

அன்ன கானகத் தம்புயப் பூவணை
அன்னம் பேடையொ டன்போ டுறங்குவ
தந்ந தங்கள் தழுவிய தாழ்கடல்
அன்ன பூந்தடம் பொய்கைகண் டேன்அரோ. 44

ஆய பொய்கை மருங்கிடை யாரும்இல்
தூய ஆச்சிர மங்கண்டு துன்னிருள்
மேய அல்லதில் தங்கி விடிந்துமா
காய மாய ஒருசவங் கண்டனென். 45

அன்ன காலை அரம்பையர் ஆடிட
மன்னு மாதவர் சூழ்தர மாகதர்
துன்னி ஏத்திடத் தும்புரு நாரதர்
என்னப் பாடுவர் எங்கணும் ஆடிட. 46

இந்தி ராதி இமையோர் வியந்திட
வந்து தோன்றினன் மாமணித் தேரின்மேல்
அந்தரத் தோர் புமானத் தேரினின்
இந்த மண்ணில் இழிந்திது செய்தனன். 47

சார வந்தச் சவத்தினை தன்வயி
றூர உண்டுபோய்ச் சந்தணி பொய்கையில்
வாரி மொண்டு குடித்துவாய் பூசிநல்
தேரில் ஏறப் புகுதலும் சென்றியான். 48

தேவ இச்சவந் தின்றிடக் காரணம்
நீவி ளம்புதி நின்பெயர் ஏதுநீ
யாவன் என்ன எழின்மணிப் பூணினோன்
பாவ நாச எனக்கிவை பண்ணினன். 49

*துங்கவரைத்தோள் வைதர்ப்பன் சுவேதன்என்போன்தொல்லுலகில்
தங்கும்உயிரை ஈன்றெடுத்த தாய்போல்வளர்த்தோன் தனக்குரிய
மங்கைமாரில் மூத்தாள்தன் வயிற்றில் வந்தேன் சுவேதன்என
எங்குநிகழ் பேரினன்இளையாள் ஈன்றாள் சுரதன் என்போனே. 50

எந்தை வானம் எய்தியபின் ஈரைஞ் ஞூறுண் டெறிகடல்சூழ்
இந்தஞாலம் இனிதாண்டங் கெல்லாப்பகையும் அறுத்தென்பின்
வந்தசுரதற் கரசளித்திவ் வனத்தில் மூவா யிரத்தாண்டு
சிந்தை ஒருங்க அருந்தவங்கள் செய்து காலத் தினைஅடைந்தேன்.

இந்த வனத்தின் நெடுங்காலம் யான்செய் தவத்தால் எய்தரிய
அந்த ஞளன் பேருலகம் அடைந்தும் அருந்தா கமும்பசியும்
வந்து நலிய மழை வண்ண மாயோன் தனது திருஉந்தி
தந்த மலரோன் தன்னுடைய தாளில் வணங்கி இவை சொற்றேன்.

பெறுதற் கரிய இவ்வுலகம் பெற்றும் பெருந்தா கமும் பசியும்
உறுதற் கென்ன காரணம்நா னுண்ப தேதென் றிடநெஞ்சில்
இறுதற் றனத்தால் இரப்போருக் கிட்டுண் ணுதே உன்வயிறும்
பறியைத்தூர்த்து வளர்க்கையினுல் பசிநோயுன்னைப்பற்றியதால்.

பன்னுமறையின் பொருள்தெரிந்து படைப்போன் பின்னும்இவை
பின்னர்உதவார் அவ்வனத்தில் பிணத்தை உண்டுபசிதீரத் [பகரும்
தின்னமாளா ததுவளரும் சென்று தின்னிற் குண்டமுனி
தன்னைக்கண்டால் உன்பசிநோய்தாகம்போகும் எனஉரைத்தான்.

அன்று துடங்கி இன்றளவும் அசுத்த மான இப்பிணத்தைத்
தின்று திரிந்தேன் என்பசியைத் தீர்த்தி எனநான் தீர்களன
நன்று பிழைத்தேன் எனஉவந்திந் நல்லா பரணம் எனக்கீய்ந்து
வென்றி வீர விமானத்தின் விண்ணோர் சூழ அவன் போனான். 55

இன்ன தாய ஆபரணம் என்பால் வந்த வழிஎன்று
பன்னு வேத மாமுனிவன் பகரப் பரமன் வியப்பெய்தி
மன்னு மிருகம் பறவைநரர் வழங்கா தொழியல் இவ்வனத்தில்
என்னித் திறத்தை அறியஎனக் கியம்பென் றியம்ப முனிஇயம்பும்.

தண்டன்என்போன் மனுகுலத்தோன் தருமம்தயா ஒன்றில்லாத
மிண்டன் அவன்தன்புரோகிதனும் வெள்ளிதவஞ்செய்வனம்நண்ணி
வண்டு பயில்பூம் பொழில் இடத்து வளர்சீர் அந்த முனிமகளைக்
கண்டு காம பரவசனுய்க் கலங்கு நெஞ்சன் கருதுவான். 57

செந்தா மரை மேல் திருமகளோ தேவருலகி னிழிந்து புவி
வந்த தெய்வ மடமாதோ மண்ணில் பிறந்த மணிவிளக்கோ
அந்தா மரைபோல் முகத்தினள் ஆரோ அறிகி லேன்என்று
சிந்தா குலமாய்த் தேர்மன்னன் பின்னும் இனைய சிந்தித்தான்.

பஞ்சி அடியோ அணிதுறங்கோ பழிப்பிலாத்தேர் அல்குலோ
வஞ்சிஇடையோ வனமுலையோ தோளோகமுத்தோ மதிமுகமோ
நெஞ்சு கவர்ந்ததது தரள நிரைத்த பவளச் செவ்வாயோ
நஞ்சு கலந்த வேல்விழியோ நறுமென் குழலோ அறியேனே. 59

என்று கலங்கி யவள்பால்வந் தெழுத அரிய வடிவுடையோய்
ஒன்று தவத்தால் உனைப்பெற்றேன் பேரோ டுன்பேர் உரைஎன்ன
வென்றிவேற்கண் ணிவைவிளம்பும் வெள்ளிமகள்நான் மேதினியில்
நின்ற புகழோய் சரைஎன்ன நிகழும் என்பே ரெனஉரைத்தாள்..

கல்லில் செறிதிண் புயவேந்தன் காம சரத்தா லேவுண்டு
புல்லுக்கவ்வி மான்தோற்கப் பொருவேல்விழியைப் பொதும்புகலில்
சொல்லுக்கஞ்சிக் கிளிஒளிக்கும் துடிநேரிடையைத் தொழுதிரந்து
புல்லச் சென்று புகவந்தப் பூவைநடுங்கி யிவை புகன்றாள். 61

எந்தைசீறில் எவ்வுலகும் இமைப்பில்பொடியாம் என்உரைகொண்
டிந்த இடத்தில் நில்லாதே இப்போ தேநீ ஏகென்ன
அந்த அளவில் சொல்கொள்ளா தன்ங்க சரத்தால் ஆவிசுட
வந்து மடவாள் குழல்பற்றி வலியில் புணர்ந்தங் கவன்போனான்.

அன்னதீ யோன் ஏகஅவள் அலக்க ணோடும் ஆச்சிரமம்
துன்ன மிகுவெம் பசியோடுந் தந்தை தோன்றித் தூய்மொழியை
உன்னை இடர்செய் தவரைநீ உரைத்தி என்ன ஒளிதிகழும்
பொன்னின் மணிகள் பொலிந்திலங்கும் பூணாள் புகுந்த படிபுகல.

அந்த வெள்ளி அனல்என்ன ஆலகால விடம் என்னச்
சிந்தை எழுந்த பெருங்கோபன் தீரா இடும்பை என்மகட்குத்
தந்த தண்டன் வளநாடுந் தானும் கிளையுந் தந்திரமும்
வெந்து பொடியாய் வீழ்கஎன எல்லாம் பொடியாய் வீழ்ந்தனவே.

அவன்தன் நாடு தண்டகமாம் அடவி ஆகி ஆரழலில்
சிவந்தவெள்ளி சாபத்தால் நரர்புள் மிருகம் சேர்வின்றித்
தவம்செய்முனிவர் நெருங்குதலால் சனத்தானமெனப் பேர்பெற்ற
துவந்து கருணை பொழிகாரே உற்ற திதுமுன் பெனஉரைத்தான்

குண்ட முனிஇவ் வகைகூற வெய்யோன்குடபாற் கடல்குளிப்ப
பண்டை மறைநூல் விதித்தவிதிப் படியே அந்தித்தொழில் முடித்து
வண்டுண்ணுந்தேன்துழாய்முடி யோன்மறைமா தவத்தோனொடுதுயில்கொண்
டெண்டி சாமண் டலமூடு மிருள்நீங்குதையத்தெழுந்திருந்து. 66

சந்திதொழுதத் தவத்தோன்தன் சரணஇணைகள் தாழ்ந் திறைஞ்சி
அந்த முனியா சிகள்கூற அம்பொற் றேரின் மிசைஏறிச்
சிந்தை உவந்து கோடிக்கத் தெருவு தோறும் அலங்கரித்து
வந்து நகரி எதிர்கொள்ள வள்ளல் அயோத்தி நகர்புகுந்தான். 67

24. சம்புவதைப்படலம் முற்றும்.

---

## 25. யாகப்படலம்

* மாத்திரைக் கடல்மண் ணோரை மனுமுதல் ஆய தன்மர்
சாத்திரப் படிதப் பாமல் சரிப்பித்த குணத்தி ராமன்
நேத்திர வரையில் நேரும் நெடுநிலை வாயில் காக்கும்
வேத்திரக் கரத்தோன் தன்னை விளித்திவை விளம்பல் உற்றான். 1

எம்பியர் தம்மை இன்னே கொணர்கென இயம்ப அந்த
அம்புயக் கண்ணன் ஏவல் ஆங்கவன் தலைமேற் சூடி
எம்பிரான் இராமன் உம்மை அழைத்தனன் எனவே அந்தத்
தம்பியர் தவிசி னின்றும் தாம்விரைந் தெழுந்து போந்தார், 2

தாமரைப் பெருங் கானத்துத் தையலோ டுறைந்த செய்ய
தாமரைத் தடங் கணுரைத் தண்ணுறுந் துளபப் பச்சைத்
தாமரைக் காணும் ஆசை தள்ளிடத் தம்பி மார்கள்
தாமரைக் கணத்தின் வந்து தாழ்ந்தினி திருந்த வேலை. 3

அன்னதன் மையரை அண்ணல் அருட்கணால் குளிர நோக்கி
என்னுயி ரனைய உம்மால் ராசசூ யஞ்செய் வோமாய்
உன்னினம் என்ன லோடும் உறக்கநீத் திரேழ் ஆண்டு
தன்னைமுன் காத்த வென்றித் தடஞ்சிலை வீரன் கூறும், 4

சொற்பொருள் தெரியா மைந்தர் சொல்லிய குதலைச் சொற்கள்
பெற்றதாய்க் கினிய வாகும் பெற்றிபோல் பெருகுஞ் சொல்நூல்
கற்றறி வொன்றும் இல்லேன் கழறிடும் இந்தப் புன்சொல்
கொற்றவா இன்சொல் லாகக் கொளவேண்டும் என்றுகூறும். 5

பொன்னையே நோக்கி நிற்பர் பொதுவிலை மகளிர் மாரி
தன்னையே நோக்கி நிற்கும் தரணியில் பைங்கூழ் தந்தம்
அன்னையே நோக்கி நிற்கும் அரும்பெறற் குழவி அண்ணல்
நின்னையே நோக்கி நிற்பர் நீள்நிலத் தோர்கள் எல்லாம். 6

அன்றியும் அரசர்க் கெல்லாம் ஆவிநீ அவர்க ளோடு
கன்றிநீ பொருது வென்றக் காவலர் தனங்கள் வாரி
இன்றுநீ இராச சூயம் செய்வதில் இறைவ சால
நன்றய மேதஞ் செய்கை யதன்நிலை நவிலக் கேட்டி. 7

சத்திஐம் புலன்கள் வென்ற தபோதனன் ததீசி நாதன்
அத்தியாங் குலிசத் தாலே அடல்விருத் திரனைக் கொல்லத்
தொத்திய பாவத் தாலே துளங்கிய சுரேசன் பண்டு
சுத்தன்தான் ஆனான் பண்டு துரகமே தத்தால் என்றான். 8

கொற்றவ னிளன்முன் சூலி சாபத்தால் கொம்ப னாளாய்
மற்றவன் தேவி வாக்கால் மைந்தனாய் மாறினான் அப்
பொற்றொடியாம் இளன்றான் புதனுக்குப் புரூர வாவைப்
பெற்றபின் சாபம் நீங்கப் பெற்றதும் அயமே தத்தால். 9

ஆதலால் அயமே தத்தை அழகிதென் றிருந்தேன் செய்கை
தீதிலாக் குணத்தோய் என்று செப்பஉண் மகிழ்ந்து செப்பும்
ஆதியர் அண்டகோடி முட்டையிட் டளவில் வேதம்
ஓதிய அன்ன மாய தன்னைத்தான் உணர்கி லாதான். 10

வளைபயில் கடல்சூழ் மண்ணில் மன்னரைச் செருவில் ஓட்டி
உளைவன செய்யும் வேள்வி ஒழித்தனம் உணர்ந்து பார்த்து
விளைபொருள் உணர வல்லோன் விளம்பிய அயமே தத்தின்
அளவறு பெருமை கேட்டோம் அதனையே செய்தும் என்றான். 11

சந்திரன் அனைய கொற்றத் தனிக்குடை நிழற்றப் பாரின்
இந்திரை கொழுநன் நல்ல இலக்கணம் உடைய மாவை
மந்திர வித்தோ ராலே மந்திரிப் பித்து மாவைத்
தந்திரங் காக்க என்று தரணியில் போக விட்டான். 12

சிந்தையால் அயமே தத்தைச் செய்வதாய் நினைந்தேன் சீரார்
அந்தணர் எனக்குத் தெய்வம் ஆதலால் அகத்தி யாதி
நந்தலில் தவத்தோர் எல்லாம் நைமிசா ரணியந் தன்னில்
வந்தது முடித்துப் போக வருகஎன் றழைத்து விட்டான். 13

நன்னெறி வேள்வி காண நைமி சாரணியந் தன்னில்
இன்னநாள் வருக என்றுங் கிலங்கைமன் னவற்கும் ஆவி
அன்னசுக் கிரீவனுக்கும் அனுமற்கும் அடல் மன்னர்க்கும்
செந்நெறிக் குகற்கும் அண்ணல் திருமுகம் செல்லவிட்டான். 14

❊பொருதிரைக் கடலின் நீரும் புண்ணிய நதியின் நீரும்
தருகநீ ரென்று செய்ய தாமரைத் தடங்க ணான்தன்
துரகமே தப்பேர் வேள்வி துடங்குநாள் இன்றே டேழு
சரதமாம் என்று நாடும் நகரமும் சாற்றச் சொன்னான். 15

மந்தரம் மத்த தாக வாசுகி கயிற தாகச்
சந்திரன் தூண தாகத் தடங்கடல் தாழி யாகச்
சுந்தரத் தோளினாலே சுதைஎழக் கடைந்த தூயோன்
இந்திரன் பகைவற் கொன்ற இளையவற் கினைய சொன்னான். 16

சீலமா தவரும் நாமும் சிறந்த ஓமங்கள் செய்யச்
சாலையும் அனுமானுக்கும் சவரர் கோனுக்கும் சார்ந்த
மாலை தாழ்முடி மன்னர்க்கும் வானரப் படை வேந்தர்க்கும்
கோல வீடணற்கும் மாடங் குறைவறச் சமைப்பி என்றான். 17

நன்றென அவன் போந்தந்த நைமிசா ரணிய நண்ணி
ஒன்றிய பலவேர் கட்டி உழுதொத்த நிலஞ்செய் வித்துத்
தன்துணை ஒக்கும் வேள்விச் சாலையும் சமைப்பித் தோங்கும்
குன்றுறழ் மாட கூட கோபுரம் சமைத்துப் பின்பு. 18

மணிமுடி மன்னர்க் கெல்லாம் மாட கூடஞ் செய்வித்தும்
அணியுடைச் சேனைக் கெல்லாம் அகம் சமைப்பித்து வந்தோர்
தணிபெறும் சோற்றுச்சாலை சார்ந்தவர் விடாயும் ஓடத்
தணிநறுந் தண்ணீர்ப் பந்தர் முதலெல்லாம் சமைக்கப் பண்ணி.

ஆவண வீதி தோறும் அணிபெறக் கமுகும் தெங்கும்
தூவணக் கொடியும் நாட்டித் தோன்றுதேர்ன் றிடங்கள் எங்கும்
காவண மாக விட்டுப் பின்னை அக் கலங்கா ஆற்றல்
ஏவணச் சிலையோன் வந்தங் கிராமனுக் கினைய சொன்னான். 20

அமைந்தது யாகசாலை அண்ணலே உனக்குக் கோயில்
சமைந்தது தார்மன்னர்க்கும் தக்கவா சமைந்த தென்ன
நமன்றம ராகினார்பால் நண்ணிடா நாம னாகம்
சுமந்தபூ பாரந்தீர்த்த தூயவன் ஈது செய்தான், 21

ஆயிர கோடி கோடி அளப்பரி தாய கோவும்
ஆயிர கோடி பாரம் அரிசியும் பயறும் எள்ளும்
ஆயிர கோடி பண்டி கறிகளு மிளகு நெய்யும்
ஆயிரம் பெயரோன் பொன்னின் பாவையும் அடங்கக் கொண்டு

பரதனும் பதினா லாண்டு பகல்இரா உறக்கந் தீர்ந்த
விரதனும் முன்பே போக விடைகொடுத் தவரைப் போக்கி
சுரர்தன மாய வேள்வி துடங்குநாள் இன்றோ டேழு
த்ரமுறு நாள தென்று தனிமுரச றையச் சொன்னான். 23

வென்றிகொள் இராமன் வேள்வி துடங்கிட விதித்த நன்னாள்
இன்றொடும் ஏழுநாள் என்று எறிபறை அறையக் கேட்டுக்
குன்றுயர் செம்பொன் மாடம் குலவிய நகரும் நாடும்
ஒன்றிய கடல்கள் என்ன ஒலியது பெருக்கிற் றன்றே. 24

*குறைவொன் றில்லாக் கோசல நாட்டுச் சனம்எல்லாம்
இறைவன் வேள்வி காண விரைந்தே எழுவாரும்
நிறைதெங் கும்பூ கங்களும் நீள்வா ழைகளுங்கொண்
டுறைசீர் மாடத் தொண்ணக ரஞ்சென் றுறைவாரும். 25

கேது விளங்கும் பூங்குலை வாழை கிளர்செம்பொன்
சோதி விளங்கும் தோரணம் எங்கும் நடுவாரும்
வீதிகள் தோறும் வெண்மணல் எங்கும் விடுவாரும்
வேதிகை மாடம் வாயில் விதானித் திடுவாரும். 26

சாலை அமைத்துச் சால்கள் பதித்து தரைஎங்கும்
கால்கள் நிரைத்துக் காவண மிட்டு மணல்விட்டு
மேலொடு செம்பொற் பட்டின் விதானித் திடுவாரும்
வால்ஒளி முத்தின் தாம நிரைத்து மகிழ்வாரும். 27

சாலைகள் தோறுங் கோவலர் நெய்பால் தயிர்வெண்ணெய்
கோல நெடுங்கா விற்கொணர் வாரும் குறைவற்ற
வாலரி சித்திண் பெட்டிகள் கொண்டு வருவாரும்
மூல பலங்கள் காய்குள முற்கந் தருவாரும். 28

வண்டார் ஐம்பால் மங்கையர் கண்ணும் மனமுந்தாழ்
தண்டார் நாதன் சாலைகள் தோறும் சவம் வந்தங்
குண்டார் உண்டு மிக்க கலச்சோ றுயர்வெற்பிற்
கண்டார் கண்டார் கண்டிடம் எங்கும் சொரிவாரும். 29

வந்த வரைத்திண் மாநக ருள்ளோர் மகிழ்வுற்றுத்
தந்த மனைக்கே கொண்டு புகுந்த சனம்எல்லாம்
சிந்தை உவப்பச் செய்தினி தூட்டித் திகழ்சீதச்
சந்தனம் அப்பித் தண்ணுறு பூவும் தருவாரும். 30

சூதன கொங்கைச் சோரும் இடைச்செந் துவர்வாய்ஒண்
பேதையர் நெஞ்சம் பின்செல வன்பில் பிரிவோரை
வாதை செயும்போர் மாரனும் அஞ்சும் வடிவோர்மா
வீதிகள் தோறும் வார மிகைத்து மிடைவாரும். 31

கோழிப் போரும் கொண்ட சினப்போர்த் தகர்முட்டும்
பூழ்விட் டஞ்சிப் போகுதல் அன்றிப் பொருவோரும்
பாழித் திண்தோள் வீரர் பகற்கண் டிரவெல்லாம்
வீழிச் செவ்வா யார்கல விப்போர் மிகுவாரும். 32

கொஞ்சு கிளிச்சொற் கோப இதழ்த்தாழ் குழலார்தம்
கஞ்ச மலைக்கோ லஞ்செய் துகொண்டா டத்தாழ
விஞ்சொளி நற்பூண் மேனி விளங்கப் புனைவாரும்
பஞ்சி னடிக்குப் பல்லணி எல்லாம் அணிவாரும். 33

படர்ந்திருள் கேசப் பார மதிற்பன் மலர்பெய்து
தடந்திகழ் கொங்கைச் சந்த மணிந்து தகவில்லோர்
வடந்திகழ் முத்தின் கோவை அணிந்து வலியின்றி
நுடங்கும் இடைக்குண் ணேவுக ளேசெய் திடுவாரும். 34

ஆளிய ணுர்தம் ஆருயிர் கொள்வான் அணிகைக்குக்
கோளுறு முத்தக் கோவை குலைத்துத் தெரிவாரும்
காளையர் நெஞ்சம் கொள்ள மனத்தில் கறுவிக்கண்
வாள்களி னுள்ளே மைஎன வேநஞ் சிடுவாரும். 35

மென்னுரை நுண்பட் டாடையின் மேல்அவ் விரைசோதிக்
கன்னிரை பைம்பொற் காஞ்சி அரைக்குப் புனைவாரும்
பொன்னுரை கல்லில் பொற்பொடி யாடிப் புனையாழ்போல்
இன்னுரை நல்லோர் தம்எழில் கண்டுண் மகிழ்வாரும். 36

வள்ளல் இராமன் வந்தில னேவந் தானேஎன்
றௌளிழை யாரை வீதியில் ஓட விடுவாரும்
கள்ளவிழ் கோதைக் காரிகை யாரவ் வழியாகப்
பள்ளிகொள் ஆழிப் பைவிரி நாகப் பரனிப்பால். 37

*அரக்கர்கள் குலத்தினை அறுத்த அடல்வீரன்
நெருக்கினில் நடப்பரி தெமக்கென நினைந்து
செருப்புரி எதிர்ப்படை அடல்சினவு வாளால்
முருக்கிய கடல்படையை முற்செல உரைத்தான். 38

குன்றனைய தேர்புரவி கும்பியொடு கூர்வேல்
வென்றிபுனை வீரர்நெடு வீதிதொறும் விம்மிப்
பின்றும்என முன்பில்அவர் பேரவழி காணார்
நின்றபடி யேயவர்கள் நின்றனர் நெருக்கால். 39

ஒன்றிய பெரும்படை கருங்கடல் உடைந்த
தென்றுசொல லாகும்வகை வாயில்தொறும் ஏகித்
துன்றிஎழு தூளிபட லந்திசையை மூடத்
தென்திசையின் மேல்இனிது சென்றது பரந்து. 40

வெம்பிய மனக்கனல் விழித்துணைய முட்கால்
அம்புய நிறத்தினன் முகத்தன வசைக்கும்
கம்பமுறழ் கைக்கறை யடிப்பிறை மருப்பிற்
கும்பிகண் மலைக்குவ டெனக்கடிது போன. 41

ஓய்வில்விசை யோடுகடல் ஓடிடு கலம்போல்
மேயதிரை வெண்குடை நுரைச்சுழிகள் பாயப்
பாய்திரை யுடைப்படர் படைக்கடலின் உள்ளே
போயது விசும்புறு பெருங்கொடிய பொற்றேர். 42

கலின்கலின் எனுங்கவின் விளங்கு கனகத்தார்
பொலன்கொள்புனை பூண்டபுரை தீர்குருவி னேவல்
விலங்குதலி லாதவரின் மேல்வருதம் நர்தன்
புலன்செல்வழி யாகவழி போம்பரிகள் போன. 43

எடுத்ததழை சத்திர மிடத்த அடையாளக்
கொடித்திகழ் தரக்கொலை அயில் கொலைஞர்சுற்றக்
கடற்படை செருப்புரி களத்தவிய ஒன்னார்
படச்சிலை வளைத்தவர் படைத்தலைவர் போனார். 44

இறந்தகரு மங்கொடு வருங்கருமம் எண்ணிச்
சிறந்தஅர சன்கரும நாடியது செய்வோர்
அறந்தழுவு நெஞ்சினர்கள் அஞ்சலர் கொடும்பொய்
மறந்துமொழி யாதவர்கள் மந்திரிகள் போனார். 45

பூசுகமழ் சாந்தினர் புனைந்ததிகழ் பூணோர்
மாசற விளங்கமணி ஆரமணி மார்பர்
தேசுடைய வில்லிதிரு வேள்வியது காணும்
ஆசையின ராய்விரைவின் ஆடவர்கள் போனார். 46

கஞ்சமலர் விஞ்சுகவின் மிஞ்சிய முகத்தோர்
கொஞ்சுகிளி மென்சொலினர் கொங்கைகள் சுமந்தே
வஞ்சியிடை நுண்ணிடை வருந்தவழி காணார்
மஞ்சர்கள் மனங்கவரும் மங்கையர்கள் போனார். 47

மத்தளம் இடக்கைதம் மருங்குவர வானத்
துத்தமை உருப்பசியும் உட்கும் உருவத்தோர்
சித்திர மணிச்சிவிகை யேறரசரைத்தம்
அத்திர விழிக்கொலைசெய் தாடுமவர் போனார். 48

தங்குவிழி யஞ்சியுழை தன்னினமொ டோடப்
பைங்கிளிசொல் அஞ்சிஇன மோடவை பறப்ப
அங்கண்மயில் சாயல்தனை அஞ்சிஅக லச்சீர்
பொங்குபுனை பூண்முலையி னார்கள்சிலர் போனார். 49

மண்ணின்மறு வற்றொளிர் மணிச்சிவிகை மேலே
நுண்ணிசையி லேமன நுழைந்திசையி னுண்ணூல்
நண்ணியவர் தும்புருவு நாரதரு நாணப்
பண்ணிசை கலந்தவழி பாடுமவர் போனார். 50

குண்டிகையர் குந்துநடை யோர்கள்குடை யோர்கைத்
தண்டினர் தரித்த குடுமித் தலையர்சாரப்
பெண்டுகள் நடக்கை பிரமாத மெனஅஞ்சப்
புண்டரிக வண்ணலன பூசுர்கள் போனார். 51

மூலமென லாயவொரு மூன்றுதொகை யாலே
காலமொடு கோள்நிலை அறிந்துகடி தாகிச்
சால்புடைய சாயல் சலசாதன மதாகக்
கோலிஅறி சோதிடவர் கூடியவர் போனார். 52

இணைக்கருவி வித்தகர் இசைத்தவழி நான்கும்
குணக்கிரியை எட்டும்அறி கோதறு குணத்தோர்
அணுத்தொகை மலைச்செய்த சலத்தை அணுவாக்கும்
கணக்கர்கள் மணிச்சிவிகை யிற்கடிது போனார். 53

ஊனஉடல் கொண்டவர்கள் ஓடுவது கண்ட
தேனனைய இன்சொல்மட மங்கையர் சிரிப்ப
ஆனைபரி தேர்வரில் அகப்படுதும் என்னக்
கூனர்முத லாகுமவ ருங்கடிது போனார். 54

மண்டலம் அதிர்ந்திட வழங்குவழி யிற்கண்
நுண்துகள் படச்சிகரி நூறுபட எண்ணும்
எண்டிசை களுங்கட கடென்னும்ஒலி எய்தப்
பண்டமது பெய்தஉயர் பண்டிகள் நடந்த. 55

கரிக்கொடு திரட்டிய தெனக்கரிய மெய்யார்
பெருத்துயர் உதட்டையற விட்டபெரு வாயார்
சுருக்கமில் சரக்குமலை யில்பெரிது துற்றும்
பரித்தவளை சிக்கமொடு பப்பரவர் போனார். 56

நன்றென விளங்குவ நடந்துசெலும் அம்பொற்
குன்றின்மிசை ஏறுசில கோலமயில் போலப்
பொன்திகழ் மணிப்புரவி பூண்டபுனை தேர்மேல்
மன்றல்கமழ் வார்குழலி னார்கள்சிலர் போனார். 57

மேகநிற அண்ணல்பெரு வேள்வியது காணும்
ஓகைத்தமை உந்தஅணி பூண்ஒளி பரக்க
மேகமொடு பேருமுதல் மின்னினம் எனக்கைந்
நாகவெரிந மீதுசில நாரியர்கள் போனார். 58

தாவிநிரை யேவரு தடந்திரை விளங்கும்
தூவிஇள அன்னவினம் என்றுவமை சொல்லக்
கூவுகுயின் மென்சொல்அணி கொவ்வைபுரை வாயார்
வாவுபரி மீதுதிகழ் மாதர்சிலர் போனார். 59

மூடு சிவிகைச்செலும் ஒருத்தி முகமுன்பே
வாடை கதுவத் திரைஎடுப்ப மழைமஞ்சின்
மாடுயர் விளங்கு மதிஒத்த எழில்மஞ்சு
கூடுமதி ஒத்தது குலைந்த திரைவீழ. 60

ஒன்றுகரு மங்கடையில் ஒன்றொழிய ஒன்றாய்
வென்றிதிகழ் வில்லிஒரு வேழ்விஅது காணச்
சென்ற குமரர்க்குமணி தேமொழியி னார்க்கும்
பின்றுதல் இலாவகை விளைந்தது பெரும்போர். 61

வென்றவர்களே கெடுவர் வேறொரு நிலத்தே
யென்று கொளலாம் எழில்கொள் ஏழையர்கண்அம்பால்
சென்று பகைவென்ற திறல்ஆடவர்க ளேவுண்
டொன்றும் அறியாதுவழி நின்றனர் உளைந்தே. 62

கஞ்சமலராள் அனைய காமினிகள் கண்ணால்
நெஞ்சு பறியுண்டு சிலவீரர் நெறிகாணார்
அஞ்சரமும் அஞ்சொல்மட மாதர்விழி என்னும்
வெஞ்சரமும் நெஞ்சுற உளைந்தனர்கள் வீரர். 63

தூமதி முகத்தியர்கள் கண்டவர் துளங்கப்
போமதி பலத்தொடு படைத்தலைவர் போய்நற்
கோமதி நதிக்கரையினைக்குறுக இப்பால்
மாமதிகள் தேடரிய மாயன்இது செய்தான். 64

*செந்நிறத் தளிரின் சேவடிஇரண்டும் செறிகழல் திகழ்ந்திடச் சேர்த்திப்
பொன்னிறஆடைபொலிவுறச்சாத்திப் புனைமணிக்கச்சரைபொருத்தி
மின்னிறஉடைவாள்கச்சொடுவிசித்துவிளங்குசீர்உதரபந்தனத்துக்
கன்னிறைசோதிகாட்டிடக்கவின்பொற்கவசமும்கவின்பெறக்கட்டி

அஞ்சனவரைபோல் அழகியமார்பத் தாரமும் பதக்கமும்அணிந்து
மஞ்சணிவாகு வலயமதணிந்து மாமணிக் கடகமும் சாத்திக்
கஞ்சமர்மலர்போல் கைவிரல்ஆழி கடைசெறி கவினுறச்சாத்தி
வஞ்சிபோ லிடையார் மாலுறக்கோலக் கழுத்தினின் மணிவடஞ் சாத்தி 66

செந்துவர்வாயும் தாமரைக்கண்ணும் புருவமும் நெற்றியும் திகழும்
சுந்தரவதனந் துலங்கிடஇலங்கு சுடர்மணித் தோடுகள் சாத்தி
இந்திரநீலக் கற்றையைவிழுங்கி இரவிமண் டலங்கரு வரைமேல்
வந்துதோன்றியது போன்றிடத்திகழ வளர்ஒளி மணிமுடிசாத்தி.

திருமணிமார்பன் தன்திருநெற்றித் திகழ்திரு நாமமும்சாத்தி
எரிமணிச்சோதி அரியணைநின்றும் இழிந்திளை யோர்கள்கைகொடுப்ப
அரிமணியார்த்தஅவனிமன்னவர்தன் னருள்வழிபுகுதுவோரவர்கள்
குருமணிமகுட கோடிகள் தேய்க்கும் கோபுரவாயிலைக் கடந்தான்.

மத்தளமிடக்கை பேரியொண்படகம் வளையொலிகொம்பொலிகாளம்
எத்திசைதோறும்ஊதொலிநிசாளத்தெழுமொலிதுடியொலிகான
வித்தகர்பாடும் பாட்டெழுலியோடு விளங்குசீர்ச் சூத்திர தாளம்
ஒத்தொலிஎல்லாம்ஓர்ஒலியாகி உவர்க்கடல்கிளர்ந்தெனப்பொங்க

மங்கையர் வாழ்த்த மாகதர்ஏத்த மறையவர் ஆசிகள்கூறப்
பொங்கியகடலில் புடைபரந்திரைத்துப் பொன்னகர்ச்சனம்புடைசுற்றப்
பங்கமில்வீரன்பங்கயக்கண்ணால்பார்த்தபார்த்திடமெலாம்சனங்கள்
செங்கரங்கூப்பத் தேவர்கள்உவப்ப ஏறினன்செழுமணித்திண்தேர்

*கம்புவைத் தரித்த கையில் கார்முகம் தரித்தான் வந்தான்
உம்பருக் கமிர்த முன்னாள் உதவிய ஒருவன் வந்தான்
அம்புயக் கண்ணன் வந்தான் அன்பருக் கன்பன் வந்தான்
தம்பியர்க் கினியான் வந்தான் தசரத ராமன் வந்தான். 71

மனுகுலம் விளங்கத் தோன்றி வரிசிலை இளையானோடு
முனியுடன் போனான் வந்தான் முப்புரம் எரித்தவில்லி
தனுவினை முறித்துச்சீதை தன்கரம் பிடித்தான் வந்தான்
அனையவ ளோடும் தன்பொன் அணிநகர் அடைந்தான் வந்தான்.

தாயர்சொல் தலைமேற்கொண்டு தையலை உடனேகொண்டு
தீயவெங் கானம் சேர்ந்த செஞ்சிலை வில்லிவந்தான்
தூயமா முனிவர்முன்னே தோன்றிய தூயோன் வந்தான்
மாயமான் எய்தஅம்பால் மராமரம் எய்தான் வந்தான். 73

அனுமனை அடிமைகொண்டாங் காயிரங் கதிரோன் மைந்தற்
கினியனாய் வாலிமாள எரிசரம் துரந்தான் வந்தான்
நினைவதன் முன்னம் ஆழி நீர்எலாம் நெருப்பதாக்க்
குனிசிலை வளைத்தான் வந்தான் கோசலநாடன் வந்தான். 74

குன்றினால் வரம்புகட்டிக் கொடுந்திறல் சேனையோடும்
சென்றிராக் கதரைஎல்லாம் செருக்களத் தவியநூறித்
தன்திறல் அழிந்துநின்ற தசமுகன் தனிமை கண்டாங்
கின்றுபோய் நாளைவாவென் றேவிய இராமன் வந்தான். 75

இந்திரசித்தைக் கொன்றாங் கெறிகடல் என்னப்பொங்கி
வந்தமூல பலஞ்சாடி வளைஎயிற் றரக்கர் கோவை
அந்தக புரத்தில் ஏற்றி வீடணற் கரசுநல்கும்
சுந்தர வில்லி வந்தான் தூமணிவண்ணன் வந்தான். 76

முன்னர்நாம் சொன்ன நாளில் முடுகியே செல்லோம்ஆகில்
வன்னியில் பரதன்வீழும் என்றுதன் மனதின் எண்ணி
அன்னவன் எரிவிழாமல் அநுமனை முன்னே ஏவிப்
பொன்னகரடைந்தான் வந்தான் புவனமூன்றுடையான் வந்தான்

என்று சின்னங்கள் தம்மில் இசைந்துடன் மாறிஊதத்
தன்துணை இலாத வென்றித் தசரதராமன் தேர்மேல்
பொன்திகழ் மாடவீதி புகுந்தனன் என்னக் கேட்ட
வென்றிவேல் கண்ணினார்கள் தம்திறம் விளம்பல் உற்றாம். 78

இந்திரசாலம் ஒக்கும் இடையினார் எய்தப்பெற்றார்க்
கிந்திரபோகம் ஒக்கும் எழின்முலை தடந்தேர் அல்குல்
இந்திரகோபம் ஒக்கும் இதழினார் எதிர்ப்பட் டோருக்
கிந்திரசாபம் ஒக்கும் இருகுழை எறியுங் கண்ணார். 79

இந்திரசாபம் ஒக்கும் புருவத்தார் இருண்டு நெய்த்த
இந்திரநீலம் ஒக்கும் குழலினார் எழுதவொண்ணா
இந்திரவடிவை ஒக்கும் வடிவினார் எதிரில் ஆற்றல்
இந்திர திருவற்காண எழுந்த பேருவகை மிக்கார். 80

சிலம்புகள் சிலம்பச் செம்பொற் சீறடி சிவப்பக் காஞ்சி
குலைந்திட மருங்கு நோவக் குவிமுலை துளங்கக் கூந்தல்
அலைந்திட அலம்புசோதி அணிகளோ டணிகள் தம்மில்
மலைந்திட வருந்திஓடி மங்கையர் மறுகில் மொய்த்தார். 81

பேதையர் ஆதிஆகப் பேரிளம் பெண்கள்ஈறு
மாதர்க்ள் மாடந்தோறும் வாயில்கள் தோறுமாட
வீதிகள் தோறும்விம்மி மென்னடை அன்னம்போலக்
காதலானது மிக்கோங்கக் கண்ணனைத் தெரியக்கண்டார். 82

வண்ணமா முகிலோ மையோ மரகத வடிவோ வள்ளல்
ஒண்ணிறம் இவை ஒன்றாக உருக்கிய உருவோ என்பார்
கண்ணிணை செவ்வாய் பாதங் கைத்தலங் கமலம் என்பார்
புண்ணியம் செய்யா தார்இப் புறக்குடை தொழாதோர் என்பார்

கள்ளவெம் மனக்கைகேசி கண்களால் இவனைக் கண்டும்
முள்ளுறழ் கானத்தேக முயல்வதேன் முன்னாள் என்பார்
ஒள்ளழல் தூயகற்பால் உயர்ந்த கவுசலை என்பாள்இப்
பிள்ளையைப் பெறுதற்கென்ன பெருந்தவம் செய்தாள் என்பார்.

சிறந்தசீர் முகமுங் கண்ணும் புருவமும் செய்யவாயும்
நிறைந்தபூண் மார்பும் எங்கள் நெஞ்சுவிட் டகலாதென்பார்
அறம்புரி மனத்தளாகி அருந்தவம் செய்து பெண்ணாய்ப்
பிறந்துவந் திவனைப்பெற்றும் பெற்றிலள் சீதை என்பார். 85

பங்கயக் கண்ணாற் பற்றிப் பார்த்தனன் நம்மை என்பார்
அங்கவை பொதுநோக் காகும் அவனியில் வந்து தோன்றும்
செங்கயற் றடங்கட் செவ்வாய்ச் சீதையைப் பார்த்த கண்ணால்
நங்களைப் பார்க்குமோஇங் ஞான நாயக னின்றென்பார். 86

கயல் நெடுங் கண்ணார் இவ்வா றுரைத்திடச் சிலவர்காதல்
தயல் உறக் கண்ணன் தன்மேல் தைத்தகண் வாங்கமாட்டார்
மயலுறு மனத்த ராகி வளைகலை சோரத் தங்கள்
செயலறச் சேட்டை அற்றுச் சித்திரம் என்ன நின்றார். 87

கொங்கணை குழலோர் மங்கை கொண்டலைக் கண்டாள் காமன்
வெங்கணை நிறத்துப் பாய மென்மயில் போல வீழ்ந்தாள்
அங்கணை வுடையோர் தாங்கி அரிதினில் கொடுபோய் மாடப்
பொங்கணை கிடத்திச் சந்தப் புனல்முகத் தெறிந்தும் தேறாள். 88

கனக்கரு நிறத்தினேன் என் கண்வழி புகுந்து வந்தென்
மனத்திடைப் புகுந்தான் வந்த வழிஅவன் போகில் பின்னை
எனக்கவன் பிடிதா ரான்என் றிமைக்கத வடைத்தோர் ஏழை
நினைத்தது முடித்தேன் என்று நெடுநிலை மாடம் புக்காள். 89

பேதை யாங்கொருத்தி தன்கைப் பெய்வளை கழல நின்றாள்
காதலால் தொழுதேன் என்றன் கைவளை கொண்டான் கண்ணன்
ஈதவன் கருணை நான்சென் றிரந்திடத் தாரானேல் என்
வாய்தலில் அவனை வந்தால் வளைக்குநான் வளைப்பேன் என்றாள். 90

புனமயில் சாயல் பைம்பொற் பூண்முலை ஒருத்தி இந்தச்
சனமுடைத் தெருவை விட்டுத் தசரத ராமன் என்தன்
மனனிடைத் தனியே வந்து புகுந்துநான் உறங்கும் வேலை
கனவிடைத் தோன்றுமேல் நான் கருதின முடிப்பேன் என்றாள். 91

இவ்வண்ணம் மடவார் எல்லாம் இனவலை கலைகள் சோரச்
செய்வண்ணம் அறியார் தங்கள் சிந்தை மால் ஆகிநிற்ப
மைவண்ண முகில்தோய் நீண்ட வளநகர் வாயில் நீங்கி
உய்வண்ணம் உலகம் எல்லாம் உண்டுமிழ் ஒருவன் போனான். 92

ஆனைதேர் புரவி காலாள் அடியிட இடம் பெறாத
சேனைமா கடல்தற் சூழச் சிறந்தவர் மருங்கு செல்ல
வானமும் மண்ணும் எல்லாம் வளர்துகள் கதுவ மன்னர்
கோனகர் அரசன் சென்று கோமதி நதியை உற்றான். 93

*நாயகன்யாக சாலையின் அழகும் நானில மன்னவர் முதலோர்
ஆயவர்க்கெல்லா மமைத்தபேரிடமும் அவரவர்க்கிட்டகாவணமும்
வாயிலுமறுகு மன்றமுங்கண்டு மகிழ்ந்தொளி திகழுமால்வரையை
ஏயுமண் டபத்தின் இளையவரோடும் இனிதிருந் தருளிய காலை. 94

*காரை நேருங் கொடை அங்கர் கலிங்கர் தெலுங்கர் காம்போசர்
வீர ராய பாஞ்சாலர் விராடர் இலாடர் விறல்மிக்க
சூரர் சோனர் மகதேசர் தோலா வென்றி யாதவர்கள்
சேர சோழ பாண்டியர்கள் சிந்து மன்னர் திரிகத்தர். 95

காதும் வைவேல் காம்பீரர் கங்கர் கொங்கர் கருநாடர்
சேதி மன்னர் குருமன்னர் சிங்க ளேசர் அவந்தீகர்
சோதி மணிமா முடிச்சனகர் துருக்கர் துளுவர் எனஇவர்கள்
ஆதி ஆய முடிமன்னர் அளவில் சேனை யொடும்வந்தார். 96

தன்னில் வலியோர் இலாஅனலன் அனிலன் அரன் சம்பாதி
என்னும் அமைச்சர் புடைசூழ எண்ணி லாத சேனையொடும்
மின்னும் மணிமா முடிச்சோதி வெய்யோன் உதய வெயில்விரிப்ப
மன்னன் இராமன் பெருவேள்வி காண வலிவீ டணன்வந்தான். 97

சங்கன் குமுதன் சதவலிபோர்த் தாரன் சாம்பன் தகைஇடும்பன்
பங்கம் இல்லா அங்கதன்தான் பனசன் கவையன் கவையாக்கன்
எங்கும் வலியே றியநீலன் இடபன் வினதன் எறிகடலைத்
துங்க அணைசெய் தவன்மயிந்தன் துமிந்தன் சுகிரன்துன்மருடன். 98

ஊழி நெருப்புங் காற்றும்போல் உடன்று பொருகே சரியாதி
பாழி மிக்க படைத்தலைவர் பக்கம் சேவித் துடன்போக
ஏழு பத்தின் பெருவெள்ளம் என்னும் தொகைவா னரசேனை
சூழ வென்றி அனுமனொடும் சுடர்சுக் கிரீவன் தோன்றினனால். 99

ஆசை அற்ற தூய்நெஞ்சத் தங்கி ராஅத் திரிமாயைக்
காசை அற்ற ஞானக்கட் காசிபன் கவுசிகன் விபுதன்
பாசம் அற்ற சமதக்கினி பரத்துவாசன் கௌதமன் மெய்
நேசம் அற்றுள் ளூறஉலகு நெடுந் தவத்துச் சாபாலி. 100

காயங் குறிய நெடுந்தவத்தோன் கண்ணுவன் தௌமியன் கனலிற்
றூய ஞய புலத்தியன்தான் சுவத்தி தவத்தைத் துரந்தழிக்கும்
தீய புலன்கள் ஐந்தடக்கித் தெளிந்த ஞானப் பிருகுமுதல்
ஆய மாயப் பிறப்பறுத்தோர் அகண்ட வேதங் கரைகண்டோர்.

கையில் திகழும் பவுத்திரத்தர் காதில் தூங்கும் குண்டலத்தர்
மெய்யில்திகழ்ந்துதோன்றௌிளியோர் விளங்கும் அரையில்மரஉரியோர்
பொய்யில் புரளாநாவினர்நற் பொருளில்செல்லும் தியானத்தோர்
எய்வில் கரத்தோன் பெருவேள்வி காண எழுந்தார் உவகையினுல்

சின்னூல் வழியால் அறுசமயச் சிலுகில் வீழா துலகுய்யத்
தொன்னூல் அன்ன மாயுரைத்த தூயோன் காண அச்சுருதி
நன்னூல் எல்லாம் உருக்கொண்டு நடந்து செல்லு மாபோல
முன்னூல் திகழுந் திருமார்பர் முனிவர் வேள்வி வனம்புகுந்தார்.

தேடு தனம்பூண் ஆடைமுதல் அடங்கக் கொண்டு சேனையொடும்
கூடி அடங்க வருதலால் அந்தக் குலமன் னவர்வாழும்
நாடு காடாய் நலமிக்க நைமி சார ணியம்என்னும்
காடு நாடா யினதென்றால் சனத்தை யாரே கணக்கிடுவார். 104

தொக்க முனிவர் தாம்நோக்கத் தொழுது தன்னை தொழுதோர்க்குத்
தக்க உபசா ரஞ்சொல்லித் தழுவிக் கொள்வார் அவர்களையும்
மிக்க உவகை யொடுதழுவி வேந்த ரொடுமா முனிவரொடும்
ஒக்க வில்லி யவர்க்குவகை சொல்லி யுவந்தங் கினிதிருப்ப. 105

படி மன்னியசீ ராமன்தாள் பணிந்து பரிதி சாய்ந்ததென
முடி மன்னர்க்கும் விடைகொடுப்ப முன்னஞ் சமைத்த இடத்தவர்கள்
விடும் வண்ணம்செய் தெல்லோர்க்கும் வேறு வேறு சமைப்பித்த
படி மன்னியசீர் இடந்தோறும் பரக்க விடுத்தான் இளையோனே.

மூட்டு முத்தீ அந்தணர்கள் முதலாய் நீசர் கடையாக
ஈட்டுந்தனமாம் பெருவேள்விக் கிளையோன் சமைப்பித்திடுமமுதம்
காட்டும் அடிசில் தம்முடைய காதல் மடவார் அன்பினொடும்
ஊட்ட உண்ணு மாபோல உண்டு களித்தார் உறுசனங்கள். 107

வாட்ட மில்லா வலியுடைமா மந்த ரத்தை மத்தாக
நாட்டி வெய்ய வாசுகியா மாநா கத்தைக் கயிறாகப்
பூட்டி ஆழி கடைந்தமுதம் புகழ்வா னவர்க ளானோரை
ஊட்டினற்கிவ் உலகுள்ளோர் தமைச்சோறூட்டல் ஒருபொருளோ

பாலொடு தயிரும் நெய்யும் பலசுவைக் கறியுஞ் சோறும்
சாலைகள் தோறும் உண்ட சனம் எலாம் தருக்கின்மிக்க
கோலநீள் வில்லி கோதில் குணங்களை எடுத்துக் கூறி
வேலைசூழ் உலகில் இந்த வேள்விபோல் காணோம் என்றார். 109

அரசருக் கமலன் பொன்னும் ஆடையும் பூணும் நல்கி
இரவிசேய் தனக்கும் சேய்க்கும் இலங்கைமன் னவற்கும் அன்று
பருதிமேல் பாய்ந்தோனுக்கும் படைத்தலைவருக்கும் பைம்பொற்
குருமணிப் பூணும் பொன்னும் ஆடையும் குகற்கும் ஈந்தான். 110

வறியவர் வேண்டிற் றெல்லாம் வழங்கிடும் வள்ளல் என்றுங்
கெறிபறை அறைத லோடும் இரவல ராஞேர் எல்லாம்
பறைஅறை ஓசை கேட்டுப் பழுமரந் தன்னில் வீழும்
பறவையு மதுவீழ் தேனும் எனவந்து பரவி மொய்த்தார். 111

பொன்னை வேண்டினர்க்குப் பொன்னும் பூமிவேண்டினர்க்குப்பூவும்
பன்மணி வேண்டி ஞேர்க்கு மணிகளும் பலவும் மற்றும்
இன்னது வேண்டும் என்றுங் கிரவல ராஞே ரெல்லாம்
சொன்ன சொன்னவற்றை எல்லாம் தூமணி வண்ணன் ஈந்தான்.

*ஆசை யற்றதூ மனத்தினன் அன்ன சன்ஞசி
நேச மற்றுலர் மேனியான் நீரிடை மூழ்கிப்
பாசி பற்றிய நிறத்தினன் பல்லுயிர் தாக்கக்
கூசி வந்தடி யிடாதறக் குந்திய நடையான். 113

அன்ன மாமுனி அண்ணலை அடைந்தவன் அறைவான்
பொன்னும் பூமியும் பொருளல எனக்கெனப் புகலா
உன்னை வேண்டுவ துண்டெனக் கொடுக்க லாகுவதோர்
மன்னர் மன்னனே மரவுரி வழங்கெனச் சொன்ஞன். 114

கடுத்த தீவினை கடிந்தவன் கழறிடக் கேட்டுத்
தடுக்கி ஒண்கலா உவகையன் தசரத ராமன்
உடுக்க லாவன மரஉரி ஒருபெரும் பாரம்
எடுத்து விட்டவற் கினிதுரைத் திராகவன் இருப்ப. 115

ஓது வேதம்ஓர் உருவுகொண் டனஎன்னும் உருவன்
பூதம் ஐந்தொடும் பொருந்திய உயிர்எல்லாம் தன்னில்
பேதம் இன்றியே கண்டிடும் பெருந்தவ முனிவன்
கோதில் நீதியான் கொடுத்தன கொள்கிலான் கூறும். 116

நெய்க்கும் பூவைவீ நிறத்திஞேய் நீஎனைக் கொள்கென்
றுய்க்கும் பல்பெருந் தனத்திஞல் ஒருபசை யில்லை
வைக்கும் போதுரு ளாதது வலியதூக் கினதாய் 117
கைக்கு நொய்யதோர் கமண்டலம வேண்டும்என் றுரைத்தான்.

பொருந்து மாமணி புனைந்தசெம் பொன்னினுல் சமைத்துத்
திருந்து பேரெழில் கமண்டலம் சீதரன் கொடுப்ப
அருந்தவன் பெரி தகமகிழ்ந் தவஞெடும் இனிதாய்
இருந்த வேலையின் இருந்தவன் ஒருவன் ஈதுரைத்தான். 118

பன்னு சீர்த்திஎன் பாரியை தானதி வாலை
சொன்ன வார்த்தைஒன் றுண்டது சொல்லுவன் கேட்டி
மன்னர் மன்னனை வள்ளலை இராமனைக் கண்டால்
பொன்னின் அம்மனை வேண்டுதி எனக்கெனப் புகன்றாள். 119

சோதி மாமணி துன்றலிற் சுடர்விடும் தொழில
வேத பாரகன் வியந்திட ஆங்கவன் விரும்பும்
மாத ராள்இரு கையினும் மாறி யாடிடவ
னாதி நாயகன் அம்மனை வேண்டுவ அளித்தான். 120

மருடனைப் பெற்ற மாதராள் சீறிய பொழுது
கருடனைப் பெற்ற பாம்புபோல் கலங்குவோன் அவள்தன்
அருடனைப் பெற்ற போதற வாழ்ந்துவீற் றிருப்போன்
குருடன் ஒப்பஅக் கொடியவள் படுகுழி வீழ்ந்தோன். 121

தீதென் றுள்ளன எவற்றினும் சிந்தைசெல் லாதான்
சாது வேதியன் தன்மனை புகுந்து தான்கொண்ட
மாத ராள்தனை வல்விரைந் தெய்தினன் பெண்ணே
ஏது வேண்டுவன் இராமனை எனஅவள் இயம்பும். 122

நெஞ்சில் தூயனும் நிறைகுணத் திராமனைக் கண்டால்
அஞ்சிப் பல்இளித் தசடனாய் அகலநில் லாதே
பஞ்சில் பாழ்த்தநம் மிடிசொலிப் பலவும்வேண் டாதே
கஞ்சிக் குக்கலப் பயறுவேண் டுதிகடி தென்றாள். 123

என்று கூறலும் இராமனை வேதியன் எய்தி
நின்ற போதவன் வறுமையை நிமலனும் நினைந்து
குன்று போல்தனம் கோநிரை கொடுத்திட இவையான்
ஒன்றும் வேண்டலேன் காரணங் கேள்என உரைக்கும். 124

மாரி தட்டறப் பெற்றொரு மடியிலா தாளென்
பாரி கஞ்சிக்குப் பயறு வேண்டினள் அதுஒழிய
வீர னேயினி வேறொரு பொருளைவேண் டுவனேல்
சேர லாள்அவள் என்னோடும் சீறும்என் றுரைத்தான். 125

அவாவில் வேதியன் அகத்தவள் கூறிய அதனைச்
சுவாக மேமறை யோர்க்கிது சொல்லினா னென்று
தவா நெடுங்கணைத் தசரத ராமன்உள் மகிழ்ந்து
சவா சனங்களும் தானும்அங் கினிதுகொண் டாடி. 126

காயும் வெவ்வினைக் கலைவலோன் மனையிடைக் கஞ்சிக்
காய நெல்லுநூ றாயிரங் கலஞ்செல அருளித்
தூய நற்பய றத்தொகை கொடுத்திடச் சொல்லி
நாய கன்அவண் நற்றவர்க் களித்திடுங் காலை. 127

இஞ்சை பொய்முதல் கடிந்தனோர் இருபிறப் பாளன்
மஞ்சை மிஞ்சிய நிறத்தினேய் மாகதி தனக்கு
நஞ்ச மாகிய பொருளில்லோர் நலசெயிலே எனக்குப்
பஞ்ச கவ்வியங் கொள்ளலோர் பசுஅருள் என்றான். 128

வேறுதான் ஒன்றும் வேண்டிலன் என்ற வேதியனுக்
காறு நாலுடன் ஆனநூ றுவினம் அருளித்
தேறு போதத்து மாதவர் செப்பின எல்லாம்
ஈறி லாதன அளிப்பன்இன் றெனநினைத் திருந்தான். 129

வேதநா யகன்இவ்வாறு வேண்டினோர் வேண்டிற் றெல்லாம்
மாதனம் சுரபிபூமி மணிமுதல் வழங்கா நின்று
போதுபோக் கிடுநாட் போயோ ராண்டறப் புரவிமீட்டுக்
காதுவேல் காவலாளர் செய்தது கழறல் உற்றாம். 130

*தழைவனத் திடைபரி தனைத் தளைத்துமெம்
உழையிடைப் போர்செய்வீர் உரைமின் யாரென
மழைதரு சோலைவான் மீக மாமுனி
விழைதரு சீடர்யாம் வேந்தன் மைந்தர்கள். 131

வேந்தர்தம் மைந்தர்கள் என விளம்பலும்
காந்தியே பொருதனர் கவன மாவுடன்
போந்தவர் இளைஞனைப் புகுந்து பற்றலும்
நீந்தொணு உதிரமாய் நிலை அழிந்தவே. 132

முன்னவன் அடர்த்து மோகரித்து வாளிகள்
இன்னன என்னொணு தெங்கு மேவியப்
பின்னவன் தனையும்மீட் டன்ன பீடுடை
மன்னவர் எதிர்ந்திட மடிய நூறினான். 133

வாயுவும் பின்செல வந்த தூதுவர்
போயதும் பொருததும் புகலக் கேட்டபின்
தூயதன் மனத்திடை தொனித்தி ராமனும்
நேயமாம் படைஎலாம் நிறைய ஏவினான். 134

ஏவினர் செல்லவான் மீகி இன்னருள்
மேவுமா ணுக்கரும் வில்லின் கல்வியால்
தூவிய கணைகளால் சோர்ந்து வீழ்ந்தனர்
மாவினை அறுத்தவான் மீகி வந்தனன். 135

போர்செய்த புதல்வரை யுரப்பி யேபுகன்
றார்செய்வா ரிப்படி யருளி வீர்கொலோ
கார்நிறத் தாமரைக் கண்ணன் சேனையை
யேர்பெற மந்திரித் தெழுப்பி னான்அரோ. 136

மாய்ந்தன சேனை எல்லாம் வளம்பெற எழுப்பி மாவும்
ஈந்துநீர் போமின் என்ன இருந்தவன் தன்னைப் போற்றிக்
காந்துவேல் காவ லாளர் கவனமா முன்ன தாக
ஏய்ந்தநாள் அளவி னில்வந் திராமனைத் தொழு திருந்தார். 137

பதியில்வாழ் பசுக்க ளோடு பழுவத்துப் பசுக்கள் வேத
விதிமுறை எவையும் பார்ரில் விளங்குசீர்க் கங்கை யாதி
நதிகளில் தந்த நீரும் நாற்பெருங் கடலின் நீரும்
கதும்எனக் கொண்டு வந்தார் கால்கடி யோர்கள் எல்லாம். 138

ஏதமில் இலக்க ணத்த எழுமூன்று சாண் நீளத்த
காதிர யூப மாறும் காசில பலாச மாறும்
வேதியர் விதியில் சொன்ன வில்லுவ யூபமாறும்
தீதறு தேவதாரம் இரண்டுதற் கோலம் ஒன்று. 139

ஆகமூ ஏழு யூபம் அமைந்தன அரணி சூற்பம்
சேகற இயன்ற எல்லாம் சுருவஞ்சீர் திகழு மான்றேல்
போகபூ மியர்க்கும் செல்வப் புவிஉளோர் தமக்கும் எல்லாம்
யாகபாத் திரங்கள் வந்து விட்டநன் முகிழ்த்த மெய்த. 140

மூவரும் போற்றுங் கற்பின் முதல்விபோல்முறைசெய் செம்பொன்
பாவையைத் தனக்குத் தூய பாரியாய்ச் சங்கற் பித்துப்
பூவயன் அனைய தன்மைப் புரோகிதன் சடங்கு காட்டத்
தூர்வருந் தவர்க ளோடும் துடங்கினன் வேள்வி அண்ணல். 141

வசையறு செஞ்சொல் சீரா மாயணங் கேட்க மண்ணில்
பசையறு நெஞ்சி னோரும் பரகதி எய்தச் செய்தோன்
தசரதன் தனையன் வேள்வி கண்டிடத் தாழ்ந்த நெஞ்சன்
குசலவ ரோடும் வந்தான் கோதறு குணவான் மீகி. 142

கோதில்மா தவத்தோன் பின்போம் குமரரைக் குறுக வந்து
மாதரும் மைந்த ரானோர் யாவரும் மகிழு நெஞ்சர்
காதலாள் அவரை நோக்கிக் கருமுகில் வண்ணத் திந்தத்
தீதறு தவவே டத்தோர் யாவரோ எனச்சிந் தித்தார். 143

வித்தக முனிவன் பின்போம் மைந்தர்கள் முனிவே டத்துக்
கத்திரர் இவர்கள் என்பார் காணுதுங் கடைக்கால் என்பார்
கைத்தலந் தூய பாதம் கண்ணிணை கமலம் என்பார்
இத்தலத் திவரைப் போல எழில்உளோர் இல்லை என்பார். 144

உத்தம குணத்துச் சீதை உருத்தெரி கருவோ டும்போய்ப்
புத்திரர் இருவர்ப் பெற்றாள் எனஎழு புதல்வர் தம்மைத்
தத்துவ மாக வேண்டும் தசரத ராமன் தன்னை
வைத்துவாங் கினவா றெக்கும் மைந்தர்கள் வடிவிங் கென்பார்.

வானவர் துயரம் தீர மறிகடல் இலங்கை செற்ற
ஈனமில் வீரன் மைந்தர் எனும்இடம் இவர்கள் தங்கள்
மேனியே விளம்பா நிற்கும் வேறொரு சான்று வேண்டா
ஆனபின் னன்றும் என்னு மையுற வொழிமின் என்றார். 146

பெற்றவள் சனகன் பாவை பிதாஇவர்க் கிராமன் என்றால்
மற்றிவர் வடிவு நம்மால் புகழலாந் தரமோ என்பார்
இற்றைநாள் அளவும் செல்ல இவர்களை அழைத்துக் காணுக்
கொற்றவன் கொடியன் என்பார் கொடுவினைப் பயனீ தென்பார்

இவ்வகை சனங்கள் கூற யாகசா லையைவந் தெய்தும்
ஐவகைப் புலன்கள் வென்றோன் அடியிணை வணங்கி அண்ணல்
செய்வகை பூசை செய்து சிறந்தன மொழிகள் செப்பி
எவ்வகை யாலும் வேறொன் றில்லையே இடர்நிற் கென்றான். 148

பின்னுமீ துரைக்கும் உங்கள் பெருந்தவம் இடையூ றின்றிச்
சென்னெறி எல்லாம் நின்ற வேளை முனிவன் செப்பும்
நின்னைமன் னவனுப் பெற்ற நீள்நிலத் துயிர்கள் எல்லாம்
இன்னல்கெட் டிருப்ப தானல் எங்களுக் கிடையூ றுண்டோ. 149

என்றுமா முனிவன் கூறி இராமனை ஆசி கூறித்
தன்துணை அடிகள் பேணும் சாத்திர ரோடும் போக
அன்றவற் கரிசி முற்கம் பலம்தயிர் நெய்பால் பெய்த
ஒன்றலாச் சகடமுய்ப்ப உவந்தவை முனிகைக் கொண்டான். 150

கோடுத வில்லா வாய்மைக் குசலவர் தம்மை நோக்கிக்
கூடிய சனங்கள் பாலுங் குவலய மன்னர் பாலும்
தேடிய தனமாம் சீரா மாயணம் சிலையோன் பாலும்
பாடுமின் என்று விட்டான் பரம்பொருள் கண்ணுட் கொண்டான்.

தூவணத் துகில்சேர் அல்குல் தோகையர் மைந்தர் துன்றும்
ஆவணந் தோறும் பொன்னின் அணிமுடி மன்னர் துன்றும்
காவணந் தோறும் சீரார் கவலைகள் தோறு மைந்தர்.
பாவணச் செஞ்சொற் சீரா மாயணம் பாடுங் காலை. 152

ஓதநீர் வண்ணன் வேள்வி காணிய உவந்து வந்த
மாதவர் மன்ன ராதி சனமெலாம் மைந்தர் பாடும்
தீதறு தெய்வக் கானம் செவிமடுத் தினிதில் உண்டிக்
கீதநாம் இதற்கு முன்பு கேட்டறி யாத தென்றார், 153

*வெம்பரி வேள்வியில் இருந்த வேந்தரும்
உம்பரும் முனிவரும் உண்ம கிழ்ந்திட
இம்பரின் இராகவன் இயல்கொள் இன்இசை
தும்புரு நாரதர் தொலையப் பாடினர். 154

மாடக யாழிடத் தேந்தி மைந்தராற்
பாடிய இன்னிசைப் பனுவல் தஞ்செவி
ஊடுற நிறைதலால் உருகுஞ் சிந்தையோ
டேடலர் தாரினுற் கெடுத்துக் கூறினர். 155

அனையவர்த் தருகென அரசன் ஏவலும்
புனைதுகில் போர்வையர் புலிக்கண் பார்வையர்
இனநரை முடியினர் இடிக்குஞ் சொல்லினர்
துனைவினில் அவனடி தொழுது போயினர். 156

ஆயசீ ராமனும் அருளினன் என
வாயில்காப் பாளருண் மகிழ்ந்து கூறலும்
ஏயெனு மாத்திரை இனைய மைந்தர்கள்
போயவண் அரசவை புகுந்து மேவினர். 157

*மூட்டிய செந்தீ ஓமம் முடித்தண்ணல் இருந்தான் என்று
கேட்டவன் கேட்குங் காலம் இதுஎனச் சாலை சார்ந்து
வாட்டமில் செஞ்சொற் சீரா மாயண மாறி மாறிப்
பாட்டியங் கட்டி மைந்தற் பாடினர் பலருஞ் சுற்ற. 158

அன்னவர் பாடுந் தெய்வக் கானமாம் அமுத வெள்ளம்
தன்னிரு செவியால் மாந்தித் தடுப்பரும் உவகை பொங்க
மன்னவ ரோடுங் கூட இருந்துதான் மைந்தர் பாடும்
இன்னிசை கேட்பான் வேண்டி இராகவன் இனைய செய்தான்.

அருமறை முனிவர் தம்மோ டளவறு கான நூலில்
பருணிதர் ஆடு வார்கள் பாடுவார் முட்டுக் காரர்
விரிபெருங் கலைவல் லார்கள் வியந்ததின் மிக்கோர் எல்லாம்
வருகஎன் றுரைப்ப அன்னோர் வந்தனர் அடங்க எல்லாம். 160

முன்னைமுப் பத்து மூவர் முதலினோர் முனைவர் சூழப்
பொன்னகர்க் கிறைவன் ஆய புரந்தரன் இருந்தான் என்ன
மன்னவர் ஆதி யாய மாசனம் தன்னைச் சூழப்
தன்னெதிர் இல்லா வீரத் தலைவன்வீற் றிருந்த காலை. 161

நீடிய தவத்து மைந்தர் வருகென வந்து நிற்ப
ஓடிய உம்பர் வாழ உயர்வலி அரக்கர் மாயக்
கோடிய வரிவில் அண்ணல் குமரரைக் குளிர நோக்கிப்
பாடுக என்னச் சீரா மாயணம் பாடல் உற்றார். 162

*குரன்முதல் எழுவகை நரம்பு கூட்டிய
விரல்கவர்ந் தெடுத்துள வேதச் சீரியாழ்
கரமிசை வாங்கினர் கவின்கொள் காப்பியத்
துரைமலி இன்னிசை உரைப்ப தாயினர். 163

✽ நாடு கோசல நாடுமா நதிபுனற் சரயு
ஆடு திண்கொடி அயோத்திமா நகரதற் கிறைவன்
தேடு வண்புகழ்த் தயரதன் தேவியர் முதன்மை
சூடு கோசலை கைகேசி சுமித்திரை என்பார். 164

மற்றுந் தேவியர் அறுபதி னுயிர மடவார்
சொற்ற மன்னவன் சுடர்புகழ் வேள்விகள் துடங்கிப்
பெற்ற மைந்தர்கள் பிறங்குவேல் இராகவன் பரதன்
எற்று நீள்புயத் திலக்குவன் இளையவன் என்போர். 165

அன்ன மன்னவன் அரியணை மீதுவீற் றிருந்தான்
இன்ன மாநிலம் படைப்பெனன் றவனியல் வேள்விக்
குன்னன் மைந்தரில் இராமனைத் தருதிஎன் றுரைத்தான்
மன்னர் மன்னவன் மறுத்தனன் வகிட்டன்ஈ துரைத்தான். 166

மறுத்தி அன்றென உரைத்தலும் மன்னர்கோன் முனியைப்
பொறுத்தி என்றவன் பொன்னடி சென்னியிற் புனையா
உறுத்தி மைந்தரை அளித்தலும் உவந்துமா முனியும்
கறுத்த செம்மலுந் தம்பியும் காடுசென் றடைந்தார். 167

காமன் மாறுபட் டுலந்ததோர் காடுகண் டேகித்
தாம வார்குழல் தாடகை படச்சரம் தூண்டி
ஏம மாகிய படைக்கலம் யாவையும் பெற்றே
ஓம மாவலி உறைந்ததோர் உறையுள்சென் றுறைந்தார். 168

வெவ் விடச்சின வீரரைக் காக்கென விடுத்தான்
அவ் விடத்துமா முனிவனும் வேள்விசெய் தமைத்தான்
எவ் விடத்தினும் அரக்கர்வந் திடிஎன ஆர்த்தார்
வவ் விடச்சர மாரியால் வானத்தை மறைத்தார். 169

கண்ட வீரனும் அரக்கரைக் கடிந்துதா டகையாம்
சண்ட வேகத்தள் தனையரில் ஒருவனைச் சரத்தால்
துண்ட மாக்கிமற் றொருவனைக் கடல்புகத் துரந்தான்
மண்டு வேள்விசெய் முனிவனும் அதுகண்டு மகிழ்ந்தான். 170

சண்ட மாமறை முனிவனும் தம்பியும் தானும்
கண்டல் சூழ்கரைக் கங்கையுங் கானமுங் கடந்து
பண்டை மாநிறம் அகலிகை பெறப்பணித் தருளி
விண்டொ டும்மதில் மிதிலைமா நகர்சென்று விட்டார். 171

சனகர் கோனைவந் தணுகலும் தழல்புரி வேள்வி
முனிவ னேஇவர் ஆர்எனக் கருள்என மொழிந்தான்
வினையம் வேறிலை விறல்புனை தயரதன் என்பான்
தனையர் மற்றுநின் தனுவலி காண்குறச் சமைந்தார். 172

*இந்திர வில்என யாரும் எடுத்தே
வந்த நெடுஞ்சிலை மைந்தன் வளைத்தான்
அந்தர வானில் அரம்பையர் ஆர்த்தார்
தந்தை உகந்தது சாற்றுதும் என்றார். 173

சனகன் நலந்திகழ் தசரத னுக்கோர்
துணைபரி யான்ஒரு தூதனை விட்டான்
தனைய ரொடுந்தவ மாமுனி யோடும்
வினையம் வலான்மதிள் மிதுலை புகுந்தான். 174

தெள்ளமு தன்னவள் சீதையை அன்பால்
வள்ளல்இ ராகவன் மன்னி மணந்தான்
முள்ளெயி றார்இதழ் மூவரை யும்போர்
வெள்ளிலை வேலவர் மூவரும் வேட்டார். 175

நெறியினில் யாவரு நேரிடும் வேலை
வெறிசுட ரார்மழு வேந்தனும் வந்தான்
குறியவ னாகிய வன்வில் வளைத்து
வறுமையி லாத வயோத்தி புகுந்தான். 176

அரியணை மீதில் இருந்தர சாளும்
வரிகழல் மன்னன் வசிட்டனை நோக்கா
உரிய தவம்புரி வேனென் மகற்கே
விரிகதிர் மோலி மிலைச்சுமின் என்றான். 177

அன்னது கூனி அறிந்தனள் சொன்னாள்
கன்னல் மொழிக்குயில் கெசி கேட்டாள்
மன்னவன் நீமுன் அளித்த வரத்தால்
என்மக னுக்கர சீந்தருள் என்றாள். 178

வடிவுடை மன்னன் மயங்கினன் வீழ்ந்தான்
இடுகழல் வீரன் இராகவன் இன்றே
நெடில்படு கானகம் நீபுகு தென்றே
கொடியவள் சீரை கொடுத்தனள் அன்றே. 179

மலர்க்குழ லாளொடு வார்சிலை வன்கை
இலக்குவ னோடும் இராகவன் அன்றே
அலக்கண் உறுமல் அயோத்தி கடந்தே
நலக்குறு கங்கை நறுங்கரை விட்டான். 180

அங்கை நெடுங்குகன் அம்பி விடப்போய்க்
கங்கை கடந்தொரு கங்குலின் அங்கோர்
சங்கையின் மாமுனி சாலையில் நண்ணிக்
கொங்கலர் சித்திர கூடம் அடைந்தான். 181

சித்திர கூடம் அடைந்தனர் சென்ற
தத்தன் அறிந்தனன் ஆருயிர் விட்டான்
வித்தக மாமுனி மெய்ப்பர தற்கே
உய்த்தனன் ஓலே உணர்ந்திலன் வந்தான். 182

*மன்ன னுக்கு மகனுக்கும் உற்றவா
றன்னே கூற அறிந்தனன் ஆதலால்
என்ன பாவிசெய் தாய்என் றிரங்கினுன்
தன்னே மாமுனி தான்வந்து தேற்றினுன். 183

இன்ன தந்தையை ஈமத்தில் ஏற்றினுன்
பின்னே மாமுடி சூடெனப் பேசினுர்
பன்னு மாலேப் பரதன் இராகவன்
தன்னே நாளேத் தருவன்என் ருேதினுன். 184

சடையும் வற்கலே யுந்தரித் தாங்கிரு
புடையு மன்னரும் தாயரும் போயினுர்
இடைய கங்கைக் குகனெடும் ஏறிப்போய்க்
கொடிகொள் சித்திர கூடஞ்சென் றெய்தினுர். 185

வையம் ஆளுடை யானே வணங்கிப்பின்
ஐயன் வானம் அடைந்ததுங் கூறினுன்
ஐய கோஎன் றரற்றி இராகவன்
கையி னுல்அக் கடன்கழித் தான்அரோ. 186

ஆதி மாமுடி சூடென் றடிதொழப்
போதி ஏழிரண் டாண்டு பொறுத்திஎன்
றேதம் இன்றி இராகவன் கூறலும்
பாதுகங் கொள் பரதனும் போயினுன். 187

விடங்கொள் வேற்கை விராதனே வீட்டிப்போய்த்
தடங்கொள் வீடு சரபங்க னுக்களித்
தடங்க ஆவம் அகத்தியன் தந்தபின்
இடங்கொள் பஞ்ச வடியிற்சென் றெய்தினுர். 188

மங்கை சூர்ப்ப நகைப்பெயர் மாதராள்
கொங்கை நாசி குழையொ டரிந்தபின்
அங்கை யால்தன் வயிறலேத் தாஎனக்
கங்குல் வாழ்க்கைக் கரனுக் குரைசெய்தாள். 189

கரனுந் தூடண னுங்கவி னப்பரித்
திரிசி ரர்வும் சினப்படை ஈட்டமும்
வரன்இ ராமன்கை மாண்டதெல் லாங்கடி
துரைசெய் தாள்சென் றிராவணற் கோடியே. 190

சீதை மற்றவன் தேவியைக் கொண்டியான்
போதல் உற்றேன் புகுந்ததி தென்றலும்
காதல் உற்றனன் காண்குறும் ஆசையான்
மாது லற்கொரு மாற்றஞ்சென் ஞேதினன். 191

மறுத்து ரைத்தனன் மாமன்மா ரீசனும்
வெறுத்து ரப்பினன் வெஞ்சொல் இராவணன்
பொறுத்தி நீஎனப் பொன்னிள நவ்வியாய்
நிறுத்த சீதை நிலையிற்சென் றெய்தினன். 192

கண்டு சீதை கவர்ந்தனை தாஎன
அண்டர் கோனும் அதன்பின்னர் ஏகினன்
கொண்ட மாயை அறிந்து கொலைசெய்தான்
ஒண்டொ டிஇளை யோய்என் றுலந்ததே. 193

அன்னம் அன்னவள் அவ்வுரை கேட்டலும்
தன்ன நாயகன் தம்பியை ஏவினள்
பன்ன சாலையில் பார்ப்பன வேடமாய்
இன்னல் செய்ய இராவணன் எய்தினன். 194

மான மீது மடந்தையைக் கொண்டனன்
போன போது புகுந்த சடாயுவை
ஈன மாக்கித்தான் ஏறிய தேர்விடா
மீன வேலை இலங்கையில் மேவினன். 195

மன்இ ராகவன் தம்பியை வந்தவா
றென்னை என்ன இயன்ற துரைசெய்தான்
பன்ன சாலையைப் பாவையை நாடிப்போய்
முன்னம் வீழ்ந்த சடாயுவை முன்னினர். 196

*இறந்தஎரு வைக்கரசை ஈமஎரி மூட்டி
முறஞ்செவி அயோமுகியை மூக்கினை அரிந்து
மறந்தரு கவந்தனையும் வானிடை வைத்திட்
டறந்திகழ் தருஞ்சவரி ஆச்சிரமம் உற்றார். 197

மிக்கசவ ரிக்கினிய வீடருளி விட்டுப்
பக்கமது மிக்கமலர் பம்பையது கண்ணுற்
றக்கணம் அகன்றனுமன் ஆம்என உரைப்பச்
சுக்கிரிவ னைத்துணை எனத்தொடர்பு கொண்டான். 198

மந்தரம் எனத்திகழ் மராமரம தெய்தே
துந்துபி களேபர மெழுச்சுவ டுறுத்தி
இந்திரன் மகற்கியம லோகப் அரு ளித்தன்
அந்தமுடை வாளவன் மகன்பெற அளித்தான். 199

சுக்கிரவ னைத்தனது தொன்முடி கவித்தே
மிக்கதிறல் வானரரும் மேவவரை செய்திக்
கக்குமுகின் மிக்கமழைக் காலம தகன்றால்
இக்கண்வரு வாய்என இராகவன் விடுத்தான். 200

சுந்தரனும் அத்துணை துயர்க்கடலுள் ஆழ்ந்தான்
இந்திரன் மகற்குரிய தெய்தினன் இருந்தான்
வந்லதின் அருக்கன் மகன் மாரிகழி வுற்றும்
தந்தனை எனத்தனது தம்பியை விடுத்தான். 201

மற்றவன் அழைத்தருள மாருதியும் ஏனைக்
கொற்றவனும் வந்தனர் இராமன்அடி கூடி
எற்றது செயக்கடவ தென்றனர் இருந்தார்
முற்றிழையை நாடவிடும் என்றிறை மொழிந்தான். 202

அன்றனுமன் அங்கதன் அறிந்தருள்செய் சாம்பன்
என்றவர்கள் தம்முடன் இரண்டுகவி வெள்ளம்
சென்றனர்கள் தென்திசை யினிற்கடிது சென்றார்
பின்றலில் பிலத்திடை புகுந்தனர் பிரிந்தார். 203

*குன்றமும் நதிகளும் குழைந்த கானமும்
தென்திசை எங்கணும் தேடிக் காண்கிலர்
இன்றுயிர் விடுவதே நன்றென்றி யாவரும்
மன்றல்சேர் மயேந்திர வரையை மேவினர். 204

இறைவியாண் டிருந்தவா றெருவை வேந்தனும்
முறைமையான் வந்தனன் மொழியக் கேட்டபின்
அறைகழல் அனுமனும் அரக்கி வாய்பிளந்
தெறிகடல் கடந்துபோய் இலங்கை எய்தினன். 205

எரிவிழி இலங்கைமா தேவி யுங்கெடக்
கருநிற அரக்கர்தங் கனக மாளிகைத்
தெரிவையை எங்கணுந் தேடிக் காண்கிலன்
அரிமலர்ச் சோலைகண் டாழி காட்டினன். 206

மானவன் அறிந்தருள் மதுர மாமணி
சானகி அளித்தனள் விடையும் தந்தபின்
யானிவன் வந்துவீண் ஏகல் தீதெனப்
போனமா மாருதி பொழிலை வாட்டினன். 207

காட்டொரு வானரம் கடிகொள் சோலையை
வாட்டின தென்றுகா வலர்சென் றோதலும்
கேட்டனன் தசமுகன் கிளர்ந்த சேனையை
மூட்டினன் அவரெதிர் அனுமன் முன்னினன். 208

✽தொக்கரக் கரைத்துரந்து தோரணத் திருந்துபோர்
அக்கனைத் தரைப்படுத் தரைத்திரத்த மிக்கெழத்
தக்கசம்பு மாலியைத் தரைப்படுத்தி வெற்றிசேர்
பக்கநின்ற பஞ்சசேனை மன்னரைப் படுத்தினன். 209

மேகநாதன் வந்தெதிர்ந்து வேதநான் முகன்தரும்
நாகபாசம் வீசினான நாதனைக் கொணர்ந்துதம்
ஓகைவாளி ராவண ற்குரைத்தலும் உருத்தெழா
ஏகவாலின் அங்கியிட் டெரித்திர்என் றியம்பினன். 210

வாலின்வைத்த தீயைமாட மாளிகைக்கண் வைத்தபின்
சாலவந்து சீதையைப் பணிந்துசாக ரந்தனைக்
காலின்ஏகி வந்துதங் கவிக்குலத்து வீரராம்
வேலைசூழ வேல்இராமன் விட்டசோலை கிட்டினன். 211

மன்றல்ஓதி தந்தகோல மணியைநல்கி மாருதி
நின்றுவாச கங்கள்கூற நீடுவேல் இராமனும்
என்றின்மைந்த இப்பதாதி எழுகஎன் றெழுந்தபின்
தென்திசைக் கருங்கடல் திரைப்புறத்து மேவினன். 212

✽கடற்கரை விடுத்தனன் கவியின் சேனையோ
டடற்படை இராகவன் அரக்கன் ஏவலர்ல்
மடற்கம லத்தயன் மயனும் தானுமாய்ப்
படைத்தனன் இலங்கையைப் பண்டு போலவே. 213

மேலுயர் மண்டபத் திருந்து வெய்யவன்
கோலியல் குரங்கிவ்வூர் சுட்டதாம் என
மாலிய வான்முதல் அரக்கர் வல்லன
ஓலுயர் கடல்என உளையக் கூறினர். 214

✽மைந்தன் இந்திர சித்து மவுலியான்
தந்தை தன்னொடு கூறத் தடுத்தெதிர்
அந்த வெவ்அரக் கர்க்கயில் வேல்படு
வெந்த புண்ணென வீடணன் கூறினன். 215

✽இரணியன் என்பவன் யாவர் தம்மினும்
முரணியன் அவன்இவன் முனிய மாய்ந்தனன்
அரணிய நெஞ்சினன் அவன்தன் தேவியாம்
தரணியின் தாயைவிட் டருளத் தக்கதால். 216

என்றலும் இராவணன் எரியும் சிந்தையான்
நின்றனை யேல்நினை அடுவன் இங்கெனத்
தன்துணை நால்வரும் தானும் வீடணன்
வென்றிகொள் இராகவன் சரணம் மேவினன். 217

கடல்உடை இலங்கையின் அரணுங் காவலன்
உடையநீள் வரங்களும் மைந்தன் ஊற்றமும்
படையின தீட்டமும் பகர்தி நீஎன
அடையவாள் இராமனுக் கரக்கன் கூறினன். 218

வேண்டினன் ஒருவழி வேலை வேந்தனை
ஈண்டிய இலங்கைக்கன் றீதல் இன்மையால்
தூண்டினன் சுடுசரம் வருணன் தோற்றுவந்
தாண்தகை இராகவன் அடியில் வீழ்ந்தனன். 219

ஆனபேர் வேலையை அடைத்த பின்புயர்
மானவர் தலைவனும் வான ரேசனும்
கோனகர் இன்புறக் குன்றில் விட்டபின்
ஊனமில் இராவணன் ஒற்றர் மேவினர். 220

பற்றினர் சாரணர் சுகரைப் பன்முறை
சொற்றனர் கண்டவத் தூய மன்னவன்
விற்றொழில் வீடணற் கரசு விட்டதும்
கொற்றவற் குரைக்கெனக் கூறிப் போக்கினன், 221

*சேது பந்தமும் வீடணன் செய்தியும்
தூது சென்றவர் சொல்லத் தசமுகன்
ஓது வெவ்வுரை ஓத வுடுஒழித்
தேதம் இன்றி எழுந்த திரவியே. 222

*இலங்கை வேந்தனும் இராமனும் எறிபடை காண்பான்
இலங்கை மாளிகைத் தலையினும் மலையினும் ஏற
இலங்கை யான்முடி மணிபறித் திரவிசேய் அகன்றுன்
இலங்கை வேந்தனும் இராமனும் இருக்கைசென் றடைந்தார்.

நாலு வாயிலு நரரும்வா னரருமே நண்ணி
ஓல வேலையின் உருத்தனர் எனச்சிலர் உரைத்தார்
ஆல காலவேல் அரக்கனும் படைவகுத் தமைந்தான்
வேல்இ ராகவன் அங்கதற் றூதென விட்டான். 224

சீதை என்னும்அத் திருவைவிட் டுன்சிரம் பெறுகென்
றோதி விட்டனன் இராமன்என் றங்கதன் உரைத்தான்
போதி போதிஎன் றிராவணன் புகறலும் இராமன்
பாத பங்கயம் பணிந்தனன் எழுந்தது பதாதி. 225

அரக்கர் ஐம்பது வெள்ளமும் அனிகமும் உடையக்
குரக்கு வேந்தனும் அனுமனும் நீலனும் குறைத்தார்
அரக்கன் அவ்வுரை கேட்டுவந் தடர்த்தலும் அநுமன்
குரக்கு வேந்தர்மற் றிவன்சரம் படக் குலைந்தார். 226

இளைய வீரனும் இராவணன் ஈரைந்து சிலையும்
உளைய எய்தனன் உடம்பிடி அவன்உரத் துய்த்தே
வளையும் வாள்எயிற் றிராவணன் வவ்வுவான் சென்றான்
இளைய வீரனை மாருதி எடுத்துக்கொண் டகன்றான். 227

ஆளி ஆயிரம் பூண்டதேர் அரக்கன்வந் தடர்த்தான்
காளை மாருதி தோளின்மேல் இராமனுங் கலந்தான்
மூளும் வார்சிலை பத்துடன் முடிபத்தும் ஒழித்து
நாளை வாபொர என்றனன் நகர்சென்று புக்கான். 228

மூலத் தானையைத் தருகெனத் தூதரை முடுக்கிக்
கோலப் பள்ளியின் மேவலுங் குரவன்வந் தணுகிச்
சாலச் சாம்பினை முன்னமே சாற்றினன் என்றான்
மாலைத் திண்புய மகோதரன் மறுத்திது சொன்னான். 229

கும்ப கன்னனை அழைஎனத் தூதருங் கொணர்ந்தார்
எம்பி போர்இனி இயற்றுதி மனிதரோ டென்றான்
வெம்பு போர்க்களம் புகுந்தனன் வினவினன் இராமன்
தம்பி நான்இவற் றருகென்றான் தசமுகற் கிளையான். 230

வியந்து வீடணன் அழைத்தலும் வெய்யவன் மறுத்து
வசந்தனைப் பிசைந் தருக்கன்மா மகனைக்கொண் டகன்றான்
இயைந்த நாசிகொண் டிரவிசெய் மீண்டனன் இராமன்
உயர்ந்தொர் அம்பினால் அவன்தலை உவரியில் இட்டான். 231

அப்பு றத்தினின் மருத்தனைச் சனகர்கோன் ஆக்கிக்
குப்பு றத்தினன் மகோதரன் சீதையுங் குலைந்தாள்
எப்பு றத்திரா வணன்செவி யிருபதுங் கேட்க
இப்பு றத்துநின் றார்த்ததங் கிராகவன் சேனை. 232

✻கும்ப கன்னன் குறைந்தமை கூறினார்
தம்பி யோவென் றரற்றித் தசமுகன்
அம்பொற் றேர்அதி காயனை ஏவினான்
எம்பி ராற்கிளை யோன்எதிர் தாக்கினான். 233

✻எதிர்எதிர் தாக்கின இரண்டு சேனையும்
கதும்என இராகவற் கிளைய காவலன்
அதிர்கழல் புனைஅதி காயன் தன்னையோர்
சதுமுகன் சரத்தினால் தலையைத் தள்ளினான். 234

✻குரக்கு வேந்தர்கள் குன்றுகொண் டேவலும்
அரக்கன் மைந்தர் அனைவரும் மாண்டனர்
பரக்க வன்கொலைப் பாடுகண் டார்சிலர்
இரக்கம் எய்தி இராவணற் கோதினார். 235

அரக்கன் அவ்வுரை கேட்டலும் அங்ஙனே
இரக்க மற்றிந்திர சித்தை ஏவினான்
குரக்கு வேலையைக் கொன்றனன் கொன்றபின்
தரைக்கு நாயகன் தம்பியை எய்தினான். 236

ஏர ழுங்க இலக்குவன் மேனிமேல்
கூர ழுங்க நெடுஞ்சரம் கூட்டினான்
தேர ழிந்து தெசமுகன் தன்மகன்
போர ழிந்து விசும்பிடைப் போயினான். 237

✽இடம்தரும் இராகவற் கிளவலைக் கவித்
தடம்புனை எழுபது வெள்ளத் தானையை
அடங்கலும் அரக்கன்மா மதலை அல்லிடை
விடந்தரு நாக பாசத்தின் வீக்கினான். 238

போயினன் அரக்கனும் புரண்டு வானரர்
கூயினர் இராகவற் கனலன் கூறினான்
மேயினன் வருந்தினன் விகங்க ராசனும்
பாயினன் உரகனைப் படுத்திப் போயினான். 239

சென்றுதூது வர்சொலத் தெசமு கத்தவன்
தன்தரும் பெரும்படைத் தலைவர்க் கூயினான்
நின்றிலர் சென்றனர் நிசிசரர் களைக்
கொன்றனர் வானரத் தலைவர் குன்றினால், 240

✽உரையது கேட்டு மைந்தற் குரைத்தலும் அரக்கர் கோமான்
கரன்மகன் மகரக் கண்ணன் சென்றனன் காற்றி னம்பும்
வருணன தம்புங் கூட்டி மாயையால் விட்டான் மாயன்
பொருசரம் ஒன்றால் சென்னி போக்கினான் மாயை யோடும், 241

இற்றனர் அரக்கர் தானை இருபது வெள்ளத் தோடும்
செற்றவாள் அரக்கன் கேட்டான் மைந்தனைச் சேறி என்றான்
மற்றவன் தேரில் ஏறி வானரப் படையைச் சீறி
எற்றுவன் இனிஎன் றெண்ணி இலக்குவன் தன்னோ டேற்றான்.

அறுபது வெள்ளத் தானை ஆயிரம் தேரி னோடும்
வெறுவது செய்யக் கண்டு மயன்படை விடுவேன் என்றும்
உறுவலி அரக்கன் வானத் தொளித்தனன் ஓரான் தம்பி
எறிபடை பூசை செய்வான் எழுந்தனன் இராமன் இப்பால். 243

*உரைத்தனன் இராவணி இராவணற் குற்ற வாறெல்லாம்
வரைப்புய மகோதரன் வருகஎன் றேவினன் வலத்தால்
குரைத்தெழு வானரக் குழுவைவென் றிலக்குவன் சரத்தால்
பொருக்கெனத் தேரழிந் தந்தர விசும்பிடைப் போனான். 244

முட்டினன் கோதரன் முனிவரும்அமரரும் ஆகிச்
சிட்டனும் என்கொல் என்றுளம் திகைத்தனன் நின்றான்
விட்டனன் அயன்படை இராவணி இலக்குவன் மீதே
பட்டனன் பட்டவா றிராவணற் குவகையில் பகர்ந்தான். 245

ஏந்தெழில் இராகவன் இலக்குவன் பாடுகண் டேகிச்
சாய்ந்தனன் சாம்பனும் மாருதி தருதியால் என்ன
பாய்ந்தனன் மருந்துகொ ண்டமரிடை அயனுடைப் படையால்
ஓய்ந்தயா வருமுயிர் பெற்றனர் தூதர்போய் உரைத்தார். 246

❊யாவ திங்குநான் செய்வதென் றியம்பலும் மைந்தன்
ஆவ துண்டென அரக்கனும் அதுசெய்என் றமைந்தான்
தேவி சீதையாய்ச் சமைத்தபின் அநுமன்முன் சிதைத்துப்
போய் அயோத்தி சேர்குவன்என நிகும்பலை புக்கான். 247

ஆய வாறெலாம் அநுமன்வந் திராகவற் கறைந்தான்
மாயை யாம்என வலிக்கின்ற தறிந்தனன் வந்தான்
ஏய காரியம் செய்திர்என் றெழுந்தனன் இப்பால்
போயொர் மாயையால் வீடணன் இலங்கையில் புக்கான். 248

ஆன மாயைகண் டறிந்துவந் தரக்கர்கோன் உரைத்தான்
வான ரேசனும் இளவலும் வடதரு நீழல்
சேனை சூழ்தர நிகும்பலை வேள்வியைச் சிதைத்தார்
போன போதில்வந் திந்திர சித்தமர் புரிந்தான். 249

கறுத்தி ராவணி விடும்விடுங் கணையெலாம் கணையால்
இறுத்தொர் அம்பினால் கையுடன் வில்விழ எய்தான்
குறித்தொர் சூலத்தால் இலக்குவன் உயிர்கொள்வான் கொதித்தான்
அறுத்தொர் அம்பினால் அவன்தலை கொண்டனன் அகன்றான். 250

அடுத் துரைத்தனர் தூதுவர் அரக்கர்கோன் களம்புக்
கெடுத் திரங்கினன் மதலைதன் தலையிலா யாக்கை
படுத் தனன்தயி லத்திடை மூலமாப் படையும்
விடுத் துவந்தடி பணிந்தனர் ஆயிரம் வெள்ளம். 251

மூலத் தானையை இராமன்மேல் முடுக்கித்தான் குரக்குக்
கூலத் தானைமேற் சென்றனன் இராவணக் கொடியோன்
மூலத் தானைசென் றிராமன்மேல் முடுகலும் குரக்குக்
கூலத் தானைபோய் இரிந்தன குரைகடற் கப்பால். 252

வேர்த் திருந்தஅக் கவியெலாம் அங்கதன் மீட்டான்
காத்தி நீஎனத் தம்பியைக் காவலாய் விடுத்தான்
ஆர்த்த வெம்படை ஆயிரம் வெள்ளமும் அடையக்
கோத்த அம்பினால் ஏழரை நாழிகைக் குறைத்தான். 253

அத்த லைச்சிலை இளவலோ டரக்கர்கோன் அடர்த்தான்
வித்தி னன்சரம் பலபல இளவலும் மீட்டான்
எத்தி னன்நெடு மோகமாப் படைதொடுத் தெய்தான்
அத்த னச்சரம் ஆழியான் சரத்தினல் அறுத்தான் 254

அறிந்து கூறினன் வீடணன் அறுக்கும்என் றயில்வேல்
எறிந்த னன்அவன் மேனிமேல் இலக்குவன் ஏற்ருன்.
பிறிந்து போயினன் இராவணன் மாருதி பெயர்த்தும்
செறிந்த மாமருந் தளித்தனன் உயிர்பெற்ருன் சேயோன், 255

சென்று கூடினன் இராமனைத் தெசமுகத் தவனும்
வென்றி மூலமாத் தானைக்கு விருந்திட அமைந்தான்
பொன்றி ஞர்அவர் என்பது தூதுவர் புகன்ருர்
கன்றி ஞன்களம் புக்கனன் கவியெலாம் அவிய, 256

✻பூதலம் அளித்தோன் கூறப் புரந்தரன் கொடுத்தான் திண்தேர்
மாதலி கொணர்ந்தான் ஏறி மகிழ்ந்தனன் இராமன் இப்பால்
காதின தரக்கர் சேனை கவிப்பெருஞ் சேனை யோடும்
மோதரன் தன்னை ஆவி முடித்தனன் பகழி ஒன்ருல். 257

அந்தரத் தரக்கன் போஞன் அமலன்தேர் அணுக விட்டான்
மந்திர மாயை எய்தான் ஞானத்தால் வள்ளல் மாய்த்தான்
உந்தினன் சூலம் நேர்ந்த துதிரத்தன் உங்கா ரத்தால்
கந்தரத் தலைகள் பத்தும் கரங்களும் கணையால் கொய்தான். 258

கிளைத்தன சிரமும் தோளும் கேடிலான் எய்யஎய்ய
விளைத்ததோர் வரம்உண் டென்ன விரிஞ்சன்மாப் படையை விட்டான்
உளைத்தவன் தலத்து வீழ்ந்தான் உடன்பிறப் பென்னும் அன்பால்
இளைத்துவந் தடியில் வீழ்ந்தான் இராவணற் கிளைய காளை. 259

மயன்மகள் வந்துமாய்ந்தாள் வருதிஎன் றிராமவேந்தன்
புயவலி நிருதற்கூவிப் போற்றுதி தமையற்கன்பால்
இயமலீ யீமஞ்சேர்த்தி என்றனன் அவனும்ஏய்ந்தான்
செயமலி அனுமன் தன்னைச் சீதைபால் சேறிஎன்ருன். 260

சென்றனன் அனுமனேடு வீடணன் சீதைதன்பால்
நின்றவண் நிகழ்ந்தவாறு நிரப்பிமஞ் சனநீராட்டி
ஒன்றிய கலன்கள்பூட்டி உய்த்தனன் இராமன்நோக்கி
நன்றுநின் செய்திஎன்ருன் நடுங்கினள் எரிபுக்குய்ந்தாள். 261

ஏறினன் விமானம் தன்னில் யாவரும் இறைவிதானும்
மாறின வசந்தன் சேனை நின்றது மலர் அயன்பால்
கூறினன் அனுமன் வாங்கிக் கொணர்ந்தபின் குரிசில் தானும்
ஆறிய பரத்து வாசன் அணிமலர் இருக்கை சேர்ந்தான். 262

வரதனும் அநுமன் தன்னை வரன்முறை ஏவலோடும்
பரதனை எரிபுகாமல் பண்ணினன் மீண்டகாலை
எரிமணி விமானத்தேறி யாவரும் இளையகோவும்
அரிமலர்க் குழலினளும் இராமனும் அயோத்திசேர்ந்தார். 263

மண்ணுல கத்தின்உள்ள மாகதர் கேட்டார்கானத்
தெண்ணரும் உவகைகொண்டாங் கெழில்கொள்தாளத்தின்வைத்துக்
கண்ணிணை ஆடாகண்டங் கம்பியா புருவம்ஏரு
பண்ணிசை கலந்தவண்ணம் பாடினர் பலரும்சுற்ற 264

✽ கூடும்ஆவி யும்மெனப் பதத்தொ டோசை கூடிட
நீடுமன்னர் நின்றுநின் றிடந்தொறும் புகழ்ந்திட
ஆடுவார்கள் கானநூல் அறிந்துளோர்கள் ஆம்எனப்
பாடுவார் புகழ்ந்திடப் பழிப்பில்மைந்தர் பாடினர். 265

மானமா வராகநெஞ்ச ழிந்துவாடி ஓவிய
மானமா வராகமாளி வாரண மனஞ்செலக்
கானமா வசங்கிடாது கவ்வுபுற்கள் சோர்தரக்
கானமா வசஞ்செலக் கவின்கொள் மைந்தர் பாடினர். 266

வீரவீர னுஞ்சபா விருத்தரும் வியந்திடச்
சாரமான கீதநூல் தரித்துணர்ந்த தன்மையோர்
சோரமூவர் ஆதிதேவர் பாடுவார்கள் தும்புரு
நாரதாதி யாயுளோர்கள் ஏ நயமைந்தர் பாடினர். 267

சந்தமைந்த விஞ்சதிச் சருக்கமாக நாள்தொறும்
இந்தவண்ணம் வந்துபாட ஏறுசீர் இராகவன்
மைந்தர்என்னு மாறறிந்து மன்னர்நெஞ் சழிந்திடத்
தந்தம்உள் ளழிந்துமா சனங்கள்ஆவி வாடினர். 268

பாவியர்க்கு நண்ணரும் பதத்தைமைந்தர் பாடிடும்
காவியத்தி லேதம்மைந்தர் ஆதல்கண்டு காதலால்
ஆவிபற்றி ஈர்தரும் அலக்கண்எய்தி ஆறிடா
தோய்விலாப் பரதன்மற்று ளோர்கள்உள்ளம் வாடினர். 269

✽ பொன்னியல் சீரிய புதல்வர் பாடிய
இன்னிசை மருவிய இயல்கொள் காப்பியம்
தன்னிசை ஆதலால் தரள வெண்குடை
மன்னவன் மைந்தரை மகிழ்ந்து நோக்கினன். 270

✽ துன்னுதிரைமா கடல்கலங்கித் தெளிந்ததென்னத் துயராலே
மன்னன்கலங்கித் தெளிந்தவர்க்கு வரம்பிலாத மாவணியும்
பொன்னும் பூவும்புனை துகிலும் கொடுக்கக்கொள்ளார் தவர்பூண்டார்க்
கென்னபலமுண் டிவை யிறுல் ஏதும்வேண்டா எனஉரைத்தார்.

✽வயம்புனே இராகவன் மைந்தர் தம்மைஅம்
புயம்திகழ் விழிமலர் பொருந்த நோக்கிஇப்
பயந்தரு காப்பியப் பனுவல் இன்னிசை
இயம்பினர் யாவர்நீர் யாவர் என்றனன். 272

நும்பெரும் புகழினே நுனித்துக் கூறினேன்
வம்புயர் புற்றிடைப் பிறந்த மாமுனி
தம்பம்என் றவன்உரை தலையில் கொண்டுளோம்
எம்பெயர் குசலவர் என்று கூறினர். 273

நீடிய தன்உரு நிகர்க்கும் ஓரிரண்
டாடியிற் பாவையன் னருக் கங்ஙனே
பாடிய பனுவலால் பத்தின் மேலும்எண்
கோடிசெம் பசும்பொனே கொடுமின் என்றனன். 274

✽மூலமும் சாகந்தானும் பலங்களும் முறையிற் கொள்ளும்
மாலைய முனிவ ரோடே வனத்துறை வோமதானல்
சாலநீ அருளுகின்ற காஞ்சனங் காஞ்சி ரங்காய்
போலுமதெங்கட்கென்று புகன்றனர் புதல்வர் தாமே. 275

மன்னவர் வலியின் வவ்வார் வளர்மனைக் கள்ளர் கொள்ளார்
இன்னுயிர்க் கிறுதி செய்யா இழந்தபின் இரங்கல் வேண்டா
பன்னிய கல்விச் செல்வம் கண்படை இழத்தல் வேண்டா
உன்னிய பொருள தீட்டம் உடைமையின் இன்மை நன்றால். 276

பூரியர் தம்மை வேந்தர்ப் புரப்பிக்கும் புகழும் ஆக்கும்
சீரிய வளவ வுண்டித் தேவர துலகம் சேர்க்கும்
தூரிய ரேனும் சென்று பகைவரைத் துணிக்கும் வாளாங்
கூரிய திதன் வேறில்லை கொழும்பொன்நீர் கொள்மின் என்றான்.

குருதிவேல் தானை வேந்தன் குசலவர் தம்மை நோக்கி
வருதிரோ இன்னம் என்பால் மைந்தர்நீர் என்று கூறப்
பருதிவேல் தடக்கை வேந்தே பாடுதும் நாளும் வந்தென்
றரிமலர்த் தாரி னனே அகன்றுமா மைந்தற் போனர். 278

பன்னிய பனுவல் இன்சொல் குசலவர் பாடு கின்ற
இன்னிசை கேட்டு நாளும் இயைவுழி ஒருநாள் அந்தப்
பொன்னியற் சனகி பெற்ற புதல்வரென் றறிந்து வாங்கித்
தன்னிகர் புதல்வர் தம்மைத் தழுவினன் எழுவுத் தோளான் 279

மருந்தெனத் திகழும் இன்சொல் மைதிலி கற்புக் கந்த
அருந்ததி தானும் நாணும் ஆதலை அறிவ னேனும்
இருந்தழல் தன்னில் மூழ்கி இலங்கையில் அமரர் காணப்
புரிந்தது புவியுங் காணப் புரியுமேல் வருக என்பான் 280

*அன்ன தன்மைக் குசலவரை அருளினேக்கி அருமறைகள்
பன்னு தவத்து வான்மீகி தன்பால் போமின் எனப்பகர்ந்து
மன்னர் முதல மாசனத்தை விடுத்துப் போக்கி வளர்ஒளியால்
மின்னு முகில்போல் திருமேனி வீரன் பின்னும் இதுசெய்தான்.

தூதர் தம்மை வரக்கூவி அவர்க்குத் தூயோன் இவை உரைக்கும்
கோதில் குணத்து வான்மீகி தனக்கு நான் கூறினகூறும்
சீதை எனக்கும் தேவர்க்கும் ஏற்கச் சுத்தை யாய்இருக்க
ஓதும் உலகோர் பழிக்கஞ்சி அவளைத் துறந்தேன் எனஉரைமின்

வேலை சூழ்ந்த உலகத்து மேவு சனங்கள் முன்வேள்வி
கோலி முன்னே யான்அழைப்பக் கூடி யிருந்த கோதற்ற
சீல மேவு சானகிதன் திருந்து கற்பிங் கிவர்காண
ஞாலம் எல்லாம் கண்டதாம் என்று நவின்றேன் எனஉரைமின்

என்று தூதர்க் குரைப்பஅவர் ஏகி முனிக்கவ் வாறுரைப்ப
நன்று ஞாலத் தவர்காண நாளைக் காலை அழைத்தலால்
கன்று மனத்துச் சானகிதன் கற்புக் காட்டக் கடவள்என
வென்றி வீரற் கத்தூதர் விமல னுரைத்த வாவிளம்ப. 285

*வேதியர் வேந்தர்க் கெல்லாம் விடைகொடுத் தருளிநின்ற
காதலர் தம்மை புல்லிக் கதுமென எழுந்து காதல்
மாது மைதிலியி னேடு வரன்முறை வருக என்று
தூதரைஏவிப் பைம்பொற் சுடர்மணிக் கோயில் புக்கான். 283

இருநில முழுதுங் காண எரியிடை மூழ்க இன்னும்
வருகென மடந்தை தன்னை மன்னவன் அருளிவிட்டான்
வெருவுறு தழலின் ஆங்கண் வீழ்குறும் வண்ணங் காணு
தருளுடை யாரின் ஓடி அருக்கனும் அத்தம் சேர்ந்தான். 286

வகைமிகு மன்னன் எண்ணம் அறிந்தபின் வல்லி எல்லாம்
முகைமுகம் வீழ்ந்து கண்ணீர் சொரிந்தன முளரி யோடும்
தொகைமிகு மரமும் புள்ளும் ஒடுங்கின தொல்லை வேலைச்
செகதலம் என்னும் மங்கை திசாமுகஞ் சிவந்த தன்றே. 287

*துண்ணெ னும்படி துன்றிமுன் றேன்றிடுங்
கண்ணி கந்தவா கண்டன்ன காரிருள்
எண்ணி கந்த நிலையமு மெங்கணும்
விண்ணு மண்ணும் விழுங்கின போன்றவே. 288

தூப மென்குழல் தோகையர் தம்முடன்
காப்பியம் பயில் காமுகர் மேற்செல்வான்
கோப மன்மதன் முன்னர்க் கொளுத்திய
தீபம் என்ன எழுந்தது திங்களே. 289

✽கொர்ங்கவிழ் குமுதங் கூடி வாடிய
மங்கையர் நயனமுங் குவிந்த வாரணம்
சங்கொடு வலம்புரி தமர வண்டுசூழ்
பங்கயம் பலவும்வாய்ப் பட மலர்ந்ததே 290

தகைமிகும் உலகினில் சார்ந்து ளோர்வயின்
மிகுகொடை யவர்புகழ் விளங்கு மாறுபோல்
வகைமிகு பெரும்புகழ் வான மீமிசை
அகன்மதி ஒளிகெட அருக்கன் தோன்றினன். 291

காலையின் கடன்பல கழித்துக் காவலன்
மாலைவந் தடியிணை வணங்கு மாதவர்
சாலமா நிதிபெற அளித்துத் தண்குடைக்
கோலமா மன்னவர் குழாத்திற் சுற்றவே. 292

நலந்திகழ் உலகொரு நான்கின் மேவிய
வலந்திகழ் மன்பதை மருங்கு சூழ்தரத்
துலங்கிய நவமணிச் சுடர்கொள் ஆடகம்
இலங்குசிங் காசனம் இராமன் ஏறினன். 293

✽ அறைவே தங்கட் கறிவரியோன் அற்றை வைகல் கழிந்ததற்பின்
மறையோர் மன்னர் வைச்சியர்சூத் திரர்கள் ஆதி மண்ணுலகின்
உறைமா சனத்தை ஒழியாமல் ஒக்கக் கூடக் கொண்டிருப்ப
நிறைஞா னத்து வான்மீகி நெடுக நோக்கி இவைசெய்தான். 294

ஈனப் பழிக்குத் தான்அஞ்சி இறைவன் தன்னைத் துறந்ததற்பின்
மானக் கூர்வேல் நிறத்தூன்ற வைகல் தோறும் தளர்வாளை
கானிற் றெய்வங் கண்டிரங்கக் கண்க ளாறுய்ச் சொரிவாளை
ஞானத் தவத்தோன் பின்கொண்டு நாதன் சபையின் உட்புகுந்தான்.

எண்ணு திவளைத் துறந்தனன்இவ் இறைவன் என்பார் இறைவியைத்தம்
கண்ணால் கண்டார் எல்லாரும் கைக ளாலே கண்புடைப்பார்
பெண்ணு ளர்இத் துயர்உற்றார் இல்லை என்று பெரியோராம்
மண்ணோர் இவ்வா றுறைசெய்ய வானோர் எல்லாம் அழுதிரங்க. 296

*மிடித்தபைங் குழலினள் பாத மேவிட
உடுத்தவொண் துகிலினள் ஒசிந்து பின்வரத்
தொடுத்தவெம் புற்றிடைத் தோன்று மாமுனி
அடுத்தபேர் உலகுறை அவையின் மேவினன். 297

விரிகதி ரவன்ஒளி விளங்க வீசிய
எரிமணிப் பூணினன் இகல் இராகவன்
மருவும் வன்மிகத்தினின் வந்து தோன்றிய
அருமறை முனிவனை அடி வணங்கினன். 298

அணங்கிய லருமறை யாளன் அங்ஙனே
இணங்கிய ஆசனத் தினிதி ருந்தபின்
உணங்கிய மென்முகத் தொசிந்த நோக்கினன்
வணங்கிய அரசனை மகிழ்ந்து நோக்கினன். 299

காதலி கற்பினைக் ககன மீதலால்
பூதல மிசைஅருந் ததியும் போற்றுவ
ஆதலை அரசனே அறிவன் யான்எனக்
கோதிலா அருமறை முனிவன் கூறுவான். 300

அன்னது வாய்மையன் றுகிற் கங்கைபோல்
மன்னிய குலத்தொரு மாசு கூறுவான்
துன்னிய நரகிடைத் துணிவன் யான்என
முன்னிய அருமறை முனிவன் கூறினன். 301

முனைவனீ அருளிய மொழியை வானவர்
அனைவரும் யானும்முன் அறிவம் ஆயினும்
கனைகடல் உலகுளோர் காண்டல் வேண்டும்என்
றினையன இராகவன் எடுத்தி யம்பினன். 302

நாட்டிய உலகொரு நான்கும் ஓர்வயின்
ஈட்டிய சவைநடு விசைத்த அம்மொழி
வாட்டடங் கயல்விழி மடந்தை மைதிலி
கேட்டனள் நினைதொறுங் கிழியும் சிந்தையாள். 303

ஒன்றிய கேண்மையின் உவந்த போதினும்
கன்றிய மனத்தினல் கலந்த காதலன்
நன்றெனி னன்றுமாய் நலங்கொள் கற்பினை
அன்றெனி லன்றுமாம் ஆர்க்குக் காட்டுகேன். 304

பூதல மிசைஅருந் ததியும் போற்றிய
தாதலை அறிந்திருந் தவனி மீமிசைத்
திதிலென் கற்பினைத் திகழ்ந்து மேவிய
காதலன் இன்றெனில் கரியுண் டாகுமோ. 305

மறுத்தினி உறைப்பதென் வாயின் வைத்தநஞ்
சிறக்கிடின் அலதுயிர்க் கிறுதி செய்யுமோ
அறக்கொடும் பழிஉரைத் தருள வாயினற்
பிறர்க்கெனே நெஞ்சினைப் பிளந்து காட்டுகேன். 306

*தன் கணவன்செய் கொடுமையினைத் தானுட் கொள்ளாச் சானகிதான்
என் கணவன்செய் தனஎல்லாம் இதமாம் எனக்கின் றெனநினைந்த
பின் கணவன்தன் உடல்கண்டு பெரிதாற் றுது போய்வீழ்ந்து
புன் கணவனிப் பொறைதீர்த்தோன் பொற்றுள் வணங்கிப் புவிக்குறைப்பாள். 307

விளைப்பாசத்தை அறுத்தமுனி வேள்வி காத்து மிதிலைபுகுந்
தெனக்காயீசன் வில்லிறுத்தன் றெனைக்கைப் பிடித்த அன்றுமுதல்
புனக்காயாம்பூ நிறத்தானை அன்றி மற்றோர் புமான்களையான்
மனத்தால் வாக்கால் நினையேனேல் வழிதா எனக்கு மண்மகளே. 308

*வருந்துதி பயந்தநீ மற்றென் கற்பும்அவ்
வருந்துதி கற்பினை அனையதாய் விடில்
பெருந்துதி மாநிலம் பிளத்தி என்றனள்
இருந்துதி அமரரும் ஏத்துங் கற்பினாள். 309

பலதலை மாசுணப் பள்ளி மேவிய
நிலைபெறு கற்பினள் நீல மேனியள்
மலைமுலை ஆகத்தாள் மாரிக் கூந்தலாள்
அலைகடல் ஆடையாள் அவனி தோன்றினாள். 310

சேணில வியதல மடந்தை சீதைதன்
பூணுல வியபுயம் பொருந்தப் புல்லுரீஇ
வாணில வியகதிர் வழங்கல் செய்கலாக்
கீணிலைப் படலமுங் கிழியப் போயினாள், 311

தீதில தென்வயிற் றிகழ்ந்த திங்களம்
ஆதலி தென்கொல்என் றையம் எய்திடாக்
காதலி போனதோர் வழியுங் காண்கிலான்
பூதல மடந்தையைப் புலந்து சீறினான். 312

முனைவனோர் அங்கையின் முகந்து கொண்ட அக்
கனைகட லதனிடைக் கிடந்த காசினி
பனிமதி வேணியான் பாவம் போக்கிய
புனிதனோர் அடிக்கிடம் போந்த தில்லையால். 313

குயிற்றிடைப் புனைந்தனன் மவுலிக் கோளராத்
துயிற்றிடைக் கிடந்ததும் துங்க மாவின
தெயிற்றிடைக் கிடந்ததும் எங்கள் நாயகன்
வயிற்றிடைக் கிடந்ததும் மறந்த தென்கொலோ. 314

கடல்இரந் துரைப்பவும் காண்க லாமையின்
அடல்நெடுஞ் சிலைவளைத் தம்பு நான்விடப்
படர்எரி கொழுந்திய பவ்வந் தன்னில்ஓர்
திடர்கொலா மறைத்தது சீதை தன்னையே. 315

பூதலந் தன்னையிப் புணரி சேறெழப்
பாதலத் தலத்துடன் மிதிப்பென் பாவிஎன்
காதலி தான்மிக வருத்தங் காண்குறும்
ஆதலி னால்அதற் கொன்றும் ஆற்றலேன். 316

இன்னன உரைத்துரைத் திகல் இராகவன்
துன்னிய புவியொடு துனிசெய் காலையில்
பொன்னிகர் சததளப் புண்ட ரீகமேல்
மன்னிய பிதாமகன் வந்து தோன்றினன். 317

வானில மாருதம் வன்னி நீரெனும்
போனக மருவிஓர் ஆலின் பொற்றளிர்
மேனலத் துறுதுயின் மேவி மேலைநாள்
கானிலத் துலகொரு மூன்றுங் கண்டுளாய். 318

ஒப்பரு நிலைமையாய் உனக்கு யான்சில
செப்புவ துளதது சிறிது கேண்மதி
எப்பொரு ளாய்மிக இருண்ட வானகத்
தப்புற மாயுளே அடங்கு நின்உரு. 319

மின்னுளே பிறந்தொளிர் மேக மாம்என
நின்னுளே பிறந்துள நிலையில் யோனிகள்
உன்னுளே பிறந்திறந் தொளிப்ப தல்லதை
என்னுளே பிறப்பிறப் பென்ன லாகுமோ. 320

முந்தைநாட் புலத்திய முனிவன் மைந்தனுர்
தந்தமா தசமுகன் தன்னைக் காய்வதற்
கிந்தநாள் அமரர்வந் திரத்த லாலிஙன்
வந்துமா னிடவர்தம் வடிவில் தோன்றினய். 321

ஆதிநீ உலகெலாம் அழித்துக் காத்துறும்
போதுநின் உந்தியில் பூத்த தாமரைத்
தாதியல் தமனியத் தனிப் பொகுட்டினின்
மீதுநின் றுலகெலாம் விரிந்த தல்லவோ. 322

✽ஆத லால்அதுக் கறிவி கந்ததிப்
பூத லத்திடை புக்க மங்கைநின்
காதல் மங்கையால் அவளைக் காண்பதுன்
தீதி லாநிலத் தென்று செப்பினன். 323

அங்கண் வானகத் தமலன் ஆம்எனப்
பங்க யாசனப் பரன் உரைத்தபின்
துங்க வார்சிலைத் துணை நெடும்புயச்
செங்கண் வீரன் வெஞ்சினம் ஒரீயினன். 324

கதலி சூழ்பொழிற் கங்கை நாடனும்
மிதிலை மெல்லியல் பயந்த வெண்ணகைக்
குதலை மென்மொழிக் குசலவப் பெயர்ப்
புதல்வரைத் தழீஇ வேள்வி புக்கனன். 325

அம்புயத் தடத் தரிவையைப் புணர்ந்
தம்புயத் தின்வைத் தருளும் அன்பினன்
வெம்பரித் தொகைப் புரவி வேள்வியோர்
ஐம்பத் திற்றிரண் டவை முடித்தனன். 326

சேடன் ஆயிரம் சிரம் அசைந்திடக்
கோடு லாமதிக் குழவி அன்னகோட்
டோடை யானையின் உம்பர் ஏறியே
ஆடல் வாசியான் அயோத்தி மேவினன். 327

தன்குடைக் கிடைத் தலம்ஓர் ஏழையும்
பொன்பெய் மாரியான் பொது வறப்புரந்
தன்பர் சூழவாள் அரசர் போற்றநீ
டின்ப மேநுகர்ந் தினிதின் மேவினன் 328

25 யாகப் படலம் முற்றும்

---

## 25. கந்திருவர் வதைப்படலம்

இன்ன தன்மையா னினிய வையகம்
பன்னி ஆளும்நாள் பல கழிந்தபின்
கன்னல் மென்மொழிக் கவிர்கொள் செய்யவாய்
அன்ன கௌசலைக் கந்தம் உற்றதால். 1

பொன்னும் வேழமும் புரவி யீட்டமும்
இன்ன கொண்டுவந் திரைத்து நாள்தொறும்
மன்னர் வந்துதாள் வணங்கும் மன்னவன்
அன்னை தாளின்மேல் அழுது வீழ்ந்தனன். 2

*கொன்னேர் வைவேல் கோசலமன்னன் குலமங்காய்
அன்னே அன்னே ஐயனைநாடி அமர்நாட்டே
முன்னே போனாய் மொய்கடல்ஞாலம் முழுதாளேன்
பின்னே வந்தேன் வந்தனன்என்னாப் பேதுற்றான். 3

ஆவா வென்னும் அஞ்சிநடுங்கும் அமர்நாட்டிற்
போவாய் நீயோ என்றுபுழுங்கும் புனைபுன்னைக்
கோவா முத்தங் கோடுதருங்கோ சலநாடன்
பாவாய் என்னும் பார்மிசைவீழும் படர்கூரும், 4

கொந்தார் சோலைக் கோசலைநாடன் குலமங்காய்
சந்தார் மார்பன் தசரதகோமான் தனிவல்லி
அந்தோ அந்தோ ஐயனைநாடி அடியேனும்
வந்தேன் வந்தேன் வந்தனன்என்னா மாழ்குற்றான். 5

பொன்னே முத்தே பூதலம்ஏழும் புகழ்மேவும்
தன்னேர் இல்லாத் தசரதன்மார்பம் தனியாள்வாய்
அன்னே அன்னே என்றிருகண்ணீர் அறல்வார
என்னே என்னே என்றிளையோரும் இடர்உற்றார். 6

*அழலிடை மிதிப்பபோல் அடி நிலத்துறு
திழையணி முலைத்தடத் தெற்றி எற்றியே
குழலின மெனஇனைந் தேங்கிக் கோதிலா
மழலையஞ் சொல்லினர் மாழ்கி வாடினர். 7

செழுந்தடங் காரகில் சிறந்த சாந்துடன்
அழுந்திட விடமிக அடுக்கி ஆடவர்
பொழிந்தனர் அந்தநெய்க் குடங்கள் பொற்புற
எழுந்தது கொழுந்துவிட் டெமச் செந்தழல். 8

செழுங்கடல் ஒலிஎனச் சிறந்த மாமுகில்
வழங்கிய உரும்என வையம் எங்கணும்
முழங்கின முரசொடு முருடு பேரிகை
தழங்கின தண்ணுமை சங்கின் ஓதையே. 9

கரத்தணி சிரத்தினர் கலுழ்ந்த கண்ணினர்
இரைத்தெழு பலசனம் இரங்கிப் பின்செல
அரத்தமென் கரத்தியர் அஞ்சொல் வஞ்சியர்
விரைத்தருங் குழலியை விமானத் தேற்றினர். 10

இடரினை உழந்துழந் தேங்கிக் கண்ணினீர்
அடல்புனை மார்பகத் தருவி போல்உகக்
கடன்அவை கழிந்தபின் காதல் அன்னையைப்
படர்எரி மயானவெம் பள்ளி சேர்த்தினர். 11

சேதனர் புகழ்தரத் திலம்பெய் வார்புனல்
ஓதன பிண்டத்தொ டுகுத்த செங்கையான்
பூதனம் கோதனம் பொன்செய் பல்கலன்
மாதனம் மறையவர் பெற வழங்கினன். 12

இன்னநாட் கழிந்தினி திருந்த நாள்வயின்
கன்னன்மென் மொழியள் கைகயன் மடந்தையும்
துன்னிய குழல்சுமித் திரையும் என்னும்இவ்
அன்னையர் இருவரும் அந்தம் எய்தினர். 13

குடம்பல நெய்சொரிந் தெழுந்த கூரெரி
தடங்குழல் அரிவையர்த் தகனம் செய்தொரீஇக்
கடன்பல கழிந்தபின் கனக மாரிபோல்
அடங்கலும் மறையவர்க் கருளின் வீசினர். 14

*தானைமன்னர் தொழுசுழற்கால் சத்துருக்க னன்தனக்கும்
வானமருந் திறல்அருநகன் மகன்வான ரேசனுக்கும்
மீனமருங் கடல்இலங்கை வீடணற்கும் விடைஅருளி
ஏனமன்னர் புடைசூழ இலங்கொளியா சனத்திருந்தான். 15

மொய்கேச மதர்விழியார் முலைமுகடு பொருதடந்தோள்
கொய்கேச வரிமுரரூர்க் கொடைப்பரதன் திருமாமன்
கைகேயன் குலக்குருவாய்க் கலைமறைதேர் காத்தியனும்
பொய்கேதம் இல்லாத புகழ்முனிவேந் தவைசேர்ந்தான். 16

பூரணமாய் அகம்புறமும் புளகிப்பப் புனைதுளவ
நாரணன் தன் திருநாமம் நவின்றொருகால் மறவாத
ஆரணமா மறையோனை அடிவணங்கி நீவந்த
காரணம்ஏ துறைஎன்று கதிர்வடிவே லவன்உரைத்தான். 17

போதுபுனை கமழ்தாராய் புகழ்புனைகாந் திருவருன்றன்
மாதுலனை அமர்தொலைத்து வவ்விரைால் வளநாட்டை
ஏதியினல் அவரைஎறிந் தினிதாள்கை இயல்பென்னு
ஓதுமறை தெரிந்த உயர்முனிவன் உரைசெய்தான். 18

தக்கனுடன் புட்கரனைத் தடமகுடம் புனைவித்துத்
திக்குநிகழ் காந்தர்வரைத் திறல்முருக்கிச் சிந்துநா
டொக்கஉடன் அடிப்படுத்தி ஒருதனிநீ வருகஎன
மக்களுடன் பரதனையும் வரன்முறையே செல்கென்றான், 19

*குறைமதி அனையவெண் கோட்ட கோலமா
நிறைமதி புரைவன திலக நெற்றிய
சிறைமது கரங்களும் தேனின் ஈட்டமும்
அறைதரு மதநதிஅருவி வாரணம். 20

நிழலொடு சுளிவன நீள் கரத்தன
கழைஎதிர் சீறுவ கனக வோடைய
தழைம்செவி உடையன சாம ரத்தன
மழைஎன அதிர்வன மதுகை வாரணம். 21

சூட்டின வாரின துலங்கு செவ்வரக்
கூட்டிய உருளிய ஒளிபசும் பொனின்
கோட்டின கொடிஞ்சிய குதிரை நான்குடன்
பூட்டின செழுமணிப் பொலன்கொள் தேர்பல. 22

உருவன திசையொரு நான்கும் உட்குறப்
பொருவன பெருவரை பூழியாய் உகப்
பருவரை நிகர்வன படாகை தாழ்வுற
வருவன செழுமணி வயிரத் தேர்பல. 23

மறப்பரு நவமணி போலும் வண்ணத்த
உறப்பரும் பணிபொரு தென்ன உம்பரில்
பறப்பன போல்வன பதுமத் தோன்கணீர்
பிறப்பன பாரெலாம் பெயருந் தாளன, 24

உளைபயில் சிரத்தன உம்பர் பாய்வன
துளைபயில் கோடன குரலின் தோற்றத்த
வளைபயில் முகத்தன வாயு வேகத்த
தளைபயில் தார்ச்சுரர் எண்மர் தந்தன. 25

நிலத்தடி இடப்பொரு தென்ன நீண்டவான்
தலத்திடை மிதிப்பபோல் சாலத் தாவுவ
வலத்தினும் இடத்தினும் மரபில் பாய்வன
குலந்தினில் பிறந்தன குர துரங்கமே. 26

ஓதத்துப் பிறந்தன ஊகத் தாயின
வேதத்துப் பிறந்தன வெள்ளை வானிறம்
பாதத்து முகத்தினும் பயின்ற பான்மைய
வாதத்தில் கொடியன கடிய வாசிகள். 27

சூர்முகத் தனல்உமிழ் தோம ரத்தினர்
கூர்முகப் பகழியர் கொதித்த நெஞ்சினர்
கார்முகக் கரத்தினர் கழலர் கல்எனத்
தார்முகத் தொழுபவர் தறுகண் வீரரே. 28

கழுவினர் வளையினர் கப்ப ணத்தினர்
எழுவினர் திகிரியர் எரியும் ஈட்டியர்
மழுவினர் வாளினர் வயங்கும் வெம்புலிக்
குழுவினை நிகர்ப்பவர் கோல வீரரே. 29

இனையன கரிபரி இரதம் ஆளரி
அனையவர் அந்நகர் அகன்று முன்செலப்
பனிமதி வெண்குடைப் பரதன் தானும்ஓர்
தினகரன் கதிர்மணித் தேரில் ஏறினன். 30

அந்தரத் ததிர்வுற ஆர்க்கும் ஆர்ப்பினர்
இந்திர தனுஎன இலங்கும் வெஞ்சிலைத்
தந்திரத் தலைவரும் தழுவிச் சூழ்வர
மைந்தரு மணியணி வையம் ஏறினர். 31

அமிழ்தினு டிழிதரும் அயோத்தி மாநகர்
இமிழ்திசை வாயில்விட் டியங்கும் வெம்படை
கமழ்தரு துழாய்மதுக் கண்ணி யோன்நுகர்ந்
துமிழ்தரும் உலகினை ஒத்த தால்அரோ. 32

மட்டகத் தலர்மலர் வாள மால்வரை
கட்டின மதகரி கலங்கக் கட்செவி
கெட்டகத் தலமரக் கிளர்ந்த தால்மிகு
ஒட்டகத் தணிந்தன நிசாள ஓதையே. 33

முரசொலி கிளையொலி மூரி யானையின்
புரசொலி பொலன்செய் தாளத்தின் பொற்பொலி
அரசொலி நெடும்பரி அனுமத் தொல்ஒலி
பரசொலி சங்கொலி பரந்த தெங்குமே. 34

பரதன தெழுப்படைப் பரப்பி னாலிந்தத்
தரைநதி சுவறின சாற்ற வேண்டுமோ
சுரநதி சுவறின தூளி யால்மறைந்
திரவிதன் எழுபரி யேங்கிற் றில்லையால். 35

பாகைவென் றடர்வன பரு மருப்பன
மோகவெங் கரிசொரி மும்ம தத்தினால்
ஓகைவெம் புனல்பரந் தோட நீடிய
வாகைவெம் பாலைபோய் மருதம் ஆனதே. 36

எரிதவழ் பாலையும் இருங் குறிஞ்சியும்
முரிதவழ் முல்லையும் முயங்கு நெய்தலும்
ஒருதனி கழிந்தபின் ஓடை யானையான்
மருதமென் சிந்துநா டதனின் மன்னினான். 37

*வந்துபர தன்தனது மைந்தருட னேயும்
சிந்துவள நாட்டினிடை விட்டசெயல் எல்லாம்
புந்திகரு தச்செயல் புலப்பட நலத்தால்
கந்திருவர் கேட்டனர் கடுத்தவத னத்தார். 38

கருத்தெழு சினத்தினர் கரத்தொடு கரத்தைப்
பொருத்திவட வெற்பன புயத்திடை புடைத்தே
முரித்தபுரு வத்தினர் முழங்க நயனத்தூ
டெரிப்பொறி தெறித்திட இடித்தென நகைத்தார். 39

அன்ற மரளி ..........................................லரக்க
ரென்றெமை நினைத்தனர்கொ லென்னவுரை செய்யக்
கன்றிய மனத்தினர் கடுத்தவச னத்தார்
நன்றிதுகொல் நன்றிதுகொல் என்றனர் நகைத்தார். 40

பன்னிய புகழ்ப்பரத னைப்பட முருக்கி
மன்னியதன் மைந்தரையும் வாளுடை வலத்தால்
வென்னிட முடுக்கியிவர் தம்மைவர விட்டோன்
தன்னுடன் மலைப்பமிது வேசரத மென்றார். 41

செழுமின்மணி யோடைய திசைக்கரிக ளோடுங்
குழுமின குலக்கிரி குலைந்திட நடஞ்சேர்
கெழுமின நெடுந்திசை கிழிந்திட வுரப்பா
எழுமினென லுங்கடி தெழுந்தது பதாதி. 42

.............. வச்செவி மழைத்தெழு மலைக்குலத்தினை மலைப்பன
உருத்துழிக்கக னத்தினு முடுக்குலத்தினை யுதிர்ப்பன
எருத்திருப்பவர் தமைக்கடி தெடுத்துவெற்புட னடிப்பன
கருத்தினைக் கொடுக டற்றுரைகை..............க்கரி. 43

*கணக்கிரட்டிய கடுப்பொடு கனற்புறப்பட விழிப்பன
மணிச்சிரத்தினு முரத்தினும் வனப்புடைச்சுழி வளர்ப்பன
கணிப்பின்மிக்கன பரிப்பொடு கரிப்படப்பட மிதிப்பன
பணித்துரைத்த பதுமத்தொகை பதிற்றிரட்டிய பரித்தொகை.

பனிக்கதிர்ப்பகை நிகர்ப்பன பனைக்கொடிப்பல பரிப்பன
கனற்புறப்பட விழிப்பவர் கதிப்புறத்தினில் நடப்பன
மனத்தின்முற்படு பரித்தொகை வகுப்புறப்புனை வனப்பின
வினத்தருக்கரி ரதத்தினு மிலக்கணத்த விரதத்தொகை. 45

வடக்கில்வெற்பொடு திசைக்கரி மலைக்குலத்தினை மலைப்பவர்
கடைக்கணுற்ற வடவைப்பயில் கனற்புறப்பட விழிப்பவர்
தடக்கையிற்றிகிரி தாங்கிய தனுக்கழுக்கணை தரிப்பவர்
உடுக்குலத்தொகைக ளெத்தனை யுரைக்கிலத்தனை படைத்தொகை

*இனையதம் படையோர் நான்கும் எண்டிசா முகமும் சூழ்ந்து
துனைவன முன்பு செல்லத் தோமற்ற திருந்த நாளிற்
கனைகுரற் கலினப் பாய்மாக் காந்தவ மன்ன ரெல்லாம்
புனைமணித் தேரிலேறிப் பொன்னகர்ப் புறத்துப் போந்தார். 47

அதிர்ந்திடுந் திசைக ளுன்கும் அல்லிடை வில்லும் வாளும்
உதிர்ந்திடும் பகலே யும்பர் உடுவெலாம் இரவி தன்னோ
டெதிர்ந்திடும் திசைக ளுன்கும் இரவிதன் கரங்க ளெல்லாம்
உதிர்ந்திடும் கூகை பாட லொழியுமோ முடிவ தானுல். 48

அல்லொளி கடல்கள் நான்கின் ஆர்ப்பொலி யன்ன வீரர்
சொல்லொளி துவன்றி யார்க்குந் தூரியத் தொலிகைம் மாவின்
வல்லொலி காக ளத்தின் வயங்கொலி மதுகை வீரர்
வில்லொலி மயங்க வந்து வேந்தர்வெங் களக்தி லானுர். 49

தூக்கிய மசத்த வாய தோல்கொடு தோல்க டானும்
நூக்கிய புரவித் திண்டேர் நுவல்பரித் தேரி னேடும்
வீக்கிய கழற்கால் வீரர் வேஞ்சிலை வீர ரோடும்
தாக்கின திரண்டு சேனை சரமழை மயங்கிற் றன்றே. 50

வேலினைச் சிலவர் வாங்கி விடுதலும் சிலவர் வில்லாற்
கோலினை வாங்கிக் கொண்டு குறைப்பர்வெங் குதிரை......த்
தோலினை விடுவர் விட்ட தோலினுல் துரகந் தன்னை
வாலினைப் பற்றி யெற்றி மண்ணின்மேல் மலைதல் செய்வார். 51

இருவர்சென் றொருவர் தம்மை யிகல்செயார் இகல்வா ளோச்சி
ஒருவரொ டொருவர் தாக்கி யுறுக்குவ ருதிர வாரி
கிரிவமும் தோளு மார்பும் கிளர்ந்திழி தரவும் அஞ்சார்
வெருவர விழித்து நோக்கி வெங்கணை மாரி பெய்வார். 52

பையெடுத் தனந்த னேந்தப் பங்கய மனைய செங்கண்
மையெடுத் தனைய மேனி மானவன் வகுத்த சேனை
நெய்யெடுத் திலங்கு பாண நெகிழ்தலின் ஞெகிழி போலக்
கையெடுத் தனந்த கோடி கவந்தம்நின் றாடிற் றன்றே. 53

காந்தவர் சேனை யெல்லாம் களத்திடை மடியக் கண்டு
வேந்தரும் சிலைகோல் வாங்கி விரைபரித் தேர்மேல் விட்டார்.
நாந்தக வுழவன் பின்னோன் நவமணிக் கழற்கால் வீரன்
யாந்தளின் பாரம் தீர்ப்பான் பரதனும் இதனைச் சொன்னான். 54

*தந்திரமுங் கரிபரியும் தமனியமா மணித்தேரும்
அந்தரமுற் றிகழ்ந்தசெய லறிந்திருந்து மகலகிலீர்
உந்திருமற் றுயிர்பெறிலங் குழுதிருந்து முண்ணலாம்
கந்திருவர் போமென்னக் கனைத்துருமின் னனகத்தனரால். 55

*உன்னையுன தானையுட னேடவொர் சரத்தால்
வென்னிட முருக்கிவிழ லரிதல வதுவேண்டேம்
என்னவுரை செய்தனைகொ லேனுமறி வாரா
மன்னவநின் மைந்தருடன் மறிதருக வென்றார். 56

*வெங்கண்மத கரிநிரைகள் மிகப்பெரிய வேனும்
சிங்கஇளங் குருளையொடுஞ் செருச்செய்வ தங்குளதோ
இங்கிவர்கள் இளையரென விகழலென வுரையாத்
துங்கநெடுஞ் சிலைவளைத்துச் சரங்கள் சொரிந்தனரால் 57

*கரியற்றன கொடியற்றன க்கனத்திடை காய்வனப்
பரியற்றன பணையற்றன படையற்றன விடையே
வரியற்றன சிலையற்றன மறமற்றனர் வயவோர்
கிரியற்றன வெனவற்றன கிளர்பொற்கொடி யணிதேர் 58

பொருகந்திரி விதமாயுள புணரிப்படை விரவோ
ரொருகந்திரி விதமாயுள வுயர்வெங்கணை விடலான்
மிருகந்திரி கிரிபோலுயர் மிகுதேர்தனின் மிசையே
வருகந்திரி வரும்வார்சிலை வளைத்தார் செருவிளைத்தார். 59

பாருடின கழுகாடின படர்பச்சு தரப்பே
ராருடின அலகைக்குலம் அடர்காகம துருவம்
மாருடின வேருடினர் மகிழ்ந்தாடின மறவோர்
நீருடின திசையெங்கணு நிவந்தாடின கவந்தம் 60

✽உரம துடையபுய வுகள மவைமலர வுரிய தனுவளைய வளையவஞ்
சரம திவர்கள்விடில் அவர்க ளவைகொடவை தகைவர் சமரமிகுசமரமுற்
கரம தவர்கள்விடில் இவர்க ளவைகொடவை கடிவர் தகையினெடுநெடியதோ
மரம தவர்கள்விட அவைகொ டவைமலைவர் அவர்க ளிவர்கடமின் மறம்விடார்.

இருவ ரொருவழியி னிகழ லிலர்முடுகி யிகல்செய் பவர்தமது மறம்விடார்
ஒருவ ரொருவழியின் முடுகி யுருமினென உரறுகுர லினர்களுலகெலாம்
பருவ மழைமுகில்கள் பொழிவ தெனநெடிய பரதன் விடுபகழி மழையினுல்
வருமின் வருமினென வருவன் வருவனென வெருவி மலைமுழையி னுழைவரால்.

மதுகைளப தனமகளிர் மகிணர்பட மருவுமுட நிருவி யிடைவிடா
துதர நதியிடையி னெழுகி யுயிரொழிவ ருரகபணநெளிய வுடுவும்வெங்
கதிரு மதியுமுக வதிரு மதகரட கரியு மிகுகனக விரதமும்
குதிரை யணியினொடு துணிய வொருவனெரு கொடிய பகழிவிடு களமெலாம்.

✽முரித ருஞ்சிலை மூன்று கோடிகந்
திருவர் பட்டஅச் செங்க ளந்தனில்
பரிகள் பட்டவும் பகழி பட்டுவெங்
கரிகள் பட்டவும் கணக்கொன் றில்லையால்- 64

ஓரி டங்களும் ஒழிவு றுதுவெம்
பேரி டங்கரின் பிணையல் தாதுடைக்
காரி டங்கொள்வெங் கழுது மோரியும்
பாரி டங்களும் பருந்தும் ஆனதால். 65

அந்த ரத்தினின் றுடு காகவெம்
பந்த ரிற்கொடைப் பரதன் அங்ஙனே
கந்த மிக்கபைங் கமலக் கையினுல்
மைந்தர் தம்மையே வாகை சூட்டினுன். 66

தாது சேர்மலர்த் தமர வண்டுசூழ்
சீத மென்புனற் சிந்து நாட்டினில்
ஆதி வானவன் அளகை போலவே
ஏத மில்லவூ ரிரண் டியற்றினுன் 67

✽திக்குநிகழ் புகழ்ப்பரதன் திதிவாரந் தினம்என்ப
மிக்கமறை முறைமையினுல் வேதியரோ டினிதாய்ந்து
வைக்கதிர்வேல் புட்கரற்கு புட்கலா வதமும்விறல்
தக்கனுக்குத் தக்கலா புரமும்அவை தான்கொடுத்தான், 68

மானவன்றன் தனிமகர்க்கு மதியனைய வெண்குடைக்கீழ்ச்
சோனைமுகில் சொரிந்தெங்கும் தொகுநறையார் பயிர்விளைக்கும்
ஆனபுகழ்ச் சிந்துநா டடிப்படுமா றையாண்டங்
கேனைமன்னர் தொழுதிறைஞ்ச இனிதிருந்தான்என்பரால் 69

விம்பமதி வெண்குடைக்கீழ் விரையளியினிரைஅலா
வம்பலர்தார் மைந்தருக்கு வளநர்டாண் டடிப்படுத்திக்
கம்பமத கரிபரிதேர் கனகமணி மிகஅருளி
அம்பொனெடு மணிமுடியான் அயோத்திநகர் போய்ப்புக்கான்.

பனிமதியே நிகர்வதனப் பங்கயக்கட் பணிமொழியார்
கனகமணி புனைகாம்பிற் கவரிகொடு பணிமாறத்
தினகரன்போல் ஒளிவீசும் செழுமணியா சனத்தின்மிசை
இனிதிருந்த கனைகழற்கால் இராகவனை அடிபணிந்தான். 71

(சுவடி) 26 காந்திருவர் வதைப்படலம் முற்றும்

## 27. குமாரர் முடிசூட்டு படலம்

காரிருண்ட தெனுநிறத்துக் காந்திருவர் கடற்சேனை
போருடைந்து புறங்காட்டப் பொருதவரைத் தொலைத்ததுவும்
வாரணிந்த கனைகழற்கால் மைந்தருக்கு வளநகரம்
ஓரிரண்டு வகுத்ததுவும் உரைத்தான்அவ் விரைத்தாரான்.

கரர்மலியக் கயல்உகள்நீர்க் கடற்காரா வதமுமலர்ச்
சரோருகமேற் சங்குறங்குஞ் சந்திரகாந் தமும்என்னும்
பராவரிய வளநாடும் பணித்தருள்நீ எனப்பரதன்
இராகவனை அடிபரவி இறைஞ்சிஇன்ன தியம்பினன். 2

அந்தஉரை கேட்டுமகிழ்ந் தடற்பரதன் முகநோக்கித்
தந்திரமுங் கரிபரியுந் தரைப்படவன் றெருகணையால்
இந்திரனை அமர்தொலைத்தோன் இகல்மலைத்த பெருந்திறலோன்
மைந்தருக்கும் வளநாடு வகுத்துரைமின் எனவகுத்தான். 3

கந்தமிகு நறுந்தெரியல் கழல்புனையங் கதனும்இகல்
சந்திரகே துவுமென்னச் சமரமிகு தனியானை
இந்திரனை அமர்தொலைத்தோன் இகல்தொலைத்த இலக்குவன்தன்
மைந்தர்அவர் இருவருக்கு மணிமகுடம் புனைந்தனனல் 4

மறங்காலும் கரிபரிதேர் வயவீரர் எனும்நான்கு
கறங்காழிப் படையாவிக் கழல்புனைஅங் கதனைக்கொண்
டிறங்காத சிலைஏந்தி ஏழிரண்டாண் டிடைபிரியா
துறங்காத வில்லியையும் உடன்போகென் றுரைசெய்தான். 5

ஐங்கொலைய வாறனைய வதிமதத்த அனல்உமிழும்
பைங்கண்ண ஏழுறுப்பும் படிதோயும் பான்மையன
எண்திசையில் வெங்கரியோ டமர்விளைப்ப வென்பதெனக்
கும்பமணி ஓடையன தடங்கும்பத் தனிக்கரிகள் 6

நிழறெறுவ தனைசெவிய நிலந்தோயும் நீள்கரத்த
சுழல்விழிய சூற்பேயும் தொகைப்பருந்தும் பின்செல்லும்
அழல்விழிய வதிமதத்த வயின்மருப்பின் அடல்வீரர்
கழைசுழிவ புகர்முகத்த கடகரிகள் பலகோடி. 7

கோகன முகைஅனைய கொழுங்கனகக் கொடிஞ்சியன
பாகனக மதியறியும் பரிபூணும் பான்மையன
நாகமதி நகங்குழைய நடந்தோடுந் தடங்கால
மாகனக நெடுந்துவச மணித்திண்தேர் சதகோடி. 8

இவனத்திற் பிறந்தனபே ரிளங்கிளியி ரிறத்தவிந்திர
புவனத்திற் பறப்பனபோல் பலதலைய பணிப்பிடரில்
புவனத்திற் குரம்பையாப் புட்குரல புனைமணிய
கவனத்த வெண்கவரிக் கற்றையன கலினமா. 6

மயிற்கழுத்தின் வண்ணத்த வளைநிறத்த தாமரையின்
பயினிறத்த மாளவத்தும் பல்லவதேசத் தும்பிறந்த
வெயில்நிறத்த வெண்கவரி புடைதயங்கு முடைதயங்கும்
குயில்நிறத்த கொய்யுளைய குரகதங்கள் பலகோடி. 10

சிந்துவினன் கரைப்பிறந்த திரைக்கடலிற் கலந்தந்த
பந்தியினின் றகலாது பானுகரும் பால்நிகர்த்த
சந்தமிகு சுழியுடைய தணிப்பரிய வதிமனத்த
குந்தமுடன் மிசைகொள்வோன் குரலறியும் குரகதங்கள். 11

உருத்துநெடுங் கதிர்வேல்கொண் டுரங்கிழிப்ப தல்லாது
மிருத்துவரி னுங்கூடி வென்காட்டி மீளாதார்
எருத்துவருங் கழல்வீரர் இரியமதக் கரிஎறியும்
மருத்துவினை நிகராகும் வயவீரர் அநேகரால். 12

புனைமணி யவியமார்ப்பப் புரிவளைகா களமுழங்க
இனையபரித் தானையுடன் இகல்வடிவேல் இலக்குவனும்
துனைபரித்திண் தேர்ஏறிச் சுடர்இயங்கு குடதிசைமேல்
கனைகழற்கால் மைந்தருடன் கமழ்காரா வதமடைந்தான். 13

*மதிவலாருடன் மயனுடை மறைமுனி நெறியே
திதியும்வாரமும் தினமும்என் றின்னன தெரிந்து
கதிநெடும்புனல் தழுவுகாராவ தமென்னும்
பதியமைத்தனன் பவளக்காற் பனிமதிக் குடையான். 14

நெடுந் தெருக்களும் நியமமும் நீள்குறு மறுகும்
தடங்கொள் கூலமும் சந்தியும் சதுக்கமும் தவனக்
கொடுஞ்சி வெண்கொடிக் குரகதக் குருமணி நெடுந்தேர்
தொடுந் தடங்கொடித் தோரண வீதிகள் ஒருபால். 15

கரிகள் தங்கிய கதிர்மணிக் கூடங்கள் ஒருபால்
விரிநெடுங் கொடித் தேரணி வீதிகள் ஒருபால்
பரிகள் தங்கிய பருமணிப் பந்திகள் ஒருபால்
வரிகொள் வெஞ்சிலை வயவர்கள் மறுகுகள் ஒருபால் 16

பனகர் வாழ்திரு நகரமோ பருமணி அதனுல்
தினக ராதியர் நகரமோ சேடியர் நகரோ
அனக இந்திரன் அமர்அம ராபதி யதுவோ
கனக மாமதில் அளகையோ உவமைகாண் கிலமால், 17

ககன மங்கையர் கழுத்தெனக் கமுகினம் நெருங்கும்
வகை நெடும்புனல் வளநகர் வருபவர்க் கெல்லாம்
நக லருஞ்செழு நவமணி ஒளிநனி மயங்கிப்
பகலும் ஏனைய திரவும்என் ருெருபரி சிலாத. 18

படைத்த மாமுனி பார்எலாம் ஒருவழிப் படுத்தி
அடைத்த தொக்கும்இவ் வணிநகர்அரமியத் தணிந்த
மடக்கண் மங்கையர் முகம்என மதியின்மேன் மறுவைத்
துடைப்ப போன்றது துகில்அணி மாமணித் துவசம். 19

மதுர மென்மொழி மடந்தையர் வடம்பரிந் திட்ட
கதிர்கொள் நித்திலக் கனமணி எங்கணுங் கலந்தே
உதிர்த லால்உம்பர் இழுக்கிவீழ்ந் தொளிர்கதிர் சிதறி
மதியும் மீன்களும் கிடந்தவா போன்றன மறுகே. 20

அன்ன மாநகர் அங்கதற் கருளிஆங் கவற்குப்
பொன்னும் வையமும் புரவியும் கரிகளும் புகர்வேல்
இன்ன வீரரும் அளித்துமீண் டிராகவற் ருெழுவான்
அன்ன மாநில அயோத்திமா நகர்சென்று புக்கான். 21

தடங்கண் மங்கையர் தமனியச் சாமரம் இயக்க
மடங்கல் ஆசனத் திருந்தவாள் இராமனே வணங்கிக்
கிடங்கு சூழ்நகர் இயற்றியக் கிளர்முடி மதலேக்
குடங்கு சேனைநான் குடன்கொடுத் ததுவெலாம் உரைத்தான்.

அன்ன தம்பியோ டினிதுரைத் தகமகிழ்ந் தொருநாட்
பன்னு செஞ்சிலே இராகவன் பனிக்குடைப் பரதன்
தன்னேச் சந்திர கேதுவைச் சந்திர காந்தை
என்னு நாட்டிடை இருத்திநீ வருதிஎன் றிசைத்தான். 23

யானே தேர்பரி எறிபடை வயவர்என் றியம்பும்
சேனை நான்குடன் செழுமணித் தேர்தெரிந் தேறிச்
சோனை மாமுகில் ஆப்எனத் தூரியந் துவைப்ப
ஆன மைந்தனே டயோத்திமா நகர்இகந் தகன்ருன். 24

பாழி வெண்கொடிப் பருமணிக் கொடுஞ்சிய நெடுந்தேர்
ஆழி யானெரிந் தருவரைக் குலம்எலாம் அடையப்
பூழி யாயின புரவியின் விலாஙயால் புகர்வெஞ்
சூழி யானேயும் மதத்தினுல் துகள்அடங் கினதால். 25

கான் குலாவிய கனவரை நெரிதர நகரி
மீன் குலாவிய தரைநதி கனல்எழ விரைதேர்
வான் குலாநதி சுவறிய வழங்குவெம் படையாம்
நான்கின் ஓதையால் நரலைவாய் ஒலிஅடங் கினதால். 26

பாலை மாநிலம் கடந்துவெங் குறிஞ்சியிற் படர்ந்து
சால முல்லையும் நெய்தலும் தணந்துபோய்த் தமர
மாலை வண்டின முரல்வன மருதமென் பணைசூழ்
ஏல வார்பொழில் சந்திர காந்தைசென் றிறுத்தான். 27

செம்பொற் கோபுர வாயிலில் செழுமணி நீலத்
தம்பத் திற்குளிர் தரளமென் சாளர முகப்பின்
விம்பக் கோமள வெயின்மணி மாளிகை விதான
அம்பொற் சந்திர காந்தம்என் றணிநகர் அமைத்தான். 28

✽சந்திர கேதுவைத் தானை நான்குடன்
இந்திர மாநகர் இடை இருத்தியே
பந்திவெம் பரியுடைப் பரதன் கைதொழு
தந்தமில் இராகவன் அடி பணிந்தனன். 29

இயன்றவா றியம்பினன் இருந்த காலையில்
பயின்றவேல் மன்னர்க்குப் பரதன் தன்னுடன்
வயின்றொறும் விடைகொடுத் தருளி மாமலை
குயின்றபொன் மணிமதிற் கோயில் மேவினன். 30

கனைகடல் உலகெலாம் கலைகள் தம்மொடு
துனைபரி வல்லியந் துவன்றி நீர்உண
இனையநாள் ஆண்டர சியற்றி எல்உமிழ்
வனைகழல் இராகவன் மகிழ்ந் திருந்துழி. 31

குமாரர் முடிசூட்டு படலம் முற்றும்.

---

## 28. மறலிப் படலம்

தென்திசைக் கடவுளும் தேவர் ஏவலால்
அன்றுதன் உருவொழிந் தயோத்தி மாநகர்க்
குன்றினை அனையதோர் கோயில் வாசலில்
ஒன்றினன் முனிவர்தம் உருவங் கொண்டுளான். 1

தடங்கைவேத் திரத்தினர் தழைந்த தாடியர்
அடங்குறு திடியென ஆர்க்குஞ் சொல்லினர்
மடங்கலை அனையவர் வரிந்த கச்சையர்
படம்புகு மிலைச்சரைப் பரிந்து கூவினன். 2

மறங்கிளர் கனல்விழி வாயில் காவலர்
இறங்கினர் தொழுதபின் இலங்கு நூலினன்
முறஞ்செவி யானையாய் முனிவன் வந்துநின்
புறங்கடை யான்எனப் புகல்திர் போய் என்றான். 3

போயின காவலர் போற்றி மன்னவ
மேயின துறவினேர் வேத மாமுனி
கோயிலின் மணிமதிற் கொடிகொள் கோபுர
வாயில்நின் றனன்என மதித்துக் கூறினர். 4

வரமுனி வருகென மன்னன் கூறலும்
உரைதரு மறையினன் ஒசிந்த நோக்கினன்
கரமலி குடையினன் கரகம் ஏந்தினன்
முரிதரு சீரையன் முனிவன் மேயினன். 5

வள்ளிலை குலவுவேல் மறலி மாதவர்
கொள்ளுருக் கொண்டுயிர் கோடல் மேவலால்
ஒள்ளிய உலகினில் உருவு கண்டபின்
எள்ளலிர் பிறரைநீர் யாவ ரேனுமால், 6

பாருடை வள்ளலைப் படர்ந்து பையென
ஏருடை மறலிவந் தெய்திற் றுதலால்
நீருடை உலகினை நிகழ்ந்து ளோர்க்கெலாம்
சேரும்என் றறிந்துமா தவங்கள் செய்மினே. 7

ஓரில்வே றுவமைஒன் றில்லை உன்னைஇவ்
வாருநீர் உலகிற்கண் டறிவ தில்லையால்
பாரைநீ படைக்குறும் பதுமத் தோன்றலே
யாரைநீ உரைஎன இராமன் கூறினன். 8

தூயவன் இராமனைத் துனைந்து நோக்கிய
மாயவான் உருவிடை மறையு மாமுனி
சேயவா மதுமலர்த் திசை முகத்தினேன்
ஏயவா செய்வன்என் றெடுத்துக் கூறினன். 9

உரைப்பதொன் றுளதுனக் கொருங்கு யாம்இவண்
இருப்பது காண்பவர் யாவ ராயினும்
குரைப்பருங் கழலினுய் கோற்றி என்றுதேன்
இரைத்தபைந் துளவினுற் கெடுத்துக் கூறினன். 10

இனையமா முனியுரைக் கிசைந் திலக்குவன்
தனைமுக நோக்கியத் தார்இ ராமனின்
அனையவ ராயினும் அணுகு றுவகை
கனமணி வாயிலைக் காத்தி யால்என்றான், 11

இளவலைக் காவலில் ஏவி ஏடலர்
தளையவீழ் மதுமலர்த் தார்இ ராகவன்
உளமகிழ்ந் தருளிநீ உரைத்தி யால்என
கொளைமறை முனிவனைக் குறித்து நோக்கினன். 12

மந்திர முதுமொழி மறைவ லாளனும்
கொந்தலர் தாரவற் குறித்து நோக்கினன்
அந்தம்இவ் உலகினுக் களப்ப தாயுள
வெந்திறற் கூற்றென விளங்கக் கூறினான். 13

✽ அந்தத் திசைநான் முகனும் அடைவே
பந்திப் பழநான் மறை பாடினன்உன்
உந்திக் கமலத் திடை உற்பவனுப்
வந்திப் புவியேழும் வகுத்தன னால். 14

அன்னான் உரைசெய் ததமைந் ததுகேள்
என்னா லும்எதிர்ந் திமையோர் கள்கணம்
தன்னா லும்வெலற் கரியான் சடையோன்
மன்னா கம்எடுத் ததோர் மாவலியான். 15

வில்லார் கதிர்வெண் மதிமீது செலா
எல்லார் மதிசூழும் இலங்கையர் கோன்
மல்லார் புயமா வலிமா னவரால்
அல்லா துலையா ததோர் ஆயுளினான். 16

தாமந் திகழ்செஞ் சடையோன்இடையே
வாமஞ் சுடர்வா ளது பெற் றதனால்
ஏமந் திகழ் கின்ற இராவணனும்
நாமந் திசை நாலும் நடந்துடையான். 17

அன்னான் உயிர்கொள்வ தமைந்தயில் வேல்
மன்னா கதிரோன் வருமா மரபில்
பன்னா கணையோடு பயோ ததியும்
பின்னாக இகந்து பிறந்தனை யால். 18

அவ்வாறு முடித்தனை யால்இனி நின்
மெய்வான் உலகெய் துதல்வேண் டுமெனா
இவ்வா றுரை செய்தனன் இன்றிதுவே
செய்வாய் என நின்றுரை செய்தலுமே. 19

✽இலங்குமணிப் பசுந்தண்தார் இராமன்தன் எழுபரித்தேர்
வலங்கிளருங் கனகமதின் மாளிகையின் மணிவாயில்
அலங்கியசெங் கனல்வேள்வி அத்திரிதன் திருப்புதல்வன்
துலங்கியநூல் துறுவாசன் எனும்முனிவன் தோன்றினனால். 20

ஏற்றரிய சிலைத்தடக்கை இலக்குவவே லிராகவன்பால்
ஊற்றமுள தொருமாற்றம் உரைப்பதுள தாதலினால்
போற்றரிய வரமுனிநின் புறங்கடையி லான்என்று
சாற்றுகைநின் கடன்என்று சதுமறையோன் உரைசெய்தான். 21

வேனிரைத்த தெனவிளங்கும் வெண்பூவார் வியன்கரும்பில்
தேனிரைக்கும் பொழில்கங்கைத் திருநாடன் திருத்தம்பி
பானிரைத்த வெண்பரிநூல் பழமறையோய் குறையாமல்
யான்உரைத்த படிஇழைப்பென் இயம்புதிஎன் றிறைஞ்சினனால்.

✻முனிவன் நெஞ்சின் முனிந்துநின் முன்னவற்
கினைய என்வர வின்றியம் பாய்எனின்
துனைய உங்கள்தம் தொல்குலம் மாள்வதோர்
அனைய சாபம் அளிப்பம்என் றோதினான். 23

வண்ண மாமறை மாமுனி கூறலும்
துண்ணென் நெஞ்சினன் ஆகித் துணையுடன்
எண்ணி இன்ன திராமற்கும் ஆகும்என்
றண்ணல் வேலவன் அஞ்சி நடுங்கினான். 24

புல்நுனைப் பனிநீரும் பொழி மழை
மின்னும் அம்மழை மேவிய மொக்குளும்
அன்ன இன்ன நிலையில ஆக்கைகள்
என்ன எண்ணி இளவலும் ஏகினான். 25

✻பொறைமலி யத்திரி புதல்வன் போதமா
மறைமுனி வந்துநின் வாயிலான் எனக்
குறைமலி கூற்றுவன் மாற்றங் கொளுற
இறைவனை அடிதொழு திளவல் கூறினான். 26

கருமைக் கோட்டுக் கனல்உமிழ் கண்ணுடை
எருமைப் போத்தை இனிதுவந் தேறிய
அருமைக் கூற்றை அகற்றி வருதும்என்று
ஒருமைக் கூற்றன் உரைத்தனன் போக்கினான். 27

மறலிப் படலம் முற்றும்.

---

## 29. துருவாசப் படலம்

துன்னல் இன்றித் துணையுடன் வந்துபின்
மன்னு மாமறை அத்திரி மாமகன்
தன்ன தாளை இறைஞ்சிச் சதுமறை
என்னில் வந்ததை என்னை என்றோதினான், 1

முந்தை யோர் முறையே முடிசூடிய
அந்தநாள் தொட்டோர் ஆயிரம் ஆண்டிற்கு
வந்தொர் நாள்உன் வயின்அயின் றேகுவம்
இந்தநாள் அந்தநாள் என்றி யம்பினான். 2

✻நாலிரு திக்கும் நடக்கும் நலத்தார்
வாலுவர் பன்னி மரபினர் மன்னர்
சாலு மனத்தொடு சாயையன் ஞரை
ஏல அழைத்திடும் என்றுரை செய்தான். 3

மாட மதிக்கதிர் மானிகை வாயில்
நீடல ராளவன் நெஞ்சில் விரைந்தே
ஆடை தயங்க அலந்தலை உற்றே
ஓடி அழைத்தனர் தூதர் உவந்தே. 4

இடைதுறை நாடனும் ஏதமில் வஞ்சித்
தடைமுடை நாடன் உடன்சக ரத்தின்
கொடையுடை நாடனு மென்ற குலத்தோர்
மடையடு வாரவண் வந்து புகுந்தார். 5

மாமுனி யேவலின் வந்த தியன்ற
காமுறு மும்மது கைத்தொழில் காண்பான்
ஆமிவண் வந்த தமைத்திடும் இன்னே
பூமலி வெய்திய போனகம் என்றான். 6

வந்து மன்னர் மடைப்பள்ளி தன்னிடை
வெந்த நல்துகள் நீக்கி விரைவிரை
சந்த னத்தொடு தண்ணகில் கூட்டுநீஇ
இந்த னத்தை எரியிடை மாட்டினர். 7

பொன்னிற் செய்தன பொற்புடை நன்கலம்
மின்னி ரைத்தன வெள்ளியின் நன்கலம்
இன்ன செம்பொன் இலங்கு கடாரத்து
மன்னு நீரிடை மண்ணுறுத் தார்களால். 8

அறிஞர் கூறும் அரிசன மையவி
கறிய ரைத்துக் கரியன கஞ்சக
முறியளை இயபின் மும்மத யானையார்
நறுநெய் குய்யமைத் தார்கள் நலத்தினால். 9

*கை வகைப்படு கின்ற கமழ்ச்சியர்
மெய் வகைப்பட நெய்யிடை வெந்தஅக்
குய் வகைப்படு கின்ற கொழுங் கறி
ஐ வகைப்படு அறுசுவை ஆக்கினர். 10

வருக்கை யின்கனி வாழையின் நன்கனி
பருக்கொ ழுங்கனி பாலொடு தேன்அளை
கருப்பி னன்னருங் கட்டியு டன்செழும்
சருக்க ரைக்குவை தானமைத் தார்களால் 11

*கவைப்புறுங் கொடுங்குளக் கனகச் சாவிநெல்
உவைப்புறு கனகமாம் உரலிடைக் கொளீஇ
நிவப்புறும் உலக்கையால் நெடிய வல்லவர்
அவைப்புறும் அரிசிகொண் டடிசில் ஆக்கினர். 12

அன்னவை சமைத்தவ ரழைத்துக் காட்டலும்
மன்னிய முதுமொழி மறைவ லாளனைப்
பன்னிய போனகம் பற்றென் றேதினன்
இன்னிசை அளிஎழுந் திசைக்கும் தாரினன். 13

நிலமிசை ஆசனம் இட்டு நீர்கொடு
தலமிசை தெளித்துஒரீத் தமனியப் பெருங்
கலமிசை மாமுனி கைகழீ இயபின்
பலமுறு போனகம் படைத்து மேலினர். 14

மெய்யுறு மந்திர விதியி னன்மிக
மையுறு புனலினல் வலம்வளை இயபின்
கையுறு புனலொடு குடித்துக் காதலால்
ஐவகை மந்திரத் தமிர் தருந்தினன். 15

பலாக்கனி மாங்கனி பாலி னேடுதேன்
நிலாப்பயில் கதிரினை நிகர்வெண் சோற்றினை
உலாப்பயில் கொழுங்கனல் ஓம மாமுனி
விலாப்புடை முசியுற வீங்க மாந்தினன். 16

அங்கைநீர் அயின்றபின் ஆர ணத்தினேன்
துங்கவேல் மணிமுடித் தூய மன்னவர்
செங்கையால் ஆடகச் சிரகத் தேந்திய
கங்கைநீர் கொண்டுதன் கைகழீ இனன். 17

தாலுவில் அறுசுவை தழைப்பச் சர்க்கரை
பாலுடை அடிசிலின் பயின்ற பான்மைய
நாலிரு திசையினு நாங்கள் கண்டிலேம்
வாலுவர் தலைவரை மதித்துக் கூறினன். 18

மன்னவர் இவர்அவர் மரபுங் கேண்மையும்
இன்னதென் றிராகவன் எடுத்துக் கூறலும்
அன்னது கேட்டபின் அகம் கழிந்தொரீ
முன்னிய திசையிடை முனிவன் போயினன். 19

துருவாசப் படலம் முற்றும்.

---

## 30. வைகுண்டப் படலம்

வனைந்தபூண் மறலிதன் வார்த்தை எண்ணியுள்
துனைந்துதன் பின்னவன் பிரிவு சூழ்ந்ததை
நினைந்தனன் இருகணீர் நிலன் நனைந்திட
இனைந்தினைந் திராகவன் இடரின் மூழ்கினன். 1

கருங்குழல் கேகயன் மகட்குக் காவலன்
வரங்கொடுத் தின்னுயிர் மறலிக் கீய்ந்தனன்
இரங்கல்நீ என்வயின் என்றி லக்குவன்
அரங்கொல்வேல் இராகவன் அடி வணங்கினன். 2

உன்னைவாய் மொழியஇவ் உலகில் ஓங்குவான்
அன்னைவாய் வரங்கொடுத் தரசன் காத்தலால்
என்னைநீ மறலிக்கிங் கீய்ந்த நல்வரம்
தன்னைநீ கொடுவிடை தருதியால் என்றான். 3

அன்னது கேட்டபின் அருவி யாம்எனத்
தன்இரு தடங்கண்நீர் தாழ்ந்து மார்புக
மன்னிய நிழல்என மணந்து நீங்குறாப்
பின்னவன் பிரிவினுக் கஞ்சிப் பேதுற்றான். 4

வளநகர் மாந்தரை வசிட்டன் தன்னுடன்
தளைஅவிழ் தாரினீர் தருதி ரால்என
அளியினம் எழுந்தெழுந் தார்க்கு மார்மதுத்
துளவணி முடியினான் தூதர்ப் போக்கினான். 5

போனபின் தூதுவர் புகன்ற வாய்மொழி
ஆனது கேட்டபின் அரசற் கண்ணுறீஇ
மானகர் மாந்தரும் வசிட்டன் தன்னுடன்
ஏனையர் அனைவரும் இருந்த வேலையில். 6

*இருந்தபே ரவையை நோக்கி இவர்சடை முனிவன் தன்னை
வரந்தரு கென்ற வாறும் அத்திரி மைந்தன் ஏவத்
தருந்தரு வனைய தம்பி தன்னுழை வந்த வாறும்
அரம்பொரு திலங்கும் செவ்வேல் அடல்புனை இராமன் சொன்னான்.

மத்தக யானை யானை வசிட்டனும் நோக்கி உந்தை
தத்துறு புரவித் திண்தேர்த் தயரதன் தன்பால் வந்த
அத்திரி புதல்வன் தன்னைஅடியிணை வணங்கி நின்றே
எய்த்தனன் புதல்வர் இல்லேன் என்னைகொல் செய்வ தென்றான்.

உறுமக வேள்வி வேட்பின் உரனுடை மைந்தர் நால்வர்ப்
பெறுகுவை ஒருவன் தன்ன தாருயிர் பிரியுங் காலை
மறுவறு மூவர் தாங்கள் நீங்குவர் மன்ன என்ற
தற்குவன் யானும் என்றே அருமறை யாளன் சொன்னான். 9

ஆதலால் விதியை வெல்வ தரிதுநீ அருணப் பைம்பூண்
ஏதிவாழ் கடகச் செங்கை இலக்குவற் கிரங்க வேண்டா
தாதவிழ் அலங்கல் பைந்தார்த் தமனியத் தரளப் பைம்பூண்
மாதிவெண் புரவித் திண்தேர் மன்னஎன் றினைய சொன்னான். 10

நங்குலக் குரவனை நான்மறை முனிவன் சொன்ன
திங்குநீ கேட்டி அன்றே இனிவிடை தருதிஎன்னா
மங்கைய துருவமாக வார்சிலை மீது சென்ற
பங்கயம் என்னச்சேந்த பதயுக மீது வீழ்ந்தான். 11

தன்மத்தின் கண்ண தாய தம்பிதன் பிரிவென் எஃகம்
மன்மத்தை ஈர்த லாலே மலர்க்கண்நீர் அருவி சோரக்
கன்மத்தின் விளைவை எண்ணிக் கட்டுரை ஒன்றுங் கூறுன்
உன்மத்த ஞய் இருந்தான் உணர்வுடன் உயிர்ப்பும் இல்லான். 12

செதுவொழி வினைஞர் செய்த சித்திரப் பாவை போல
எதிர்மொழி ஒன்றுங் கூறு திராகவன் இருத்தலோ்டும்
கதும்என எழுந்து முன்னே கழலடி தொழுது வாழ்த்தி
அதுவிடை என்று நில்லா தணிநகர் அகன்று போனன். 13

தேன்பிரி யாத கானில் சிலையொடு காத்துப் பின்னேன்
ஊன்பிரி கின்ற காலத் துயிரினை யொத்தான் முன்னேன்
கான்பிரி கல்லா ஓதிக் கைகயன் மடந்தை கூறத்
தான்பிரி கின்ற நாளில் தந்தைதன் தன்மை யானன். 14

நம்பனுன் மறைவல் லோர்க்கு நல்கிய வாநன் றென்பார்
உம்பரார் சொன்ன வார்த்தை ஒழிவரோ உலகத் தென்பார்
கம்பியா நின்ற துள்ளங் கழிந்ததோ காலம் என்பார்.
தம்பியை இன்றி ஆவி தரிக்குமோ தமையன் என்பார். 15

வலத்தியன் மன்னர்க் கெல்லாம் வரங்கொடுத் தாவி நீத்தல்
குலத்தியல் பன்றே என்பார் கொள்ளுமோ கூற்றம் என்பார்
அலக்கணுற் றிடாது வாளா அமையுமோ அயோத்தி என்பார்
இலக்குவன் ஆவி நீங்கில் இருக்குமோ இராமன்என்பார். 16

இன்னன நகரத் துள்ளோர் இனைந்தினைந் தேங்கி மாழ்க
நன்னகர் வாயில் நீங்கி நவமணி கொழித்து முத்தம்
பொன்னெடு துவன்றி எங்கும் புனல்பரந் துலகம் போற்றும்
தன்னிகர் நதியொன் றில்லாச் சரயுப்பேர் ஆறு சார்ந்தான். 17

* ஆசில்மணி மதில்சூழும் அயோத்திநகர் உறைகின்ற
மாசனங்கள் துயர்மூழ்க மடந்தையர்செங் கனல்மூழ்கப்
பாசநடு விடையில்லாப் பரதன்விழி யழல்மூழ்கத்
தாசரதி யிடர்மூழ்க சரயுநதி மூழ்கினன். 18

சூகரத்த நெடுங்கோட்டால் துளைப்புண்ட துயர்நீக்கிச்
சீகரத்த வுலகாண்ட திறல்வெய்யோன் திருத்தம்பி
மோகரித்த முதுபிணிநோய் முதலாய பெரும்பிறவிச்
சாகரத்தின் கரையேறித் தடங்கரையின் ஏறினன். 19

அறுபகையே விளைக்கின்ற ஐம்புலனும் அகத்தடக்கி
உறுவனஒன் பதுவாயும் உயிர்வாயு வுடன்ஒடுக்கி
மறுவறுசங் கினந்தழுவும் வாலுகத்த தடங்கரைமேல்
எறிகதிர்வேல் இலக்குவனும் யோகத்தங் கிருந்தனனல். 20

போதிலங்கும் ஆயிரம்செம் புண்டரிகம் பூத்ததொரு
சாதிலிங்கச் செழுவரைபோல் தமனியப்பூண் இமையவர்கோன்
மூதிலங்கை தீமூள முனிந்தோன்தன் பின்னேன்முன்
மீதிலங்கு செழுங்கனக விமானத்து மிசைவந்தான். 21

தன்னை அமர் தொலைத்த தார்அரக்கன் தன்மகனைப்
பின்னை அமர் வென்ற பெரியோனைப் பேசரிய
மன்னியமெய் யாக்கை யுடனேம கிழ்ந்தேத்திப்
பொன்னியல் விமான மிசைக்கொண்டு போயினன். 22

மீனேந வேலை புடைசூழ் வியன்உலகில்
ஏனேர் புலம்ப இயல்வேல் இலக்குவனும்
ஊனே டுறவற் றுலையா உடம்பெய்தி
வானேர் எதிர்கொள்ள வைகுண்டம் போய்ப்புக்கான். 23

அப்பால் இயன்ற ததுநிற்க இங்ஙனே
இப்பால் இயன்ற தியம்புவனல் எந்நாளும்
தப்பாத தம்பிதனை நினைந்து சார்துயர்க்கு
வைப்பாகி உள்ளே மெலிந்தான் மறவேலோன் 24

பார்த்தான் இளையோனைக் காணன் பதைத்துள்ளம்
வேர்த்தான் திருமேனி எல்லாம் மெலிவுற்றான்
காத்தாய் நெடுங்காலம் கைவிட்டா யோஎன்னப்
பூத்தா மரைக்கண் புனலாய்ப் புலம்பினன். 25

விம்பக் கவிகை விறல்மேக நாதனைஓர்
அம்பில் தடிந்தாய் அருவினையேன் ஆருயிரே
வம்புற்ற தாரான் மகனே மதியிலியென்
தம்பித் துணையே தரியேன் தரியேனே. 26

ஆற்றுவனே எண்ணி அபயம் புகுந்தானைக்
கூற்றுவனேர் வந்து குறுகா வகைகாத்து
மாற்றவனேர் விட்ட வடிவேல் வரைமார்பில்
ஏற்றவனே எம்பீ இலக்குவனே என்செய்கேன் 27

வண்ண வரைஅழுத மாநாக மும்அழுத
விண்ணும் திசையும் வியன்ஞால மும்அழுத
எண்ண நினைந்துநினைந் திங்ஙனே விம்மிவிம்மி
அண்ணல் அழுதால் அழாதனவொன் றில்லையால். 28

இன்னுயிரே போனல் இருக்குமோ பொய்யாக்கை
பின்னவன் பேர்ந்தநெறி யானும் பெயர்குவனல்
மன்னுதரள மணிமுடிநீ சூடு கெனப்
பன்னு மதுகைப் பரதனையே நோக்கினன். 29

பைப்பயிலப் பார்புரப் பாயாக பரதநீ
துப்பயர் தோளாய் சுடர்மகுடம் சூடுகெனச்
செப்பியஅச் சொல்லே செவிசுடுத லால்விரைந்து
மைப்புயலே அன்னுன் மலர்அடியின் மேற்பணிந்தான். 30

*நாத என்னே நளிர்முடி சூடென
ஏதம் உள்ளுறக் கூறிய தெம்முடைத்
தாதை தன்னைத் தடங்கை கயன்பெற்ற
கோதை கொண்ட வரத்தில் கொடியதால். 31

அண்ணல் நீபுரந் தாகிந்த வையகம்
எண்ணில் நீபுரந் தீமினென் றேதியேல்
நண்ணி நாகஞ் சுமக்கும்இந் நால்நிலம்
மண்ணி நாகம் சுமக்கெனின் மாண்டதோ. 32

இம்மிச் செந்நெல்வித் தித்தனைத் தாகுமேல்
அம்மி மற்றை அருவரை ஒக்குமேல்
மின்மி னிச்சுடர் வெங்கதிர் போலுமேல்
உம்மை ஒத்துல காளுவன் உண்மையால். 33

ஆதி நின்னுனட ஆண்தொழில் மேயினர்
நீதி வையம் நிகழ்த்திட வல்லரால்
கோதில் வண்மைக் குசலவர் தம்மைநீ
சோதி மாமுடி சூட்டென் றியம்பினுன். 34

இன்ன கூறி இளவல் இறைஞ்சலும்
மன்னர் கோனும் மனமகிழ்ந் தவ்வயிற்
கொன்ன விற்கொலே வைவேல் குசலவர்க்
கன்ன நாளின் அணிந்தனன் காப்புநாண். 35

புரைசெய் மாமதப் போதக மீமிசை
அரசர் ஈண்டினர் அந்தணர் சூழ்ந்தனர்
முரச திர்ந்தன சங்கு முழங்கின
விரைசெய் பூங்குழ லார்விளக் கேந்தினுர். 36

அண்ணல் யானையின் ஆடகப் பொற்குடம்
நண்ணு நூற்றெட்டு நன்கங்கை நீர்கொடு
மண்ணின் ஆசை தவிர்ந்துதன் மைந்தரைப்
பண்ணி னுனபி டேகம் பரிந்துளான். 37

நாடி நான்மறை கூறிய நாள்களில்
ஆட கத்த அரியணை மீதிரீஇ
ஓடை யானையர் ஒண்செங்கை சென்னிமேல்
சூட மைந்தரை மாமுடி சூட்டினுன். 38

*பாசிலே ஏய்ந்த பருக்குல வாழை
காசறு மாதர் கவான்என நீடிய
கோசல நாட்டில் குசாபதி என்றோர்
மாசறு நீண்மதில் மாநகர் செய்தான். 39

ஒத்தன நால்வகை உள்ளன தானை
அத்தகு செல்வமொ டமைவர நல்கிக்
கொத்தலர் தார்புனை குசனைஅம் மாநகர்
வைத்தனன் மாமுடி மன்னவர் கோமான். 40

உத்தர கோசல ஒளிர்திரு நாட்டில்
சித்திர மாய சிராபதி என்றோர்
பத்தி தரும்பரு மாமணி பாயும்
மத்தக மாநகர் மாளிகை செய்தான். 41

தன்னுடை நால்வகை ஆகிய தானை
மன்னிய செல்வமும் மாண்புற நல்கிப்
பொன்னின் இயன்ற புரிசை இலங்கும்
அந்நகர் தன்னில் அவனையும் வைத்தான். 42

*இத்திறங் கழிந்தபின் இலக்குவன் சென்ற
அத்திறம் யானும்சென் றடைவ னல்எனச்
சத்துருக் கனற்குநீர் சாற்றும் என்றுதேன்
துற்றபைந் தாரினன் தூதர்ப் போக்கினன். 43

மதுரமா நகரிடைப் புகுந்து மன்னவன்
அதிர்கழல் வணங்கிநின் றயோத்தி மாநகர்ப்
புதுவது நிகழ்ந்ததும் புகன்ற வார்த்தையும்
கதும்என உரைத்தனர் காலின் காட்சியார். 44

ஓட்டர்கள் வந்துரை உரைத்த வாறெலாம்
கேட்டனன் செவிசுடக் கிளர்ந் தெழுந்தனன்
நாட்டமும் இமைப்புறா நடுங்கு மெய்யெலாம்
தோர்ட்டடங் களும்மிக மெலிந்து தோன்றவே. 45

தன்னிகர் பிறரிலாத் தார்இ ராகவன்
பொன்னடி தொழுதுயப் போவன் நான்இனி
இந்நகர் ஆண்டினி திருத்திர் நீர்என
மன்னவன் மைந்தரை மகுடஞ் சூட்டினன். 46

மதிதொடு மாளிகை மதுகை தன்னுடன்
விதிநெறி முறைமையின் விதிகை என்னும்அப்
புதுநகர் இயற்றித்தன் புதல்வர் தம்மைஅப்
பதிவயின் இருத்தினன் பைம்பொற் றாரினன். 47

பாடகச் சீறடிப் பவளச் செய்யவாய்ச்
சூடக மடந்தையர் இனைந்து சோர்வுற
மாடமா மாளிகை மதுரை பிற்பட
ஆடக மணிமதில் அயோத்தி மேவினான். 48

மன்னனை அடிஇணை வணங்கி மைந்தர்க்குப்
பொன்முடி கவித்ததும் புரவி யானைதேர்
இன்னவை கொடுத்ததும் இலங்கு மாமதில்
அந்நகர் அளித்ததும் அமையக் கூறினான். 49

அன்னன புகன்றபின் அருவிக் கண்ணினான்
தன்னிகர் பிறர்இலாத் தார் இராகவன்
முன்னைநாள் பெயர்ந்துபோய் இளவல் மூழ்கிய
நன்னெறி செல்லுமா நாடுங் காலையின். 50

சந்திரன் நிகர்எனத் தரள வெண்குடை
அந்தர மீமிசை அழகெரித் திடக்
கந்தணி கரடவெங் கவள யானைமேல்
வந்தனன் வீடணன் என்னும் வாய்மையான். 51

பயங்கெழும் இராவணன் பத்து மாமுடி
தயங்கிய அணிமணி பறித்த தன்மையான்
இயங்கிய எழுபரித் தேரில் எண்திசை
வயங்கிய கதிரவன் மகன்வந் தெய்தினான். 52

கருத்துவந் தெழுகதிர்க் கனலி தன்னைஓர்
பருத்தசெங் கனிஎனப் பாய்ந்த பான்மையான்
உருத்துவந் துலகெலாம் ஒருங்கு காதுமா
மருத்துவின் மைந்தனும் வந்து மேவினான். 53

ஆற்றிய உலகெலாம் அடி இரண்டினால்
மாற்றிய பரமனை வலங்கொண் டிங்ஙனே
காற்றியல் வெம்மையால் கனகு வெம்பறை
சாற்றிய கரடியின் தலைவன் எய்தினான். 54

மருப்புநா லிருகரி யுடனும் மற்றுள
பொருப்பெலாம் பொரிந்திடப் புணரி வற்றிட
உருப்பினால் உலகெலாம் உலைய ஓங்கிய
நெருப்பின்மா மகன்இகல் நீலன் மேவினான். 55

வரைபல வலியினால் வாங்கி வானரர்
சிரமிசை கொண்டவர் செல்லச் செல்லஓர்
கரமிசை கொண்டொரு கரத்திற் கல்லென
நரலையை அணைசெய்த நளன்வந் தெய்தினான். 56

குரங்கொடு பொரஎளி தென்று கொண்டுதும்
சரங்கொடு பொரவரும் அரக்கர் தானையைக்
கரங்கொடு மலைகொடு கதிர்வெண் பற்கொடு
மரங்கொடு சாடிய மயிந்தன் மேவினன். 57

கோல்பிடித் தெய்துசெங் குருதி யாறெழ
வேல்பிடித் தெறிதரு மரக்கர் வெள்ளத்தை
வால்பிடித் தெற்றுவான் வந்த மாமதத்
தோல்பிடித் தெற்றிய துமிந்தன் எய்தினன். 58

பொருதியார் போமவர் போதிற் போமிடத்
தரிதியா தெமக்கெனும் அரக்கர் சேனையைப்
பரிதியாம் எனவிழி சிவந்து பற்கொடு
குருதியா றுகப்பொரு குமுதன் எய்தினன். 59

ஏனைவா னரரும்வந் தெய்தி எண்ணிநீ
போனவர் போவதே புரிந்து வந்தனம்
தேனவா மதுமலர்த் தெரியல் தண்துழாய்
மானவா என அடி வணங்கிக் கூறினர். 60

மீன்பயில் தடக்கைவேல் வீடணன் தனைப்
பொன்பயில் நெடுமுடிப் புகழ் இராகவன்
என்கதை அளவுநீ வாழ்தியால் என
அன்புடன் ஆணையின் அகல நீக்கினன். 61

அன்னது கேட்டபின் அருக்கன் மாமகன்
தன்னையும் விடுவது தகும்என் றஞ்சியே
மன்னும்அங் கதனைமா மகுடம் சூட்டிவைத்
தின்னணம் வந்தனன் என்றி றைஞ்சினன். 62

ஏந்துவேல் இராமனோ டிரவி தன்மகன்
சேர்ந்துழிச் சேர்வது தெளிந்து மெயினன்
ஆர்ந்தஆர் கலிமலி யகில மூன்றினும்
வாய்ந்தவர் செய்நன்றி மறக்க வல்லரோ. 63

மருத்துவின் மைந்தனை மகிழ்ந்து நோக்கிமுன்
புரைத்ததும் உணர்தியால் உலகில் வாழ்வது
கருத்தும்உண் டாதலால் கனகத் தோளினாய்
இருத்திநம் ஆணைஎன் றிராமன் போக்கினன். 64

கனைகதிர் மைந்தனும் கரடி வேந்தனும்
குனிபுறக் குமுதனும் கொலை மயிந்தனும்
நனிதரு துமிந்தனும் நளனுஞ் சூர்விழி
இனையபோர் நீலனும் ஏனை வீரரும். 65

வீரன தாணையின் விலக்க நிற்கிலர்
தோரண மாநகர்த் தொக்க மாக்களும்
காரிகை மகளிரும் கடவுள் யாவையும்
ஆரண நான்குடை அந்த ணளரும். 66

பின்னிய காதலால் பிரிதல் ஆற்றலர்
மன்னிய தாணிழல் வதிதல் வேட்கையால்
தொன்னகர் பாழ்படத் துனைந்து சூழ்வர
அன்னகர் வாயில்விட் டகன்று போயினன். 67

உற்றதங் காதலால் உலகம் தன்னுடன்
மற்றவர் பிரிந்தநாள் அயோத்தி மாநகர்
முற்றிய தமிழ்முனி முகப்ப முன்னைநாள்
வற்றிய வரிமணல் வாரி போன்றதே. 68

ஒட்டியங் குறைபவர் ஒழிந்த பின்னைநாள்
மட்டவிழ் சுதைபயின் மாட மாளிகை
நெட்டிடை ஆருயிர் நீத்து மாநிலம்
பொட்டெனக் கிடந்தபொய் யாக்கை போன்றவே. 69

செவ்வியோன் மைந்தரைச் செல்வம் மேவவைத்
தவ்வயிற் குகனும்வந் தடி இறைஞ்சலும்
மைவரைத் தோளநீ வருக என்றுநற்
கொவ்வையங் கனிஇதழ்க் கொண்டல் கூறினன். 70

தடமலி சரயுத்தண் துறையில் தாழ்புனல்
அடியுறச் செல்வுழி அலரி நான்முகன்
மிடல்மிகு கணக்கிலா விம்ப ஊர்தியின்
உடன்அணி வானகத் துச்சி தோன்றினன். 71

மெய்யனே பொய்யனே விளங்கும் விண்ணுளோர்
ஐயனே அமலனே அருண வாழியங்
கையனே நின்பழங் கடவுட் காயம
தெய்தநீ வேண்டும்என் றிறைஞ்சிக் கூறினன். 72

துன்னிய வானவர் துயரம் நீக்குவான்
மன்னிய உலகினில் பிறந்த மாயையைத்
தன்னிகர் பிறிதிலாச் சரயு நீத்துத்தன்
பின்னவர் தம்முடன் பெயர்ந்து மேவினன். 7ջ

ஏதமில் சரயுமா நதி யிகந்துபின்
காதும்வேல் தசரதன் காவல் கொண்டிடும்
ஆதிவா னவர்பயில் அரிய நான்மறை
ஓதுநால் உருவும்ஓர் உருவம் ஆயதே. 74

தழுவிய செழுமணிச் சரயுப் பூத்துறை
முழுமெயும் பனிவர முழ்கி மொய்த்தபின்
விழுமிய வானர வீரர் யாவரும்
பழையதங் கடவுள்தன் படிவம் எய்தினர். 75

வணங்கிய மலர்அயன் தன்னை நோக்கிமால்
அணங்கிய கொடிமதில் அயோத்தி மாநகர்க்
கணங்கொடு வதிபவர் யார்க்கும் காதலால்
இணங்கிய பதிஅமைத் தீதி என்றனன். 76

*நிறங்கிளர் கரியமேனி நேமியன் அருளக் கேட்டுக்
கறங்கரி முரலுஞ் செய்ய கமலமா மலரின் மேலான்
அறங்கிளர் கருணை உள்ளத் தயோத்திவாழ் பவருக் கெல்லாம்
பிறங்குசந் தானம் என்னும் பெரும்பதி அமைவித் தானல். 77

அமலன்ஆங் கமைத்த பின்னை அயோத்திமா நகரத் துள்ளோர்
தமரநீர்ச் சரயு என்னும் திருநதி தன்னில் மூழ்கி
இமையவர் வடிவம் எய்தி எண்ணிலா விலங்குஞ் செய்ய
தமனிய விமானம் ஏறித் தடங்கொள்சந் தானஞ் சேர்ந்தார். 78

ஆழியான் மகிழ்ந்து பூவில் அயன்மறை கொண்டு போற்றிச்
சூழியா னையின்மீ தேறி இந்திரன் துதிசெய் தேத்தப்
பூழிவாழ் மேனியானும் பொன்னடி தொழுது போற்ற
வாழிவா னவர்கள் கூற மருவி வைகுண்டம் சேர்ந்தான். 79

வைகுண்டப் படலம் முற்றும்.

இராகவன்கதையில் ஒருவிருத்தத்தில் ஏகபாதத்தினை உரைப்போர்
பராவருமலரோன் உலகினில்அவனுல் பன்முறை வழுத்தவிற்றிருந்து
புராதனமறையும் அஷ்டர்பொற்பதமும் பொன்றினும் அவற்றொடும்பொன்று
தராவணைஅமலன் உலகினில்நாலாம் பதத்தினை அடைகுவர்அன்றே. 1

*இறுவ ரம்பில் இராமவென் றொரும்பர்
நிறுவ ரென்பது நிச்சயம் ஆதலால்
மறுவில் மாக்கதை கேட்பவர் வைகுண்டம்
பெறுவர் என்பது பேசவும் வேண்டுமோ. 2

*ஆதவன் புதல்வன் முத்தி அமலனை அளிக்கும் ஐயன்
போதவன் இராம காதை புகன்றருள் புனிதன் மண்மேல்
கோதவஞ் சற்றும் இல்லாக் கொண்டல்மா றன்னை ஒப்பான்
மாதவன் கம்பன்செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்.

கரைபொரு காண்டம் ஏழு கதைகள் ஆயிர தெண்ணூறே
டுரைதரு விருத்தம் பன்னீ ராயிரத் தொருபத் தாறிற்
பரவமர் பத்துநாலு படலநூற் றறுபத் தெட்டு
வரமுறு கம்பன் சொன்ன வண்ணமும் எண்பத்தேழே. 4
பலசுருதி முற்றும். உத்தரகாண்டம் முற்றும். படலம் 30. கவி 1526.

---

இராமாயணம் முற்றும். திருஞானமுத்திரை துணை. மாருதி சகாயம். 968 பிரமாதீ்சவருடம் ஆனி 21 சோமவாரமும் ரேபதிநட்செத்திரமும் பெற்ற சுபதினத்தில் சுவாமி நம்மாழ்வார் சந்நதியிலிருந்து எழுதிமுகிந்தது. இராமாயணம் திருவேங்கடம் சதாசேவை.

ஸ்ரீ:

# உத்தரகாண்டம் படல அட்டவணை.

ஸ்ரீ:

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 13 | தரமன்னதை | தரமல்லதை |
| 4 | 15 | தொழில் | பொழில் |
| 8 | 5 | வேதிக்கும் | வேதிக்குப் |
| 16 | 14 | பிழைத்தார் போ | பிழைத்தாற் போ |
| 17 | 11 | புடைபரத்து | புடைபரந்து |
| ,, | 13 | கழலினம் | கழலினர் |
| ,, | 24 | விண்ணுல | மண்ணுல |
| 18 | 12 | மிண்டி | பிண்டி |
| 20 | 31 | சத்தியர் | சத்தி |
| 21 | 24 | என்னே | என்ஞ |
| ,, | 33 | ஆவம் | ஆலம் |
| 25 | 14 | ஆகின் | ஆதி |
| 26 | 4 | பொருத்தத் | பொருந்தத் |
| ,, | 9 | தச்க்கிரிவன் | தசக்கிரிவ |
| ,, | 21 | முகன்தனக் | முகனதனுக் |
| ,, | 23 | சிறில் | சீரில் |
| ,, | 24 | தகுவச் | தகுவ |
| ,, | 26 | மூத்தோன் | மூத்தோர் |
| ,, | 27 | அன்னகருக் | அந்நகருக் |
| 28 | 24 | பழுப்பில்லாப் | பழிப்பில்லாப் |
| ,, | ,, | பேரழமும் | பரழகும் |
| 29 | 2 | கொண்டிந்ருத | கொண்டிருந்த |
| 31 | 19 | ரோடும் | ரோடு |
| 32 | 21 | சேனையைச் | சேனையச் |
| 33 | 34 | ரீசனும் | ரீசனும் |
| 36 | 11 | தயர்த்திடந் | தயர்த்திடத் |
| 37 | 14 | படிக்கமி | படிக்கழி |
| ,, | 25 | மிசைத்தவந் | மிசைத்தவர் |
| ,, | 28 | மதத்தகு | மதத்த |
| 38 | 15 | வாள்நாளும் | வாழ்நாளும் |
| 41 | 17 | புரியநீ | புரிய நீதிப் |
| 42 | 27 | விடோணு | விடொணுத் |
| 44 | 12 | வவனகிரி | வவனகரி |
| ,, | 13 | கோட்டில் | கோட்டிப் |
| ,, | 14 | படுகுழிநல் | படுகுழியில் |
| ,, | 19 | தெய்திதை | தெய்தியதை |
| 45 | 5 | பிறக்கப்பெற்ற | பிறக்கப்பெற்று |
| ,, | 9 | ஒருன்ய்ச் | ஒன்ருய்ச் |
| ,, | 10 | கிடைந்து | கிடந்து |
| ,, | 12 | வந்தார் என்று | வந்தார் |
| ,, | 26 | எழுத்து | எழுந்து |
| ,, | 29 | செருவழித் | செருவழி |
| ,, | 34 | பொகுபடை | பொருபடை |
| 46 | 18 | வீழ்ந்து | வீழ்த்து |
| ,, | 21 | வீடாதங் | விடாதங் |
| 47 | 29 | தாங்கரியய | தாங்கரிய |

| | | | |
|---|---|---|---|
| 48 | 8 | வித்துருசிந்கு | வித்துருசிங்கு |
| ,, | 11 | உருவா நிறத்தினால் | உருவாலிநிறத்தினால் |
| ,, | 19 | தோண்லமந்தர் | தோண்மைமந்தர் |
| ,, | 20 | படையோடு | படையோடும் |
| ,, | 23 | தருளமந்தர் | தருமைமந்தர் |
| ,, | 32 | உறத்துறத்து | உறத்துறந்து |
| 49 | 29 | கிடந்து | கிடந்த |
| 50 | 21 | ஆயவன்தன் | ஆயவள்தன் |
| ,, | 32 | முறையிட்டான் | முறையிட்டாள் |
| 51 | 32 | தோலாவழி | தோலாவலி |
| 53 | 10 | மெருங்கை | பெருங்கை |
| ,, | 11 | மிக்கதாய் | மிக்கதால் |
| ,, | 27 | கண்டமடம் | கண்டமடப் |
| 54 | 1 | செறித்து | செறிந்து |
| ,, | 24 | மொழிந்தான் | மொழிந்தாள் |
| 55 | 1 | அரம்பை | அரம்பைப் |
| ,, | 9 | நழுவித் | தழுவித் |
| 55 | 26 | நூய | தூய |
| 56 | 7 | கழுத்தாலை | கழுத்தாளை |
| ,, | 9 | கண்ணாளைச் | கண்ணாளைப் |
| ,, | 11 | நுதலானை | நுதலாளை |
| 57 | 14 | வயிற்றுதித்த | வந்துதித்த |
| ,, | 22 | காதலர்க்குத் | காதலற்குத் |
| ,, | 26 | இராவணனும் | இராவணனும் |
| 58 | 4 | உழந்நிங் | உழந்திங் |
| ,, | ,, | உரைத்தாள் | உரைத்தான் |
| ,, | 11 | லேயுண்டு | லேவுண்டு |
| ,, | 21 | உத்தமிகள் | உத்தமிகண் |
| ,, | 31 | நமை | நமைக் |
| 59 | 6 | மருங்கிய | ஒருங்கிய |
| ,, | 15 | குன்நிடுங் | குன்றிடுங் |
| ,, | 17 | உம்பர்க்கோன் | உம்பர்கோன் |
| ,, | 23 | கரத்தினன் | வரத்தினன் |
| ,, | 29 | தீப்பன் | தீர்ப்பன் |
| 60 | 15 | நிகும்பன்காவிராக்கன்வெஞ் | நிகும்பன்வெஞ் |
| ,, | 23 | வானோர்ரானோர் | வானோரானோர் |
| 61 | 10 | கரியின்மேல் | கிரியின்மேல் |
| ,, | 21 | எதிர்ந்தோர்சீறி | எதிர்ந்தோர் அஞ்ச |
| ,, | 25 | தேர் | தேர்ப் |
| 62 | 8 | கலைந்து | கலந்து |
| ,, | 31 | வெங்ளத் | வெங்களத் |
| 63 | 3 | சிந்தவல | சிந்தவில் |
| ,, | 7 | தாய்சினத் | காய்சினத் |
| ,, | 22 | பாலகனொடு | பாகனொடு |
| ,, | 28 | முநிந்த சில | முறிந்தசில |
| 64 | 17 | ளிண்ணவர் | விண்ணவர் |
| ,, | 19 | பஞ்சரங்க | மஞ்சரங்க |
| ,, | 29 | அரக்க | அரக்கர் |
| 65 | 23 | கீறிஞனுறு | சீறிஞனுறு |
| ,, | 25 | வீர | வீரன் |

| | | | |
|---|---|---|---|
| 66 | 1 | றிற்கல் | நிற்கல் |
| ,, | 30 | பிறத்த | பிறந்த |
| 67 | 4 | கவிழ்து | கவிழ்ந்து |
| ,, | 13 | உடையராதலினேர் | உடையராதலினே |
| ,, | 16 | அழிந்தன்ன | அழிந்தனனத் |
| ,, | 23 | தேரிவை | தெரிவை |
| ,, | 27 | பொருலு | பொருது |
| ,, | 29 | விளையாடக் | விளையாடக் |
| ,, | 33 | ஆரம் | ஆரப் |
| ,, | 34 | நிருமதை | நருமதை |
| 69 | 8 | தாற்றினவ | தாற்றினன் |
| ,, | 17 | கினர்பெரும் | கிளர்பெரும் |
| ,, | 18 | மனத்தினள் | மனத்தினன் |
| ,, | 20 | வடநகர் | வளநகர் |
| 70 | 9 | டும்பரில் | டும்பொரில் |
| 71 | 2 | நீங்கித் | நீங்கிச் |
| ,, | 5 | பெருந்துமோ | பொருந்துமோ |
| ,, | 29 | இறுக | இறுகத் |
| ,, | 33 | வீர | வீரச் |
| ,, | 35 | நிலைதழு | இலைதழு |
| 72 | 4 | உலரும் | உணரும் |
| ,, | 35 | பொருவரைத் | பெருவரைத் |
| 74 | 2 | விட்டெவ் | விட்டவ் |
| ,, | 22 | புடே | புரீட |
| ,, | 24 | சுற்றுச் | அற்றுச் |
| ,, | ,, | தொகுபணிக் | தொகுமணிக் |
| 75 | 27 | அனுவற்றிடலாய் | அனுவற்றிடலால் |
| ,, | 35 | தண்டிப்போம் | தண்டிப்போன் |
| 76 | 25 | வருக்கொழிந்து | தருக்கொழிந்து |
| ,, | 26 | மாதவர்க்கு | மாதவர்க்குக் |
| 77 | 21 | சேரலர்கள் கேட் | சேரலர்கள்கெட் |
| ,, | 22 | டோதுமது | டோடுமது |
| ,, | 36 | சேனைமூடி | சேனைமுடி |
| 78 | 1 | ✽சனகன் | ✽சனக |
| ,, | 12 | ஞாலற்கே | ஞாலர்க்கே |
| ,, | 27 | அம்புயத்தரை | அம்புயத்தறை |
| 79 | 22 | கோடையாய் | கொடையாய் |
| ,, | 26 | வனைந்துலகுங் | அனைத்துலகுங் |
| ,, | 32 | உரைபொருந்தப் | உயிர்பொருந்தப் |
| 80 | 3 | நிலத்தவன் | நிறத்தவன் |
| ,, | 37 | நிதிகன் | நிதிகள் |
| 81 | 11 | வேடன்வாய் | வேடன்வாயம்பு |
| ,, | 29 | தரணீ | தரணி |
| ,, | 36 | மொழியாய்க் | மொழியாய் |

82 19-ஆம் பாட்டில் இரண்டாம் அடியை மூன்றும் அடியாகவும் மூன்றும் அடியை இரண்டாம் அடியாகவும் மாற்றிக் கொள்க.

| | | | |
|---|---|---|---|
| ,, | 22 | சேவடிராமன் | சேவடியிராமன் |
| ,, | 24 | வீற்றிருந்தார் | வீற்றிருந்தான் |
| 83 | 31 | நீர்கேட்டு | நீர்கேட்ட |

| | | | |
|---|---|---|---|
| ,, | 36 | வாழ்க்கை | வாழ்கை |
| 84 | 7 | என்பதி உம்பதி | என்பழி உம்பழி |
| 85 | 15 | நதியினைக்குருகிக் | நதியினைக்குறுகிக் |
| 86 | 18 | நின்றவன் | நின்றவண |
| 87 | 5 | மறைந்து | மறைத்து |
| ,, | 13 | சிரிப்பார்களோ | சிரிப்பர்களோ |
| 89 | 30 | புக்கத்தார் | புக்ககத்தார் |
| 91 | 5 | தீவழிஒழுகும் | அதன்வழி ஒழுகும் |
| ,, | 18 | என்ருள் | என்ருன் |
| 92 | 5 | மக்கோவைப் | அக்கோவைப் |
| ,, | 26 | கொண் செய்கின்ற | கொண்டு செய்கின்ற |
| ,, | 37 | தீக்கிதற் | தீக்ஷிதன் |
| 93 | 31 | அன்னிமி | அந்நிமி |
| ,, | 32 | உணர்த்தி | உரைத்தி |
| 94 | 1 | அன்னிமி | அந்நிமி |
| ,, | 11 | புறத்து | புறத்துத் |
| ,, | 29 | யாதிக்குத் | யயாதிக்கு |
| 95 | 34 | வந்தடிவீழ் | வந்துவீழ் |
| 96 | 15 | மூப்பை | மூப்பைக் |
| 97 | 9 | பெறுமுன்பு | பேறுமுன்பு |
| 98 | 30 | ஏவிப் | ஏவி |
| 100 | 4 | விளம்பலுருர் | விளம்பலுற்ருர் |
| ,, | 22 | வரனுடைய | அரணுடைய |
| ,, | 26 | கைப்ப | தைப்பப் |
| ,, | 35 | நினைத்துபார்த்து | நினைந்துபார்க்கு |
| 101 | 18 | உயிருக்கும் | உயிர்க்கும் |
| ,, | 19 | என்உயிர்க் | என் உயிருக் |
| 102 | 10 | வீசிக் | வீசக் |
| ,, | 29 | சூலம்என | ஆலம் என |
| 103 | 4 | வந்தநந்தத்திருநந்த | வந்திருந்ததந்தத் |
| ,, | 9 | இலங்கும்ராமன்னகரு | இலங்குமராமன்னகர்க்கு |
| 104 | 30 | தழுக் நானே | தழும்நானே |
| 106 | 11 | பொதுதன்மம் | பொதுத்தன்மம் |
| ,, | 19 | தலைகீக்காய்க் | தலைகீழாய்க் |
| ,, | 20 | சாத்திரத்திரத்திற் | சாததிரத்திற் |
| ,, | 25 | நீபோய் | நீபோய்த் |
| ,, | 27 | கஞ்சநயனன்அக் | கஞ்சநயனக் |
| ,, | 35 | மன்னவனு | மன்னவனே |
| 107 | 15 | தலைரைஈந்தும் | தலைஈரைந்தும் |
| 108 | 5 | கிங்கம் | சிங்கம் |
| ,, | 23 | புமானத்தேரினின் | அபிமானத்தேரினின்று |
| ,, | 25 | சவத்தினை | சவத்தினைத |
| 110 | 6 | பொதும்புகலில் | பொதும்புகளில் |
| ,, | 25 | குளிப்ப | குளிப்பப் |
| ,, | 35 | தன்மர் | தன்ம |
| 112 | 7 | மந்திரவித்தோ | மந்திரவிதத்தோ |
| 120 | 4 | புறக்குடை | புறக்கொடை |
| 122 | 5 | பவுத்திரத்தர் | பவித்திரத்தர் |
| 123 | 15 | பல்லூயிர் | பல்லுயிர் |
| 128 | 16 | மைந்தற் | மைந்தர் |

| | | | |
|---|---|---|---|
| 130 | 22 | குயில்கெசி | குயில்கைகெசி |
| 132 | 27 | வானிடை | வானினிடை |
| ,, | 30 | மலர்பம்பை | மலர்ப்பம்பை |
| ,, | 34 | களேபரமெழுச் | களேபரமெழச் |
| 133 | 1 | சுக்கிரவனைத் | சுக்கிரிவனைத் |
| ,, | 7 | வந்லதின் | வந்திலன் |
| ,, | 36 | அவளர்திர் | அவர்எதிர் |
| 135 | 36 | சரம்படக் | சரம்படப்படக் |
| 138 | 1 | கோதரன் | மகோதரன் |
| ,, | 6 | என்ன | என்னப் |
| 141 | 15 | சாலேநீ | காலேநீ |
| ,, | 28 | மைந்தற் | மைந்தர் |
| 142 | 18 | தம்மைபுல்லிக் | தம்மைப்புல்லிக் |
| ,, | 34 | காப்யம் | காபயம் |
| 143 | 28 | இவ்வாறுறைசெய்ய | இவ்வாறுரைசெய்ய |
| 144 | 16 | எடுத்தியம்பினுள் | எடுத்தியம்பினுன் |
| ,, | 36 | புவிக்குறைப்பான் | புவிக்குரைப்பான் |
| 148 | 34 | அருருகன் | அருக்கன் |
| 149 | 8 | ஏதுறை | ஏதுரை |
| ,, | 12 | மறைதெரிந்த | மறைமுறைதெரிந்த |
| ,, | 35 | கணீர் | கணீர்ப் |
| 150 | 16 | தொழுபவர் | தெழுபவர் |
| 151 | 8 | யேகிற்றில்லே | இயங்கிற்றில்லே |
| ,, | 26 | செய்யக் | செய்யாக் |
| ,, | 34 | நடஞ்சேர் | நலஞ்சேர் |
| 152 | 25 | அல்லொளி | அல்லொலி |
| ,, | 26 | சொல்லொளி | சொல்லொலி |
| 153 | 14 | றிகழ்ந்தசெய | றிகந்தசெய |
| ,, | 18 | முருக்கிவிழலரிதல | முருக்கலரிதல்ல |
| ,, | 25 | காய்வனப் | கவனப் |
| 154 | 9 | மதுகைளப | மதனகளப |
| 155 | 1 | னிரையலா | னிரையகலா |
| ,, | 28 | படையாவிக் | படையேவிக் |
| 156 | 1 | கோகனமுகை | கோகனகமுகை |
| ,, | 7 | குரம்பையாப் | குரம்வையா |
| ,, | 10 | பல்லவதேசத்தும் | பல்லவதேத்தும் |
| 159 | 34 | தளையவீழ் | தளையவிழ் |
| 161 | 19 | கொளுற | கோளுற |
| 162 | 6 | தடைமுடை | தடமுடை |
| 163 | 8 | மேலினர் | மேவினர் |
| ,, | 10 | மையுறு | மையறு |
| ,, | 20 | கைகழீஇனன் | கைகழீஇயினன் |
| 167 | 12 | மண்ணிநாகம் | மணணினகம் |
| 169 | 3 | மதுரை | மதுகை |
| 170 | 26 | மெயினன் | மேயினன் |
| 171 | 16 | பொட்டேனக் | பொட்டெனக் |
| 172 | 2 | முழ்கி | முழுகி |
| ,, | 24 | அஸ்டர் | அணடர் |
| ,, | 26 | இராமவென்ரு | இராமவென்ரே |



ஆழ்வார்திருநகரி பெரியன் வெ. நா. ஸ்ரீனிவாஸய்யங்கார்
1-வது வரிசை நடுவில் இருப்பவர் 1957 டிசப்பர் 61-வது ஆண்டின்போது அன்பர்கள் பொன்னுடையணிந்து பாராட்டியது.

## ஆழ்வார்திருநகரித் திருஞானமுத்திரைக் கோவை நூல்களின்
## மதிப்புரைகளில் சில

**திருநாராயணையங்கார்ஸ்வாமி**, செந்தமிழ்ப் பத்திராசிரியர், மதுரை

தமிழிலக்கியங்களில் தலைசிறந்தவற்றுள் கம்பர் இயற்றிய இராமாவதாரமும் ஒன்று. தமிழ்நாட்டுள் யாவரும், இதன் நடையழகு, சொல்லின்பம், பொருளாழம், அணிநயம், சுவைநயம், கற்பனை, அரசியல், ஒழுக்கநெறி, அறவுரை, வீரவுரை முதலியவற்றில் ஈடுபட்டு இதனையே பெரிதும் பயில்வாராயினர். இதனைப் பழைய ஓலையேட்டுச்சுவடிகளோடு ஒப்புநோக்கி நன்கு ஆராய்ந்து பதித்து வெளியிட முயன்று வருவாருள் திரு பெரியன் ஸ்ரீநிவாசையங்காரவர்களும் ஒருவராவர். இவர் பெருங்குடிப் பிறப்பும், அருந்தமிழ்ப் பயிற்சியும், பற்றும் உடையவர். இவருக்குக் கிடைத்த ஓலைச்சுவடிகள் இருநூறு வருடங்களுக்கு முன் ஆழ்வார்திருநகரியில் இருந்த ஒரு புலவரும், பிறரும் எழுதியவை. "ஆழ்வார்திருநகரி ஏடுகள் பதிப்போர்க்கு மிகவும் உபயோகப்படத் தக்கன. பழந்தமிழ்நூல் வெளியீடுகளுள் பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு முதலிய நூற்பதிப்புக்களுக்கு ஆழ்வார் திருநகரி ஏட்டுப்பிரதிகள் மிகவும் உபயோகமாயிருந்தன" என்பது ஐயரவர்கள் எழுதிய முகவுரையால் அறிந்தது. இந்நூற் (பாலகாண்டம்) பரிசோதகரான வித்வான் ராவ் சாஹிப் ஸ்ரீ மு. இராகவையங்காரவர்கள் பரந்த ஆராய்ச்சியும் விரிந்த புலமையும் வாய்ந்தவர்கள். பல தமிழ்நூற்பதிப்புக்களைச் செவ்விதின் ஆராய்ந்து வெளியிட்டவர். இவ்வாறு தகுந்த சுவடிகளின் உதவிகொண்டு சிறந்த புலவரால் இதனைப் பரிசோதித்து வெளியிடுவித்த திரு பெரியன் ஸ்ரீநிவாசையங்காரவர்களுடைய தமிழ்ப்பணி பாராட்டத்தகும்.

**வித்வான் மு. இராகவையங்கார் அவர்கள்** *16—10—'42.*

தேவரீர் அன்புடன் அனுப்பிய அயோத்தியா காண்டப் பதிப்பின் பிரதி கிடைக்கப்பெற்றுப் பரம சந்தோஷம் அடைந்தேன். ஆதியில் சங்கல்பித்த அரிய கைங்கர்யத்தை நிறைவேற்றிவரும் தேவரீருக்கு மேன்மேலும் ஊக்கமும், சௌகரியங்களும் அமைத்துதவும்படி எம்பெருமானைப் பிரார்த்திக்கிறேன். இப்பதிப்பு அநேக சிறந்த பாடங்கள் கொண்டிருப்பது மகிழ்ச்சி தருகின்றது. தேவரீருடைய பிதிர் அபிமானமும், பாஷாபிமானமும் தமிழ் நாட்டவரால் கொண்டாடத் தக்கன. தங்கள் வெளியீட்டால கம்பராமாயணத்தின் பழைய அமைப்பும், அரிய பாடபேதங்கள் பலவும் விளங்குதலால் ஆராய்ச்சி செய்து கொள்வதற்கும் பயன்படுமென்பதில் ஐயமில்லை, ஏனைய காண்டங்களும் தங்கள் பெருமுயற்சியால் வெளிவருவதைத் தமிழ்நாடு எதிர்பார்க்கக் கூடும். மேலும் இவ் வரிய தொண்டைத் தொடர்ந்து நடத்திப் பூர்த்திபெற வைக்கும்படி தமிழ்த்தெய்வமான ஸ்ரீ ஆழ்வாரைச் சரணம் புகுகிறேன்.

**வித்வான் ரா இராகவையங்கார் ஸ்வாமி** *17—10—'42*

அண்ணமலைப் பல்கலைக் கழகம், சிதம்பரம்.

தேவரீர் கிருபை கூர்ந்துதவிய கம்பராமாயண பாலகாண்டம் எய்தப் பெற்று மகிழ் கூர்ந்தேன். முன்னைப்பிரதிகளினும் அதிகமான திருத்தங்கள் இருத்தல் கண்டு மனம் உவக்கின்றேன்.

**முதுபெருங்கவி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள், புத்தேரி** *12—7—'43*

ஆழ்வார்திருநகரி தமிழ்நாட்டின் நடுநாயகமான ஊர் என்பது அண்டை வரலாறுகளால் நன்கு தெளிவாகின்றது. ஆதிகால முதலே பங்கு தமிழ் வித்வான்கள் பலர் வாழ்ந்து வந்திருக்கின்றனர். ஆழ்வார்

திருநகரி ஏட்டுப் பிரதிகளுக்கு எங்கும் விசேஷ மதிப்பு உண்டு. அந்த ஏட்டுப் பிரதிகளைத் தாங்கள் தக்க அறிஞர்களைக் கொண்டு அழகான முறையில் வெளியிடச் செய்திருப்பது மிகவும் பாராட்டற்குரியதாம். ஒரு பழைய ஏட்டுப்பிரதியைப் பரிசோதனை செய்து யாவரும் எளிதில் கற்கும்படி நல்லமுறையில் வெளியிடுபவருக்கு ஒரு பழைய திருக்கோயிலை ஜீரணோத்தாரணம் செய்த பெரும் புண்ணியம் உண்டென்பது பெரியோர்கள கண்ட உண்மை.

**ஸ்ரீ ராவ்சாகிப் S. வையாபுரிப் பிள்ளையவர்கள், B.A., B L.,**

*தமிழ் ஆராய்ச்சித்துறைத்தலைவர். பல்கலைக்கழகம், சென்னை. 1—3—'44*

இற்றைக்குச் சுமார் 500 ஆண்டுகட்கு முன்பு தொடங்கிச் செந்தமிழன்னையைப் போற்றி தமிழ்நாட்டிற்கும இலக்கிய உலகிற்கும் அரிய தொண்டுகள் இயற்றி வந்த பெருமுது நகர்களுள் குருகூர் எனப்பெயர் பெற்ற ஆழ்வார் திருநகரி தலைசிறந்து விளங்குவதாகும். இங்குச்செழித்த ஆராய்ச்சித்துறையாளர்களின் நன்முயற்சியின் மூலமாகவே பண்டைத் தமிழ் இலக்கியங்கள் பலவும் நமக்குக் கிடைத்திருக்கின்றன. டாக்டர் உ. வே. சாமிநாதையர் மஹாவித்வான் ரா. இராகவையங்கார் முதலியோர்களுக்குப் பண்டைத்தமிழ்க் கருவூலங்கள் அகப்பட்ட புண்ணிய ஸ்தலம் இதுவேயாகும். சுமார் ஐம்பது ஆண்டுகட்கு முன்பு வரை இந்நகரினர் குன்றாத ஊக்கங்கொண்டு தமிழ் கற்றுத் தமிழ்க் கருவூலங்களைப் பேணி வந்தனர். தமிழ் இலக்கிய சரித்திரம் எழுதப்புகுவார் இத்திருப்பதியின் இலக்கியவாழ்க்கையை மறந்துவிட முடியாது.

எனவே இப்பிரதேசத்திலுள்ள பிரதிகள் வித்வப்பரம்பரையினருள் ஒருசாரரால் மரபுநெறி வழுவாது எழுதப்பட்டனவாம். இவற்றுள் எல்லாம் தலைசிறந்தவை ஆழ்வார்திருநகரிப் பிரதிகளேயாகும். ஆகவே, அந்த தேசத்துப் பிரதிகளை தாங்கள் பயன்படுத்தி வெளியிட்டிருக்கும் இக்கம்பராமாயணப்பதிப்பு மிகவும பயன்படத் தக்கது என்று உறுதியாகக் கூறுவேன்.

**ஸ்ரீ கி. வா. ஜகன்னாதன், B. O. L, "கலைமகள்" ஆசிரியர், சென்னை.**

குலத்தினால்பெரியன்குணத்தினால்பெரியன்கொழிதமிழ் வளத்தினால் பெரியன்
நலத்தினால் பெரியன் அன்பினால் பெரியன் நாயகன் இராகவன்தாளில்
பலத்தநல்பத்தி பழுத்ததண்மனத்துப் பண்பினால்பெரியன் சீர்க்குருகூர்
நிலத்தினில் மாறன் அடிக்குடியாகும் நிறைவினால் பெரியனும்இயல்போய்!

தேனின் வாசத்தால் பெரியமா மகிழின் திரு அலங் கல் புனை ஆழ்வார்
மானநல் அடிக்கு எத்தமிழ்ப் பிரபந்தம் வையகத் திருப்பினும் அதனை
ஆனநல் அன்போடு அச்சினில் பதிக்கும் ஆர்வ மீக்கொளப் பலநூலை
வானமா மழை என்றேதரும் பெரிய வள்ளலே மற்றிது காண்க.

செந்தமிழ்நூல்கள் செவ்விதில் அச்சில் திகழ்தர வேண்டும்என்றெண்ணி
இந்தமா நிலத்தில் யார் இதை ஆற்ற ஏற்றவர் என்பதும் நினைந்து
சொந்தஆற்றலினால் பொருளினால் தொண்டினால் திறம்பட அவற்றைச்
சந்தமார்தரவே விளக்கும்நின்இயல்பு தரணியில் எவர்செய விழைவார்.

**ஸ்ரீ K. சுப்பாராவ், ஆசிரியர், கும்பகோணம்**

ஆழ்வார்திருநகரிப் பிரதியில்அநேகசிறந்தபாடங்கள் கிடைத்தன என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறேன். குறிப்பாக ஆரண்யகாண்டப் பாடங்கள் ஒரு பெரும்நிதிபோல் அமைந்துள்ளன. என்போன்ற கம்பன் கலைப்பித்தருக்கு இவை ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. தாங்கள் மேற்கொண்ட இவ்வுத்தம கைங்கர்யத்தின் பெருமை வருங்காலத்தில் சிறந்து விளங்கும் என்பதில் ஐயமில்லை. ஆழ்வார் அருளால் கிஷ்கிந்தா காண்டமும், ஏனைய காண்டங்களும் விரைவில் அச்சில் ஏறுமென நம்புகிறேன்.

**ஸ்ரீ இராமகிருஷ்ண விஜயம் சர்வதாரி ௵ ஆனி மீ**

கற்றூர் விரும்பும் காவியம் ஆக்குவதில் காளிதாசனும் மேலைநாட்டு மில்டனும் கைதேர்ந்தவராவர். நாட்டார் நயக்கும் நாடக நன்னூல் இயற்றுவதில் செகப்பிரியர்(Shakespeare)சிறந்தவராவார். இம்மூவரும் ஒருவராய் உருவெடுத்த இயல்புடையார் கல்வியிற் பெரிய கம்பராவர். கலைஞனின் கருத்தினை அவன் நிலையில் நின்று உண்மைக் கவிதையின் உருவை அறிய அந்நூலைப் பதிப்பிக்கும் அறிஞராவார் பலர் முயன்று வருகின்றனர். அத்தகைய பதிப்புகளில் இதுவும் ஒன்றாகும். ஏனைய பதிப்புக்கள் பலவற்றினும் இதன்பால் சிறந்த இயல்புகள் சில காணப் படுகின்றன. பொருத்தமான பாடங்கள் அமைந்து பொலிகின்றன.

**வாணிதாஸன் கூறியவை**

மால் ஊட்டும் பிறவிஎனும் பெருங்கடலைக் கடந்து உயிர்கள் மாலைச்சேரப்
பால்ஊட்டும் பசுந்தமிழில் பரமகுரு வகுளம் ஒளிர் பகவான் ஏற்கும்
தாலாட்டின் சுவைஅறிந்து மனம்உருக அச்சேற்றித் தரணிக்கு ஈந்த
கோலோட்டும் பெரியன் எனும் மரபுஉதித்த கோதில்குணக் கொழுந்து நீயே.
மயக்குறு மாமறை மாசு நீங்கிடக் கயக்கறு போதம் கனிந்து தெளிய
கோதில் கனிஎனக் குணபரன் தன்னைத், தீதில் திருவாய் மொழியினில் திரட்டிய
பகவன்பெரியன் பராங்குசன் சரிதம். தகையுறு நெஞ்சம் தழைக்க அருளிய
தேவேச பாரதித் தெருளோன் பெயரை, நாவீ றனதன் நற்புகழ் தன்னுல,
உலகுக்குஅளித்த ஒருபெருங்குணத்தோய், நிலவும்செல்வம் நீடிசைக் குலத்துப்
பெரியன் ஸ்ரீநிவாஸப் பெரியோய் அரிது நின்செயல் அனைத்தும் ஓங்குக,
கைம்மாறு எவன்செயக் கருதுவன் வாழி, அம்மா பெரிநுன் அன்பின் திறனே.

**24—9—'65 தென்திருப்பேரை அபிநவ காளமேகம் ஸ்ரீ அநந்த கிருஷ்ணையங்கார் ஸ்வாமி**

சேடனும் புலவர் கோன்முன் செய்பராங் குசன்தன் காதை
நாடகச் சுதையுட் கொண்டே நல்அறி வாளர் யாரும்
ஏடவிழ் வகுளத் தாரான இன்னருட்கு இலக்காய் வாழ்வான்
பீடமை சிநி வாசப் பெரியனே வெளியிட் டானே.

**N. R. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் அவர்கள்**

*அட்வகேட், மதுரை 17—5—1951*

தேவரீர் அடியேனுக்கு கொடுத்துதவிய கம்பராமாயணம் 4 காண் டங்களையும் படித்துப் பார்த்தேன். படலங்களின் பெயர் அமைப்புகள் மிகப் பொருத்தமாகவும், அந்தந்த விஷயத்துக்கு ஏற்றதாகவும் இருக் கின்றன. ஆங்காங்குள்ள பாட வேறுபாடுகளும் சில பொருத்தமாக வும் சுவைமிகுந்த பொருள் தருவனவாகவும அமைந்துள்ளன. சில பாடங்கள் வலிந்து பொருள் கொள்ள வேண்டியவையாயிருக்கின்றன.

கம்பர் காலத்துக்குப் பின் அவர் இயற்றிய பெருங் காவியமாகிய இராமாவதாரம் ஒர்மையோடும் ஆர்வத்தோடும் காப்பாற்றிக் கற்கப் பெற்ற இடங்களுள், ஆழ்வார்திருநகரி தலைசிறந்த கல்விக்கூடமாகும். அதன்கண் விளங்கிய பெரும் புலவர்கள் கற்றுத் தேர்ந்த சுவடிப் பிரதியை அதிற் கண்டவாறு புத்தகமாய் அச்சேற்றி உதவியது தமிழ்க் கல்விக்கும், தமிழ் நாட்டுக்கும் தேவரீர் செய்த பெருந்தொண்டாகும். இக்ஷ்வாகு வம்சத்தை ராமன் தன்குலம் ஆக்கிக் கொண்டான் என்று ஹனுமான் முடிவு கட்டியதுபோல தேவரீர் வயசத்தில் தேவரீர் பெரியன் ஸ்ரீநிவாசையங்கார் குலமாக ஆக்கிக் கொண்டு விட்டீர்கள். நம்மாழ்வார் தாலாட்டு முதலானவை அடங்கிய ஸம்புடமும், நம்மாழ் வார் பிள்ளைத் தமிழ் முதலிய நூல்கள் அடங்கிய மற்ற ஸம்புடமும்

படிக்கப் படிக்க இன்பம் தருவனவாயும், தெவிட்டாக் கனிகளாயும் அமைந்து பண்டித பாமர சாமான்யமாய் எல்லோருக்கும் இன்பம் தருவனவாய் அமைந்திருப்பது இவைகளின் மிகவும் குறிப்பிடத்தக்க பெருமையாகும்.

*(14—4—'48)* Sri Jagadacharya Simhasanadhi Pathi
P. B. Annangara Chariyar Editor Granthamala Congeevaram

ஸ்ரீ மான். உ. வே. பெரியன் ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமிஸன்னதியில்' அடியேன் செய்யும் விஜ்ஞாபனம்.

பரமகிருபையுடன் தெந்திருப்பேரை ஸ்வாமி மூலமாக அனுப்பித் தந்த மூன்று புத்தகங்களும் திருமுகமும் சென்னிக்கு அணியாயின. உலகுக்கு இது மிகப்பெரியதொண்டு. உள்ளடங்காத மகிழ்ச்சியே அடியேற்கு. தேவரீர் எடுத்துக்கொண்ட கைங்கர்யத்திற்குப்பல மடாதிபதிகள் கைகொடுக்க முன்வருவார்கள். எளிதாக நிறைவேறக் கூடியது. இவ்வளவே விஞ்ஞாபித்துநிற்கின்றேன், க்ஷமித்தருளவேணும். தாஸன்.

அண்ணாமலை பல்கலைக் கழகத்துத் தமிழாராய்ச்சித்துறை
**விரிவுரையாளர் திரு. கி. இராமாநுஜய்யங்கார்**

கம்பன் எனுமக் கலைக்கடல்முன் கருணைக் கடலென்று உலகுதொழும்
நம்பி புகழால் இராமவ தார நூலாம் நல்லமுதம்
இம்பர் அறிஞர் பருகிடுமாறீந்ததன்சீர் எடுத்து இயம்பல்
கும்ப முனிக்கும் அறிதென்றால் யாரேகூற வல்லாரே.
மற்றந்நூலில் வரைவோரால் மகிழ்ந்து கற்போ ரால்பிறரால் உற்றவேறு
பாடுபல அவற்றுள் கம்பன் உரையிது என்று
இவற்றை நாளில் அறிதல்அரிது இந்தநிலையில் எழில் குருகூர்க்
கற்ற பெரியோன் எழுதி வைத்த இந்நூற்சுவடி கண்டுஉவந்து.
சீரார் தமிழ்நாட்டு ஆங்காங்குத் திகழும் பலஊர்ச் சுவடிகளுள்
ஏரார்குருகூர்ச் சுவடிகளே தமிழ்மாமக்கட்கு எழில் அணியாய்
பாரோர் புகழும் பழந்தமிழ்நூல் பலவும் பதித்துத் தந்தபெரும்
பேராசிரியர் பெருமதிப்புப் பெற்றபெற்றி பெரிது உணர்ந்து
தொகுத்துக் கற்றுத் துறைபோய தூயபுலவர் துணைகொண்டு
வகுத்தங்கு அவறறுள் தான்கண்ட வண்ணம் பிழைகள் மலியாது,
நுகத்துப் பகல்போல் நடுநின்று நோக்கும் அறிஞர் பலர்மதிக்க,
மிகுத்தவெண்பொன் செலவிட்டு விரைந்தச்சிட்டு விழைந்தளித்தான்.
வெறியார் சோலைக் குருகூர்வாழ் வெ. நா. ஸ்ரீநிவாசன்என,
நெறிதேர் புலவர் பாராட்ட நின்றுன் வாழி நீடுழி.

R. P. SETHU PILLAI
Professor of Tamil, University of Madras, *8—10—'54*

தமிழ்நாடு பெற்றுள்ள தனிப்பெருங் கலைச்செல்வங்களுள் தலை சிறந்தது கம்பராமாயணம். கவிதைக்கொரு புலவன் கம்பன் என்பது நாடறிந்த உண்மை. ஆயினும் நெடுங்காலமாக நல்லதொரு கம்பராமாயணப் பதிப்பு இல்லாதது பெருங்குறையே. அக்குறையை அகற்ற வந்துள்ளது ஆழ்வார்திருநகரிப் பதிப்பு. நம்மாழ்வார் பிறந்தருளும் பேறுபெற்ற திருநகரில் கம்பர் காவியத்தைப் பொன்னேபோல் போற்றும் பெருமை சான்ற புலமைக் குலத்திலே தோன்றிய, பெரியன் ஸ்ரீநிவாஸையங்கார் அவர்கள் பதிப்பித்துள்ள கம்பராமாயணத்தைக் கற்றறிந்தோர் உளங்கனிந்து பாராட்டுவர்.

## Copy of The Proceedings of The Director of Public Instruction Madras,

*Dis. No. 2711/54 Dated 13-5-54.*

Sub: Books and Publications 3 volumes of Kambaramayanam and 2 other books on Nammalwar by Perian V. N. Srini vasa Iyengar of Alwartirunagari Tinnevelly District brought to notice.

The books mentioned below are commended for use in the libraries attached to schools, Colleges and in Public libraries.

Volumes of Kambaramayanam (Nos. 357, 358 & 359)

| | |
|---|---|
| Bala Ayodhya Aranya Kandangal | Rs. 8—0—0 |
| Kishkinda Sundara Kandangal | Rs. 6—0—0 |
| Yudha Kandam | Rs. 10—0—0 |

Nammalwar 2 volumes of Thirugnana Mudiri Kovai (Nos 306 & 361)

| | |
|---|---|
| Nammalwar Thalattu & 5 others | Rs. 5—0—0 |
| Nammalwar Pillaithamil & 3 others | Rs. 3—8—0 |

By Perian V. N, Srinivasa Iyengar

Copies can be had from Perian V. N. Srinivasan, Alwartirunagari Tinnevelly Dt.

K. R MANICKAM.
For Director of Public Instruction.

Copy forward to

The Divisional Inspectors of Schools, D. E. Os. (Secretary, Local authorities) and Special Officer for Eduction Puduk kotai. The Inspectresses of Girls Schools, The Inspector of Oriental Schools Madras, The Inspector of Anglo Indian Schools Madras, The Principals of all Colleges and copy to Perian V.N. Srinivasa Iyengar.

## Copy of The Proceedings of The Commissioner H. R. & E. C. E. (Adm) Department, Madras - 2.

*No. L. Dis. 28933/54 Dated 8-10-54.*

Sub:- Work from original manuscript-encouragement of.

Ref:- From Perian V. N. Srinivasan. Alwartirunagari Tinnevelly Dt, letter date Nil

Sri V. N. Perian Srinivasan residing at Alwartirunagari Tinnevelly Dt, has published (1) Kambaramayanam Kandam 1-6 (2) Six works of Nammalwar and (3) four prabandhams on Nammalwar. These publications are of great value and edited after consulting valuable and old manuscripts treasured at Alwartirunagari. The trustees of religious Institutions having libraries are advised to purchase these books for maintenance in the Devasthanam libraries.

(Sd) S. V. RAJAM,
For- Commissioner,
8—10—54.

To.

All Religious institutions having libraries as per list.
. All A. C's and Dy Cs 3. Perian V. N. Srinivasan Avl.

தமிழறிஞர் பலர்களாலும் தினசரி மாதப் பத்திரிகைகளாலும் பாராட்டிவருகிற

**ஆழ்வார்திருநகரி சுவடிகளினின்று பதிப்பித்தவை.** ரூ. பை.

| | | |
|---|---|---|
| 1 | நம்மாழ்வார் நூற்றெட்டுத் திருப்பதிதாலாட்டு | 1-00 |
| 2 | ஸ்ரீ சடகோபன் சந்திரகலா மாலை | 0-12 |
| 3 | ஸ்ரீ சடகோபன் திவ்ய சரித்திரம் (17 படலங்கள் 1200 கவிகளில் தேவராஜ பாரதி இயற்றியது) | 2-00 |
| 4 | திவ்யபரந்த பாசுரப்படி இராமாயணம் (இலவசம்) | |
| 5 | தேவர்பிரான் சந்திரகலாமாலை | 0–12 |
| 6 | நம்மாழ்வார் பிள்ளைத்தமிழ் | 1–25 |
| 7 | திருக்குருகூர் மகிழ்மாறன் | 0-50 |
| 8 | குருகூர்ப்பள்ளு (சிவகங்கை இராமாநுஜையங்கார் ஸ்வாமி விமரிசனத்துடன்) | 1-50 |
| 9 | முதலாழ்வார்கள் பெரியாழ்வார் வைபவங்கள் அழகியநம்பிதாஸர் இயற்றியது | 1-00 |
| 10 | தெந்திருப்பேரை திருக்கோளூர் திருப்பணிமாலை | 1-00 |
| 11 | திருவைகுந்தநாதன் பிள்ளைத் தமிழ் | 1-50 |
| 12 | கம்பராமாயணம் பாலகாண்டம் ஏழு படலங்கள் (வையாபுரிப் பிள்ளை அப்புசாமிஅய்யர் பரிசோதித்தது) | 1–25 |
| 13 | தெய்வச்சிலையார் விறலிவிடு தூது (வையாபுரிப்பிள்ளை சோதித்தது) | 1-25 |
| 14 | கம்பராமாயணம் பாலகாண்டம் (ஆழ்வார்திருநகரிச் சுவடிகளின்படி) | 3–50 |
| 15 | ஷை திரு. அயோத்தியா காண்டம் ,, | 3-50 |
| 16 | ஷை ஆரண்யகாண்டம் ,, | 3–50 |
| 17 | ஸ்ரீபராங்குச நாடகம் (சேஷகவியால்) ,, | 1–25 |
| 18 | கம்பராமாயணம் கிட்கந்தா காண்டம் (சுவடிப்படி) | 3–00 |
| 19 | நவதிருப்பதி மகாத்மியம் குருகூர் திருப்புளியங்குடி வடமொழியிலுள்ள தாம்ப்ரவர்னி மகாத்மியம் அச்சில் | |
| 20 | கம்பராமாயணம் சுந்தரகாண்டம் | 3–50 |
| 21 | திருக்கூர் திருப்பணி மாலை அச்சில் | 00 |
| 22 | கம்பராமாயணம் யுத்தகாண்டம் | 10-00 |
| 23 | திருச்சிறுபுலியூர் உலா குறிப்புரையுடன் | 1-50 |
| 24 | குருகைமாலை T.K. இராமாநுஜையங்கார் ஸ்வாமி | 1-50 |
| 25 | சுவாமி திருவேங்கடமுடையான் பிள்ளைத்திருநாமம் ,, | 1-50 |
| 26 | அழகர் குறவஞ்சி கவி குஞ்சரபாரதி இயற்றியது | 1-50 |
| 27 | நம்மாழ்வார் திருநாமங்கள் | 1-00 |
| 28 | அனுமார் பிள்ளைத்தமிழ் அருணாசலக்கவிராயரால் ,, | 1–00 |
| 29 | உத்தரகாண்டம் கம்பராமாயணம் T. K. இராமாநுஜையங்கார் ஸ்வாமி முன்னுரையுடன் | 3–50 |
| 30 | திருப்புல்வாணி நொண்டி நாடகம் வீர ராகவையங்கார் இயற்றியது. ,, ,, | 1-25 |
| 31 | (ஸ்ரீவில்லிபுத்தூர்) திருமலைக் குறவஞ்சி முத்துக்குமாறுப் புலவர் இயற்றியது ,, ,, | 1-50 |
| 32 | திருக்குறுங்குடிப் பிள்ளைத்தமிழ் ,, ,, | 1-50 |
| 33 | நித்தியபாராயண மலர் | 0–50 |
| 34 | முமுக்ஷுப்படி | 0-65 |

**பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாசன் பதிப்பாசிரியன்**

**திருஞானமுத்தரைப் பிரசுராலயம், ஆழ்வார்திருநகரி.**